# சிந்தனை தொழில் செல்வம்

டாக்டர் எம்.எஸ்.உதயமூர்த்தி



வானதி பதிப்பகம்

# சிந்தனை, தொழில், செல்வம்

டாக்டர் எம். எஸ். உதயமூர்த்தி



வானதி பதிப்பகம்
13, தீனதயாளு தெரு
தி.நகர், சென்னை-17.

# முன்னுரை

நண்பர்களே!

உள்ளே வாருங்கள்.

உங்களை அகமலர்ந்து அழைக்கிறேன்.

புதிய சிந்தனைகள் இங்கே காத்திருக்கின்றன. தொழில் வாய்ப்புக்கள் ஏராளமாக இருக்கின்றன. செல்வம் பெறுவதற்கான வழிகள், வலிமை பெறுவதற்கான மார்க்கங்கள் உங்கள் கண் பார்வைக்காகக் காத்திருக்கின்றன.

இது ஒரு நிழல் தரும் மண்டபம்; 'காணி நிலத்தருகே ஒரு மாளிகை கட்டித் தர வேண்டும்' என்று பாடினரே பாரதி, அத்தகையதோர் மாளிகை.

இங்கே இனிமையான நிழல்; குளுமையான காற்று; மனத்தை உற்சாகப்படுத்தும் சூழ்நிலை; துடிப்பை வாரி இறைக்கும் உதயப் பேரொளி.

உங்களைப் போன்றவர்கள் எத்தனை பேர், எத்தனை பேர், இந்த மண்டபத்தில் தங்கி—இத்தகையதோர் கருத்துக்களில் தோய்ந்து—புது உற்சாகம் பெற்று, லட்சியம் பெற்று, ஆதரவு பெற்று, மேலே செல்வதைப் பார்க்கின்றேன்.

இதோ ஒரு நீர்ச்சுனை.

மூளையைத் தொடும் குளிர்ச்சி; தாகத்தைத் தீர்க்கும் நிறைவு.

இங்கே தண்ணீர் அருந்தியதும், நிழலையும் நீரையும், ஒளியையும் காற்றையும் படைத்த ஆண்டவனை நோக்கி ஒரு கணம் கைகூப்புகிறீர்கள். நீங்கள் கையிலெடுத்து வாசிக்கும் இந்த நூல் ஒரு எண்ணக்கோயில்; காணி நிலத்து மாளிகை இதன் மூலம் நிழல் தர, நீர் தர, உற்சாகம் தர, பாதை காட்ட முயன்றிருக்கிறேன்.

வாருங்கள், மேலே நடக்கலாம்.

இதற்குப்பின் பரந்து கிடக்கிறது பூமி.

கண்ணுக் கெட்டிய தூரம் வரை மண். தரிசு நிலம்.

இன்று இங்கே ஒன்றுமில்லை; பயிரில்லை, செடியில்லை, உயிரில்லை. ஆனால் நீங்கள் நாளை இங்கே உருவாக்கப் போகிறீர்கள்; பசுஞ்சோலையை, காய்கறித்தோட்டத்தை, மாந்தோப்பை, நெல் வயலை, மலர்ப் பூங்காவை. தரிசு நிலத்தைப் பொன் விளையும் பூமியாக நீங்கள் மாற்றப் போகிறீர்கள்.

இந்தப் பூமியைப் பாருங்கள். மண்ணை முகருங்கள். மண்ணின் கனத்தை, நிறத்தை, தன்மையை உணருங்கள். அத்துடன் ஒன்றுகுங்கள். இந்த மண்தான் ஜீவாதாரம்.

இந்தப் பரந்த மண்வெளிப் பிரதேசம்தான் வெளி உலகம். நிழல் தந்து, நீர் தந்து இங்கே உங்களிடம் விடை பெறுவதுதான் என் நோக்கம்.

எண்ணிப் பாருங்கள், இந்த மண்ணை வைத்துக் கொண்டுதான் எத்தனை ஜால வித்தைகள் செய்யலாம்! செய்திருக்கிறார்கள்!

மண்ணிலிருந்து ஒரு கலைஞன் பொம்மை செய்கிறான்.

உழைப்பாளி பானை செய்கிறான்.

ஒரு விஞ்ஞானி, ஒரு குறிப்பிட்ட செடி இனத்தை வளர்க்கும் பொருளை இம்மண்ணிலிருந்து பிரித்தெடுக் கிறான்.

மற்றொருவன், மண்ணில் அணுவையும் அணுவி லிருந்து சக்தியையும் வழங்குகிறான்.

மண்ணைத் தோண்டுகிறான் விவசாயி; நீர் குபுகுபு வென்று சுனையாகப் பெருக்கெடுத்தோடுகிறது. நெல்வயல் காட்சி தருகிறது.

அடாடா!

இம்மண்ணிலே, பொம்மை இருக்கிறதென்று எப்படிக் கலைஞன் கண்டு பிடித்தான்? இந்த மண்ணிலே ஒரு பானை ஒளிந்து கொண்டிருக்கிறது என்று எப்படி முதற் குயவன் கண்டு பிடித்தான்? இந்த மண்ணிலே நீர்ச்சுனை இருக்கிற தென்று எப்படி விவசாயிக்குத் தெரிந்தது?

''அடடாவோ அடடா!'' ஈதென்ன விந்தை? ஆம்! இவர்கள் கலைஞர்கள்; ஆக்க சக்தி படைத்தவர்கள்.

தேவையை ஆசையாக்கும்போது,<br>
ஆசையை லட்சியமாக்கும்போது,<br>
லட்சியத்துடன் மன உறுதியையும்<br>
அயராத உழைப்பையும் சேர்க்கும்போது,<br>
தோல்வியைக் கண்டு மனம் கலங்காமல்<br>
மேலே போய்க் கொண்டிருக்கும்போது,<br>
நம் எண்ண விதை,<br>
செடியாகிப் பூவாகிக் காயாகிக் கனியாகி—<br>
லட்சோபலட்சம் கனிகளாக வானத்திலிருந்து<br>
நம் மடியில் உதிர்கின்றன.

இதை நாமும் ரசிக்கிறோம்; அனுபவிக்கிறோம்; உற்றார் சுற்றத்தினருக்கும், ஊர் உலகிற்கும் வாரி வழங்குகிறோம்.

அந்தச் செயல்,<br>
அந்த ஆக்க சக்தி,<br>
அந்த அசாதாரண தெய்வீகம்

நம் எல்லோருள்ளும் இருக்கிறது. கண்களை அகலவிட்டால் போதும்; காணலாம். அன்பை மலர விட்டால் போதும்; எல்லோரும் உதவுவார்கள். துணிவுடன் செயல் பட்டால் போதும்; பலன் கிடைக்கும்.

நண்பர்களே, இவ்வுலகில் முடியாதது ஒன்றுமில்லை. மனிதன் பிறந்த நாளிலிருந்து அவன் சாதித்திருக்கும் அற்புதங்களை—அற்புத சாதனைகளை—ஒருகணம் எண்ணிப் பாருங்கள்.

இதோ தஞ்சைப் பெரிய கோயில். ராஜராஜன் காலத் திற்கு முன்னால் உங்களை வைத்துக் கொள்ளுங்கள். உங்க

ளிடம் இப்படி ஒரு கோயிலைக் கட்டலாம் என்று யாரேனும் கூறி இருந்தால் என்ன கூறி இருப்பீர்கள்?

முப்பதாண்டுகளுக்கு முன், குழந்தையைச் சீராட்டி, நிலாவைக் காட்டி, அமுதூட்டிய தாயின் நிலையில் உங்களை வைத்துக்கொள்ளுங்கள். உங்களிடம் யாராவது சந்திரனைப் போய்ப் பிடிக்கலாம், அதன்மீது நடக்கலாம் என்று சொல்லி இருந்தால் என்ன சொல்லி இருப்பீர்கள்?

நண்பர்களே, நம்புங்கள் மனம் ஆக்க சக்தி படைத்தது. நினைத்ததைச் சாதிக்கும் வல்லமை படைத்தது.

''ஆசை பிறக்கும்போதே, அதைச் செய்து முடிக்கும் திறனும் அந்த ஜீவனுக்குள் அடங்கி இருப்பதால்தான் அந்த ஆசையே பிறந்தது'' என்கிறார் ஜேம்ஸ் ஆலன்.

''உங்கள் ஆசையையும் லட்சியத்தையும்,—உங்கள் கண்களுடன் மற்றொருவர் பார்க்கும்போது—பார்த்துப் பாராட்டி ஊக்கமும் உற்சாகமும் தரும்போது—அந்த எண்ணம் அதை அடையும் மகத்தான வலிமை பெறுகிறது'' என்கிறார் ஆன்மீக எழுத்தாளர் பிளாரென்ஸ் ஷின்.

''திரும்பத் திரும்ப எண்ணப்படும் ஆசை, ஆழ்மனத்தில் புகுந்து நம்மையறியாமல் நம்மையே ஆட்டுவிக்கிறது; செயல்படத் தூண்டுகிறது. நம் லட்சியம் கைகூடுகிறது'' என்கிறார்கள் ஆழ்மனம் பற்றி எழுதும் மனநூல் அறிஞர்கள்.

''நாதப் பிரம்மத்தில் தன்னை மறக்கும் பாடகன் போல் நமது லட்சியத்தில் நம் மனத்தை ஒருமுகப்படுத்தும் போது, அங்கே, நாம் மறைகிறோம். அங்கே எண்ண சக்தி பிரபஞ்ச சக்தியுடன் ஐக்கியமாகிறது. அப்போது பிரபஞ்ச சக்தி நம் கற்பனை மூலம் இப்பூமிக்குள் இறங்கி உருவெடுக்கிறது. நம்பமுடியாத சாதனைகளும், அதிசயங்களும் நிகழ்கின்றன'' என்று ஞானிகள் விளக்கம் தருகிறார்கள்.

எண்ணத்தின் பாதை இதுதான்; சாதனையின் வழி முறை இதுதான். இதை நினைவில்கொண்டுசெயல்படுங்கள்.

இவ்வுலகில் உங்களுக்கும், எனக்கும், ஊருக்கும், உலகிற்குமாக ஏராளமான பொருட்கள் இருக்கின்றன. நாம் எத்தனை பேர் பங்குபோட்டுக்கொண்டாலும் தீராத அளவுக்கு இப்பிரபஞ்சம் பொருட்களைப் பெற்றிருக்கிறது; அது நம் எல்லோருக்குமாக இருக்கிறது. இது பிரபஞ்சம். பஞ்சமே இல்லாத பிரபஞ்சம்.

ஆகவே கையகல நிலம்தானே இருக்கிறது என்று கவலைப்படாதீர்கள். ஏனெனில் கையகல நிலத்தை வைத்துக் கொண்டு, கழுத்துக்கு மேல் அனுபவித்துக்கொண்டிருக்கிறார்கள் ஜப்பானியர்கள். 'கையில் காசில்லையே' என்று கவலைப்படாதீர்கள். காசையும் பணத்தையும், தங்கத்தையும் வைரத்தையும், நெல்லையும் கோதுமையையும், பல வருஷங்களுக்குப் போதுமானதாக எடுத்துக் கொண்டு அமெரிக்காவில் வெள்ளையர்கள் குடியேறவில்லை.

நம்முள் ஒரு மகத்தான ஜீவன் இருக்கிறது.

அது வாழத் துடிக்கிறது.

எதையும் சமாளிக்க முயல்கிறது.

எல்லாவற்றையும் அனுபவிக்க ஆசைப்படுகிறது.

புதுப்புது விஷயங்களைத் தெரிந்துகொள்ள அவாவுகிறது.

இதுதான் இந்த ஜீவனின் இயல்புகள். இதைப் பல தரம் படித்து நினைவில் நிறுத்திக்கொள்ளுங்கள். ஏனெனில் அத்தகையதோர் ஜீவன் நம்முள் இருக்கும்போது நம்மால் சமாளிக்க முடியுமா என்ற சந்தேகம் வேண்டியதில்லை.

'பிளாஸ்டிக் சர்ஜனாக 'வாழ்வைத் துவங்கி, மனஇயல் அறிந்த அறிஞராகி, உலகிற்குத் தன் அனுபவ அறிவை வழங்கிய மேக்ஸ்வெல் மாட்ஸ் எழுதுகிறார்:

''லட்சியத்தை நோக்கி நம்மை அழைத்துச் செல்லும் ஒரு பொறி—ஒரு யந்திரம்தான்—மனம். தன் பாதையைத் தானே சரிப்படுத்திக் கொள்ளும் யந்திரம் அது. அப்படிப் பட்ட யந்திரம்தான் மனம்'' என்று எழுதுகிறார்.

(யந்திரம் என்னும்போது கார் இன்ஜினேயோ, மாவு அரைக்கும் யந்திரம் போன்றதையோ நினைத்துக்கொள் ளாதீர்கள். நமது ஊர் மந்திரவாதிகள், சில யோகிகள், 'யந்திரம்' என்று செப்புத்தகட்டில் சில கோணங்கள் வரைந்து நமது இஷ்டதேவதைகளை உருவகப்படுத்துவார் களே அதைப்போன்று ஒரு சூட்சமம்தான் இது. இந்த மன சூட்சுமத்தைத்தான் 'யந்திரம்' என்கிறார் மாட்ஸ்)

நமது மனம் எதையும் உருவாக்கும் 'சூட்சு'மத்தைப் பெற்றிருக்கிறது. அதேபோல எல்லாவகை இன்பங்களையும் துய்ப்பதற்குத்தான் மனம் படைக்கப்பட்டிருக்கிறது. மனம் இல்லாவிட்டால் உடல் இன்பங்களை நாம் உணர முடியாது.

இதை எல்லாம் உணர்வதுடன் வாழ்வில் நமக்குச் சில நெறிகள் தேவை, சில கட்டுப்பாடுகள் தேவை.

நமது ஆசைகள் பிறரது உரிமைகளைத் தலையிடாத வரை, எதுவும் தவறில்லை.

வாழ்வில் ஒரு நிதானம்—ஒரு கட்டுப்பாடு—ஒரு சம நிலை தேவை.

இவ்வுலகில் வாழும் அனைத்தும் ஒன்றை ஒன்று தழுவி, நம்பி, சார்ந்து வாழ்கின்றன. ஆகவே பரஸ்பர நல் லெண்ணத்திலும் பரஸ்பர உதவியிலும்தான் மனித வாழ்க்கை அமைய முடியும்.

இத்துடன், நாம் யார், எங்கே வந்தோம், ஏன் வந்தோம், நாம் படைக்கப்பட்டதன் நோக்கம் என்ன வாக இருக்க முடியும் என்ற ஆன்மீக உணர்வுகளை எழுப்பிக் கொள்ளுங்கள்.

வாழ்வின் பயனைத் தரிசிக்க முடியும்.

தொழில் செய்வதில் பொய்யுண்டு, புரட்டு உண்டு, ஏமாற்று உண்டு, நம்பிக்கைத் துரோகம் உண்டு என்றெல்லாம் பலர் பேசுகிறார்கள்.

இவ்வுலகம் கொடுக்கல்—வாங்கல் என்ற சமநிலையில் தான் இயங்குகிறது. நாம் கொடுக்கும் உழைப்பிற்கு அல்லது சிந்தனைக்கு ஈடாக மற்றோர் பொருளைப் பெறுவதுதான் இவ்வுலக இயக்கம். இதை உணர்ந்து செயல் படும்போது பொய்யில்லை, ஏமாற்றில்லை.

நாம் சம அளவில் கொடுக்காது—தாம்பத்திய உறவிலிருந்து வியாபாரம் வரை—பிறர் பொருளை மட்டும் பெற வேண்டும் என்று எண்ணும் போதுதான் பொய், ஏமாற்று, நம்பிக்கைத் துரோகம் எல்லாம் ஏற்படுகிறது. இது உலக விதிக்கு எதிரானது. ஆகவே நிலைக்காது.

நமது ஊரை மொத்தமாகப் பார்க்கும்போது சில மனோபாவங்கள் நமது வளர்ச்சிக்கு குறுக்கே நிற்பதாக எண்ணுகிறேன். என்ன அவை?

"இனமாகப் பிறர் தர வேண்டும் என்று எண்ணும் மனோபாவம்."

இப்படி எண்ணுபவர்கள் அனுதாபத்திற்குரியவர்கள். சமுதாய உண்மைகளை உணராதவர்கள்.

நமது உழைப்பில், நமது சேமிப்பில், நமது காலில் தான் நாம் நிற்க முடியும்;தொழிலை நிறுவமுடியும்.பிறரை எதிர்பார்க்கும் மனோபாவம், பிறரையோசூழ்நிலையையோ குறைகாணும் மனோபாவம், நம் உள்ளத்தில் ஊறிப் போயிருக்கிறது. பிறரது முதலை நம்பிச் செயல்படுபவர், சமமாகத் தன் திறமைகளைக் கொடுக்காதவர்—சார்ந்து நிற்பவர். இது கடைசிவரை பிறரை எதிர்நோக்கி நிற்கும் நிலையிலேயே உங்களை வைத்திருக்கும்.

அமெரிக்காவில் யாரும், எதையும் இனமாகப் பெறுவதில்லை. அதைக் கேவலம் என்று கருதுகிறார்கள். அது அவர்களது ஆண்மைக்குப் பங்கம் என்று கருதுகிறார்கள்.

நமது ஊரில் நிலைமை நேர்மாறாக இருக்கிறது. நமது நாட்டு வள்ளல் தன்மை, தொடர்ந்து ஒரு பிச்சைக்கார இனத்தையும், அதைவிடக் கேடாக, ஒரு பிச்சைக்கார மனோபாவத்தையும் உருவாக்கி இருக்கிறது. கொடுப்பவன் சமுதாய சமநிலையைப் பாழ்படுத்தியவனா, பெறுபவன் கையாலாகாத்தனத்தின் பிரதிநிதியா, என்று கேட்டால், ''இருவருமே குற்றவாளிகள்'' என்றுதான் ஜேம்ஸ் ஆலன் போன்றோர் கூறுவார்கள்.

குழந்தைகட்கு, முதியோருக்கு, நோயுற்றோருக்கு, நலிந்தோர்க்குக் கொடுப்பது வேறு விஷயம். நலிந்த இனத்தின் பிரதிநிதி என்று தன்மானத்தை அடகுவைக்கக் கூடாது.

நம்மிடம் 'நைச்சிய மனோபாவம்' மிகுந்திருப்பதாக எழுதுகிறார் பாரதி. கவலைப்பட வேண்டிய விஷயம்.

முன் நிலையே இப்படி இருக்கும்போது இத்துடன் இன்றைய நிலைகளையும் ஒருமிக்க சேர்த்து, ஒருகணம் எண்ணிப் பாருங்கள்.

அமெரிக்காவில் **There is no Free Lunch** என்பது மிகப் பழக்கத்திலிருக்கும் ஒரு பழமொழி. ''தம்பீ! யாரும் எதையும் இனாமாகக் கொடுப்பதில்லை. எதற்கும் ஒரு விலை இருக்கிறது'' என்பதுதான் இதன் தாத்பரியம்.

நமது ஊரிலோ ''There is free lunch for everybody'' என்ற பழமொழியை நம்பி தமிழ் உலகம் இயங்குகிறது. ''எல்லாம் அரசாங்கம் கொடுக்கும்'' என்ற வார்த்தைகளை நம்பி கிராமமும் நகரமும் தலைநகரும் செயல்படுகின்றன.

நாட்டுக்கு நாடு மனோபாவமும் வளர்ச்சியும்—மனோ பாவமும் தேக்கமும்—எப்படிப் பின்னிப் பிணைந்து கிடக்கின்றன என்பதைக் கவனியுங்கள்.

இதன்மூலம் இன்றைய தேக்கத்திற்கு நாம் சமாதானம் மட்டும் கூறவில்லை; எதிர்காலத் தேக்கத்திற்கு விதை விதைக்கிறோம்.

இந்த அழகில், வேலை இல்லா இளைஞனுக்கு வேலை வாய்ப்பை ஏற்படுத்தித் தருவதை விட்டுவிட்டு அவனுக்கு மாதாமாதம் மான்யத் தொகை கொடுத்து ஒரு படித்த பிச்சைக்காரனை உருவாக்குபவர்களை என்னவென்று சொல்வது?

எழுந்து நிற்க முயலும் இளைஞனை நமது தயாள குணம் —காலொடிக்கக் கூடாது. நாடு எங்கே போகும்? எதிர் காலம் என்னவாகும்?

நான் நமது மனோபாவத்தைக் கண்டுதான் கலங்கு கிறேன்.

  

நான் இத்தொடரை விகடனில் எழுதியபோது நூற்றுக்கணக்கான கடிதங்கள் வந்தன. எல்லா வற்றிற்கும் என்னால் பதிலிறுக்க முடியவில்லை.

நான்கைந்து கடிதங்கள் பணஉதவி கேட்டு, பல யோசனை கேட்டு, ஏராளமான கடிதங்கள் நன்றி தெரிவித்து, தங்களது அனுபவங்களைப் பகிர்ந்து கொண்டு,

சில வரிகள், சில கருத்துக்கள், சில சம்பவங்கள் அவர் களது ஜீவநரம்பைத் தொட்டு தூண்டியதாக, பலர் தாங்கள் பெற்ற வெற்றிகளை எழுதி இருக்கிறார்கள், விவரமாக.

ஒரு படிக்கும் பெண், பிற மாணவர்களுக்கு உப யோகமாக 'நோட்ஸ்' வெளியிடும் தன் வியாபாரத் தைப்பற்றி.

ஒரு பனியன் தயாரிப்பாளர், ஒரு வெண்கலக் கடைக்காரர், பம்பாயிலிருந்து ஒரு உணவு விடுதிக் காரர், ஒரு சிமெண்ட் தொழிலதிபர், ஒரு யந்திர உற்பத்தியாளர், ஒரு பெயிண்ட் கம்பெனிக்காரர், ஒரு தேங்காய் வியாபாரி, புத்தகப் பதிப்பாளர்கள், ஆராய்ச்சியாளர்கள், பேராசிரியர்கள், ஞானிகள்,

நான் இவர்களுடைய கடிதங்களால் உயர்ந்தேன், புனிதப்பட்டேன். ஆண்டவனுக்கு நன்றி கூறினேன்.

  

நம் நாடு இன்று அவதிப்படலாம்.

உங்கள் வாழ்வில் இன்று சங்கடங்கள், பிரச்னைகள், இல்லாமை என்று இருக்கலாம்.

இது இப்படியே இருக்க வேண்டிய அவசியமில்லை; இருக்கக்கூடாது.

ஒரு நாட்டுக்கு நிலவளம், நீர்வளம் அவசியம்தான். ஆனால் மக்கள் மனவளத்தால்தான் செல்வந்தர்களாகிறார்கள்; சிறுதொழிலையும் பெருந்தொழிலையும் உருவாக்குகிறார்கள்; ஒரு நாட்டை மகத்தான நாடாக—வலிமை படைத்த நாடாக மாற்றுகிறார்கள். மனவளமும், உழைப்பும் உறுதியும்தான் அமெரிக்காவாக, ஜப்பானாக, தென்கொரியாவாக, சிங்கப்பூராக உருவெடுத்திருக்கின்றன.

எத்தனை வகை நாடுகள்!
எத்தனை நிற மக்கள்!
நம்மால் முடியுமா? முடியும்!

திரைகடலோடியும் திரவியம் தேடியவர்கள் நாம். நம்புங்கள், நம்மால் முடியும்.

  

நாம் அரசியலில் சுதந்திரம் பெற்றுவிட்டோம். ஆனாலும் நம் அடிமைப்புத்தி நம்மைவிட்டுப் போகவில்லை.

சில எண்ணங்களுக்கு அடிமையாய் இருக்கிறோம். (நம்மால் முடியாது. குஜராத்திக்காரன், பஞ்சாபிக்காரன் தான் நன்கு செய்வான்) சில பழக்கவழக்கங்களுக்கு அடிமையாய்போயிருக்கிறோம். (பெண்கள் இதெல்லாம்செய்யலாமா?) பல பயங்களுக்கு அடிமையாய் வாழ்கிறோம். (மாதாமாதம் வருகிற சம்பளத்தை விட்டுவிட்டு 'ரிஸ்க்'

எடுக்க முடியுமா? இந்த வயதில் சாத்தியமா?) இப்படிப் பல வகைகளில் நாம் எண்ணங்களால் முடக்கப்பட்டிருக்கிறோம்.

முதலில் எண்ண விலங்குகளை உடைத்தெறியுங்கள்.

முதலில் எண்ணங்களில் சுதந்திர புருஷனாக—

சுதந்திரப் பெண்ணாக உலவ முயலுங்கள்.

எத்தனை எத்தனையோ செல்வந்தர்கள் நமக்கு முன்னே வாழ்ந்து வழிகாட்டி இருக்கிறார்கள். ஒரு ஜெமினி வாசன், ஒரு ஏ. வி. மெய்யப்ப செட்டியார், ஒரு ஜி. டி. நாயுடு, ஒரு கார்னகி, ஒரு போர்டு என்று எண்ணற்றோர். அவர்களுடைய வாழ்க்கை வரலாறுகளைப் படியுங்கள். எங்காவது நூலிழையில் வாழ்வில் வெற்றி பெற்றோருடன் தொடர்பேற்படுத்திக் கொள்ள முயலுங்கள்.

செல்வந்தராக முயலுங்கள்.

உலகில் படித்தவரையும் பணக்காரரையும், கலைஞர்களையும் பணக்காரர்களையும், அதிகாரிகளையும் பணக்காரர்களையும், — அரசியல்வாதிகளையும் பணக்காரரையும்—என்று எல்லா மட்டத்திலும் பிறருடன்-பணம் உள்ளோரை எடைபோட்டுப் பாருங்கள்.

பணம் படைத்தவர்கள்தான், செல்வாக்குப் படைத்தவர்களாக, வலிமை படைத்தவர்களாக, படித்தவர்களுக்கு வேலை கொடுப்பவராக, கலைஞர்களுக்கு ஆதரவு கொடுப்பவராக, அரசியல்வாதிகளை விலைக்கு வாங்குபவர்களாக இருக்கிறார்கள்.

கடவுள்கள் குடியிருக்கும் கோயில்களுக்குக்கூடப் பணமில்லாதபோது பூசனை இல்லாமல் போய்விடுகிறது.

இவ்வுலகில் சர்வ வல்லமை படைத்தது செல்வம். தெரியாமலா சொன்னார் வள்ளுவர் ''பொருளிலார்க்கு இவ்வுலகமில்லை'' என்று. ''செய்க பொருளை!'' என்கிறார் வள்ளுவர்.

இப்புத்தகத்தைக் கவனத்துடன் படியுங்கள். கொஞ்சம் இடைவெளி கொடுத்து—விட்டுவிட்டுப் படியுங்கள்.

அடிக்கடி படியுங்கள். உங்களை உற்சாகப்படுத்தும் வரி களைக் கோடிடுங்கள். பக்கவாட்டில் உங்கள் அனுபவங் களைக் குறித்து வையுங்கள்.

இந்தக் கருத்துக்களை நினைவில் கொண்டு,சமயம் வரும் போதெல்லாம் வாழ்வில் கடைப்பிடிக்க முயலுங்கள்.

சத்தியம் என்பது மகத்தான சக்தி படைத்தது. ஆகவேதான் சத்தியம் வெல்லும் என்கிறார்கள். உற்றுப் பார்க்குமிடத்து சத்தியம் வெல்ல, செயல் தேவை; நம் உதவி தேவை; கண்காணிப்பு தேவை; போராட்டம் தேவை.

சத்தியத்திற்கே அந்த நிலை என்றால் நம் ஆசைகள் நிஜதரிசனம் பெறச் செயல் எவ்வளவு அதிகம் தேவை என்பதைச் சொல்லத் தேவையில்லை. ஆகவே, செயல் படுங்கள்; செயல்படுங்கள்.

வீரர்களே, விளையாட்டுக் களத்தில் இறங்குவோம். சந்தர்ப்பங்களும், வெற்றியும், நிறைவும் நமக்காகக் காத் திருக்கின்றன.

உலகில் நமது முத்திரை விழவேண்டிய காலமிது. சிந்திப்போம்; தொழில் செய்வோம்; செல்வம் சேர்ப் போம். வெற்றியே வருக!

**சி. உதயமூர்த்தி**

M. S. Udayamurthy
105, Pigeon Loop
Lafayette, Lousiana-70508
USA.

## புதிய ஆத்திச்சூடி

கற்றது ஒழுகு
கைத்தொழில் போற்று
செய்வது துணிந்து செய்
நாளெல்லாம் வினை செய்
நினைப்பது முடியும்
பணத்தினைப் பெருக்கு
பெரிதினும் பெரிது கேள்
வேதம் புதுமை செய்
வையத் தலைமை கொள்.

—சி. சுப்பிரமணிய பாரதியார்
பாரதியார் கவிதைகள்

மனித வாழ்வு முன்னேறவும், நாடு வளம் பெறவும் காலத்திற்கேற்ப புதிய புதிய நூல்கள் வரவேண்டும் என்பது பாரதியார் விருப்பம்.

## படித்துவிட்டீர்களா?

### டாக்டர் எம். எஸ். உதயமூர்த்தி

### எழுதிய பிற நூல்கள்

| | ரூ. | பை |
|---|---|---|
| எண்ணங்கள் | 10 | 00 |
| மனமும் பிரார்த்தனையும் | 10 | 00 |
| நெஞ்சமே அஞ்சாதே நீ | 10 | 00 |
| தட்டுங்கள் திறக்கப்படும் | 8 | 00 |
| பிரச்சினைகளுக்கு முடிவு காண்பது எப்படி? | 12 | 00 |
| தலைவன் ஒரு சிந்தனை | அச்சில் | |
| ஆத்ம தரிசனம் | 5 | 00 |
| நாடு எங்கே செல்கிறது | 12 | 00 |

வானதி பதிப்பகம்
13, தீனதயாளு தெரு,
தி. நகர், சென்னை-17

# 1

## சிந்தனை, தொழில், செல்வம்

“தமிழன் இன்று விஞ்ஞானத்தில் புதியன கண்டு பிடித்தான். இன்று கப்பல் கட்டும் தொழிலில் தூத்துக்குடி துறைமுகம் முன்நிற்கிறது. கன்னியா குமரி மாவட்டத்தில் கடற்கரை மணலிலிருந்து அணு சக்திப் பொருளை உற்பத்தி செய்து சேமிக்கிறார்கள். தாய்வானையும், கொரியாவையும், ஹாங்காங்கையும் விடத் தமிழ்நாட்டுத் துணிகளும் ஜமக்காளங்களும் பட்டும்தான் புதிய டிசைனில் வியாபார உலகில் பவனி வருகிறது. நமது ஊர் கன்சல்டிங் கம்பெனிகள் அணை கட்டவும், விமான தளம் அமைக்கவும், புதிய குடியிருப்புகளைப் பெரிய அளவில் கட்டவும் உல கெங்கும் செல்கின்றன. திருச்சிக்கும், தஞ்சைக்கும் மாயவரத்திற்கும், மானாமதுரைக்கும் சிறிய சொந்த பிளேனில் இஷ்டப்படி போய் வரலாம் என்ற நிலை வந்திருக்கிறது. கடல் நீரைக் குடி நீராக்கும் பெரிய யந்திரம் சென்னையின் குடிநீர் தேவையைப் பூர்த்தி செய்கிறது. புதிய விதைகள், புதிய பயிர்கள், விரை வில் பலன் தரும் மரங்கள், செடிகொடிகள், காய் கறிகள், பழங்கள் பற்றிய ஆராய்ச்சி பலன் தந்து

மார்க்கெட்டில் விற்பனை ஆகிறது. தமிழ்நாட்டில் என்றுமில்லாத அளவுக்கு இளைஞர்கள் சொந்தத் தொழிலில் இறங்குகிறார்கள்...''

இப்படி ஒரு கணம் கற்பனை செய்து பாருங்கள்!

**'காசி நகர்ப்புலவர் பேசும்உரை தான்**
**காஞ்சியில் கேட்பதற்கோர் கருவிசெய் வோம்'**

என்றாரே பாரதி. அந்த நிலைமை வர; வறுமை என்பது மறந்துபோய் நமது முழுத்திறமையையும் வெளிக் கொணர்ந்து, நாமும் உலகமும் சுகமாக வாழ வழி செய்யும் பங்கில் தமிழன் முன்னோடியாய் இருக்கிறான் என்றால்...

முடியுமா?

நம் வளர்ச்சியை எது தடுக்கிறது? எது நம் ஆர்வத்திற்குக் குறுக்கே நிற்கிறது? சுதந்திரம் வந்து 35 ஆண்டுகள் ஆகியும் ''யாருக்கு சுதந்திரம் வந்தது?'' என்று ஏன் கேட்கிறோம்? ஏன் தமிழனும் தமிழ்நாடும் முன்னைவிடக் கேவலமாகக் கையேந்தி டெல்லியையும் அண்ணாந்து உலகத்தையும் பார்க்கிறார்கள்?

வீரப் பரம்பரை நாம் என்று சங்கப் பாடல்கள் தெரிவிக்கின்றன. சென்னை (தமிழ்நாடு) அறிவாலும் தேசிய உணர்வாலும் புடம் போடப்பட்டிருக்கிறது என்று அமெரிக்க 'டைம்' பத்திரிகை எழுதியது.

இருந்தும்...இருந்தும்...ஏன்? ஏன்?

எங்கே தவறு செய்தோம்?

எங்கே நூலிழையைத் தவற விட்டோம்?

எப்படிக் கடிவாளத்தைப் பறிகொடுத்தோம்?

ஏன்? ஏன்?

கொஞ்சம் சிந்தியுங்கள்.

தொழில் வளர்ச்சிக்கு வேண்டிய பொருளும் பணமும் மனிதர்களும் நம்மிடம் இல்லையா?

நமது மனோபாவங்கள் நம் வளர்ச்சிக்குக் குறுக்கே நிற்கின்றனவா? டெல்லியிலே எல்லாம் முடிவெடுக்கப் படும் ஓர் அரசியல் அமைப்பில் மாட்டிக் கொண்டு விழிக்கிறோமோ?

எது உண்மை?

விருப்பு வெறுப்பின்றி உண்மை நாடும் பேரவா வுடன் நாம் இவற்றிற்கு விடை காண முயல வேண்டும்.

நம் வாழ்வுக்கு நாம் பொறுப்பு, நம் சூழ்நிலைக்கு நாம் பொறுப்பு, நம் முன்னேற்றத்திற்கு நாம்தான் பொறுப்பு என்ற உணர்வு நம்மிடம் இருப்பதாகத் தெரியவில்லை. டெல்லியைக் குற்றம் சொல்கிறோம். எதிர்க்கட்சியைக் குறை சொல்கிறோம். ஆள்பவர்கள் மீது பழி சுமத்துகிறோம்.

அமெரிக்காவில் ஒரு சர்வே செய்தார்கள். தொழிலதிபர்களைக் கேட்டார்கள்; தொழில் செய்யும் பெண்மணிகளைக் கேட்டார்கள்; தொழிலில் நாளை இறங்க இன்று கல்லூரிகளில் தொழில் நிர்வாகம் படிக் கும் மாணவர்களைக் கேட்டார்கள்.

பல்வேறு சந்தர்ப்பச் சூழ்நிலைகளை அமைத்து, அவை ஒவ்வொன்றிலும் நீங்கள் எப்படி நடந்து கொள்வீர்கள் என்று கேட்டார்கள்.

அவர்களைக் கேட்ட மூன்று கேள்விகள் இவை தான்.

''உங்கள் வாழ்க்கையை நீங்கள்தான் எண்ணித் திட்டம் தீட்டி அமைத்துச் செல்வதாக எண்ணுகிறீர்களா?

உங்கள் வாழ்க்கையை சூழ்நிலைகளும் பிறமனிதர்களும் தீர்மானிப்பதாகக் என்று கருதுகிறீர்களா?

உங்களுடைய வாழ்க்கை பெரிதும் விதியால் எதிர்பாராத சம்பவங்களால் தீர்மானிக்கப் படுகிறது என்று கருதுகிறீர்களா?'' என்று கேட்டார்கள்.

தொழிலதிபர்களும் இளைஞர்களும் பெண்களும் என்ன பதிலளித்தார்கள் என்பதைப் பிறகு பார்ப்போம். இதே கேள்விகளை நீங்கள் உங்களைக் கேட்டுக் கொள்ளுங்கள். வாழ்வின் பல்வேறு சந்தர்ப்பங்களில் எப்படி நடந்து கொண்டிருக்கிறீர்கள் என்று பின்னோக்கிச் சென்று சீர்தூக்கிப் பாருங்கள்.

இந்த விஷயத்தில் நம் நாட்டு மக்களின் மனோபாவம் எப்படி இருக்கிறது?

சிறு வயதிலிருந்து பெற்றோரிடமும், ஆசிரியரிடமும் வளர்ந்தபின் மேலதிகாரியிடமும், நாம் அவர்கள் முகம் பார்த்து அவர்களது ஆதரவையும் அனுமதியையும் எதிர்நோக்கி நடந்துகொள்கிறோம்.

நிலம் நீச்சு, உடைமையிலிருந்து போலீஸ் பாதுகாப்பு, தாலுகாபீஸ்வரை அரசாங்கக் கெடுபிடிகளை அனுசரித்து, எதிர்பார்த்து ஆதரவு தேடி வாழ்க்கை நடத்துகிறோம். சட்ட திட்டங்களாலும், பாரம்பரிய பழக்க வழக்கங்களாலும், சமுதாய அமைப்பினாலும் நாம் நம் வாழ்க்கைக்குப் பிறரது தயவை அனுமதியை எதிர்பார்க்கும் நிலை நமது ஊரில் அதிகம் நிலவுகிறது.

ஊரில் ஒரு காரியம் செய்யவேண்டுமென்றால் அது அரசாங்கம் செய்யவேண்டும் என்ற எண்ணம் நம்முள் ஊறிப் போயிருக்கிறது. அல்லது அதற்கு அரசாங்க தயவு வேண்டும் என்ற நிலைமை நிலவுகிறது. 'சுற்றம் தழுவு' என்பது நம் பழமொழி. இப்படியோர் பாரம்பரியத்தின் மூலம் தன் காலிலேயே நிற்கும் ஒரு தெம்பைப் பெரும்பான்மையான மக்களிடையே நாம் ஒடித்துவிட்டோமா என்று நான் சந்தேகப்படுவதுண்டு.

இல்லாதவனிலிருந்து இருப்பவன் வரை பொருட்களை இனாமாகப் பெற்றுக்கொள்வதை நியாயம் என்று கருதுகிறோம். இனாமாகப் பெறுவது, யாசகம் பெறுவது இழிவு என்ற மனோபாவம் நம்மிடையே இல்லை. ஏன், ஆண்டவன்கூட பிட்சாண்டியாக வந்த ஊரல்லவா? ஆண்டவனையும் பிட்சாண்டி ஆக்கி இருக்கிறோம்.

இதன் விளைவாக, "பணக்காரன் கொடுத்தால் என்ன?" என்றும், "அரசாங்கம் அல்லவா செய்ய வேண்டும்!" என்றும் எதிர்பார்க்கிறோம்; பேசுகிறோம்.

தன் காலிலே நிற்க முடியாத சார்ந்து நிற்கும் ஒரு சமுதாயம் நமது பரம்பரையாய்ப் போய்விட்டது. பிறரிடமிருந்து இலவசமாக ஒரு பொருளைப் பெறுவது முறையல்ல, அதைவிட—"அது கேவலம்; நம் தன்மானத்தின் தலையிலடிக்கும் செயல்" என்று மேல் நாடுகளில் கருதுகிறார்கள். நம் நாட்டிலோ இது நியாயமாகப் படுகிறது.

இது நமது மனோபாவக் கோளாறு.

மனத்திற்கும் செயலுக்கும் பெரிய தொடர்பிருக்கிறது. உண்மை, நேர்மை, சுதந்திரம், சமத்துவம், அன்பு, உதவும் உள்ளம் என்ற நிரந்தர உண்மைகளால்தான் இவ்வுலகம் இயங்குகிறது. இதற்கு மாருக நம் மனேபாவம் அமையும்போது நம்மால் செயல்பட முடிவதில்லை. காரியங்கள் பூர்த்தி பெறுவதில்லை. பிச்சை மனேபாவம் இந்நிரந்தர உண்மைகளுக்கு மாறுபட்ட செயல்.

மனேபாவக் கோளாறை ஒருகணம் மறந்து வேறு விஷயங்களைப் பார்ப்போம்.

# 2

# தனிமனித முன்னேற்றம்

ஒரு சமுதாயம் முன்னுக்கு வருவது அதிலுள்ள தனி மனிதர்களின் ஆர்வத்தினுலும் முயற்சியினுலும் செயல்களினுலும்தான். அரசாங்கத்தினுல் அரசாங்க மூலமாக—ஒரு சமுதாயம் வளங்கொழிக்கும் நாடாக மாறியது என்று நடந்ததில்லே. அரசாங்கம் என்பது நமது உடைமையைப் பாதுகாக்கும் பொது நன்மைக் கான ஒரு கூட்டமைப்பு. அது செலவழிக்கும் பணம் பொது மக்களிடமிருந்து வரியாகத் திரட்டப்படும் பணம். நம் நாட்டிலோ, "அரசாங்கம் செலவு செய்ய வேண்டும் எல்லாவற்றிற்கும்" என்ற அபிப்பிராயமும், எங்கோ வானத்திலிருந்து மந்திரத்தின் மூலம் அரசாங்கச் செலவுக்குப் பணம் வருகிறது என்றும் நாம் எண்ணிக்கொண்டிருக்கிருற்போல விஷயங்கள் நடைபெறுகின்றன.

அரசாங்கம் என்பது ஒரு தேவையான இடைஞ் சல். அதை எவ்வளவுக்கெவ்வளவு குறைத்து வைத்துக் கொள்கிருேமோ, அந்த அளவுக்கு ஒரு நாட்டில் தனி மனித சுதந்திரமும் தனி மனித முயற்சியும் அதிக மாகும்.

“அரசாங்கத்தை மாற்றினல், நாம் ஆண்டால் அரசாங்க மூலம் எல்லாவற்றையும் நாம் செய்ய முடியும்!'' என்ற எண்ணத்தைச் சுதந்திரத்திற்கு முன்பிருந்து நம் தலைவர்கள் நம்மிடையே வளர்த்து விட்டார்கள். அன்று அது தேவையாக இருந்தது. இன்று நடக்கும் தேர்தல்களிலும் “நான் பதவிக்கு வந்தேனுனல்...அரசாங்கம் இப்படி எல்லாம் செய்யும்'' என்று சொல்லிச் சொல்லி, பொய்யான வாக்குறுதிகள் அளித்து, “நாம் ஓட்டுப் போட்டால் போதும். அரசாங்கம் நமக்குச் சோறு போடும்'' என்று ஏழை மக்கள் எண்ணுமாறு இன்றைய அரசியல் ஆகிவிட்டது.

அரசாங்கம் ஒரு தாலுகாபீஸ் குமாஸ்தாவை உருவாக்கி இருக்கிறதே ஒழிய ஒரு புதியன கண்டு பிடிக்கும் விஞ்ஞானியை புதுப் பணத்தைக் கொண்டு வரும் தொழிலதிபரை, ஒரு கலைஞனை உண்டாக்கிய தில்லை. அரசாங்கம் ஒரு செக்கு மாடு.

விஞ்ஞான மனேபாவம், தொழிலார்வம், கலை ஈடுபாடு எல்லாம் தனி மனிதனது ஆக்க சக்தியின் வெளிப்பாடுகள். அந்த ஆக்க சக்தியின் மூலம் அவன் தன்னையும் உலகையும் தான் காணும் அதி உன்னத நிலைக்கு அழைத்துச் செல்கிறுன். தனி மனித ஆர்வம், தனி மனித துடிப்பு, முயற்சி, தொழில், கற்பனை, தனி மனிதன் மேற்கொள்ளும் தியாகம், உழைப்பு இவற்றி லிருந்துதான் ஒவ்வொரு துறையிலும் சாதனைகள் மலர்ந்திருக்கின்றன.

இரண்டாம் உலகப் போர் முடிந்த போது போர்டு மோட்டார் கம்பெனியின் வியாபாரம்

படுத்துப் போயிற்று. ஹென்றி போர்டு, அரசாங்கத்திடம் மண்டி இடவில்லை. ராபர்ட் மெக்நாமரா போன்ற சிறந்த இளம் நிர்வாகிகளைக் கூப்பிட்டார். “இளைஞர்களே! கம்பெனி நஷ்டத்தில் ஓடுகிறது. என்ன செய்தால் மீண்டும் நம் பொருட்கள் விற்பனையாகுமோ அந்த வழியைக் கண்டுபிடியுங்கள். பொறுப்பை உங்களிடம் கொடுக்கிறேன்!” என்றார்.

மூன்று வருடங்களில் போர்டு கம்பெனி மீண்டும் அதிக வருமானத்துடன் செயல்படத் துவங்கியது.

அதேபோல 1979—80-ல் அமெரிக்காவில் கிரைஸ்லர் கார் கம்பெனிக்குச் சோதனை ஏற்பட்டது. கிரைஸ்லர் சொந்தக்காரர்கள், ‘லீ அயோகாக்கா’ என்ற ஒரு நிர்வாகியை கம்பெனி நிர்வாகத்தை மேற்கொள்ளுமாறு அழைத்தார்கள். இன்று மீண்டும் கிரைஸ்லர் திறமையான கம்பெனியாக நடக்கிறது.

எந்த ஒரு கம்பெனியும், நாடும், சீரும் சிறப்பும் பெறுவதற்கு என்ன காரணம்? அது அங்குள்ள மக்களின் தரத்தைப் பொறுத்தது. அவர்கள் காட்டும் தலைமையையும் தைரியத்தையும் கற்பனையையும் விடாமுயற்சியையும் பொறுத்தது.

ஒரு கம்பெனியில் எது முக்கியம் தெரியுமா? அதன் பொருட்களல்ல; அதன் பழம் பெருமை அல்ல. அங்குள்ள மனிதர்கள்தான்; அவர்கள்தான் தோல்வியை வெற்றியாக மாற்றுகிறார்கள். புதிய பொருட்களையும் புதிய துறைகளையும் புதிய மார்க்கெட்டையும் உருவாக்குகிறார்கள்.

மனிதர்களால்தான் ஒருநிறுவனம் மாறுபாட்டை, புத்துயிரை, பொலிவை, வலுவைப் பெறுகிறது.

நமது ஊரில் என்ன செய்கிறோம்? "அடுத்த சீனியர் அருணசலம். அவரைப் போடுங்கள்" என்று வயதையும் ஒருவர் வாழ்ந்த வருடங்களையும் எண்ணி இடத்தை நிரப்புகிறோமே ஒழிய திறமையைக் கணித்து, திறமையை மதித்து, திறமையை முன் வைத்துக் காரியங்களைச் செய்வதில்லை.

ஆகவேதான் நான் நினைப்பதுண்டு. எந்தத் துறையானாலும் சரி, ஒரு நல்லெண்ணம் படைத்த தலைவனும், திறமை மிகுந்த ஒரு நிர்வாகப் படையும் தொழில் நிர்வாகத்தில் ஈடுபடுமானல் நம் நாட்டை ஒரு ஜப்பானைப்போல், கொரியாவைப்போல், சிங்கப்பூரைப் போல் மாற்றிவிட முடியும்.

தனி மனிதர்கள் முன்னேறும் போதுதான் சமுதாயம் முன்னேறுகிறது. ஆகவே நாம் தனிமனிதர்களை ஊக்குவிக்க வேண்டும். அவர்கள் சுதந்திரமாகச் செயல்பட ஏற்ற புதிய சூழ்நிலை அமைக்கவேண்டும்.

இருக்கிற அமைப்புக்களை எல்லாம் உடைத்தெறிந்து, அதை எல்லாம் மீறி நம் இஷ்டப்படி எல்லாவற்றையும் மாற்றி அமைக்கலாம் என்று எண்ணும் துணிவு நம்முள் வரவேண்டும். நம்மால் முடியும், நான் முயல்வேன் என்ற துடிப்பு நமக்கு வேண்டும். அதுதான் தொழில் வளத்திற்கு முதற்படி.

# 3

# தணியாத தொழிலார்வமே முன்னேற்றத்திற்கு முதற்படி

ஒரு தனி மனிதன்—நேற்றுவரை வெகு சாதாரண மாக இருந்த ஒரு மனிதன்—இன்று எப்படிச் செல்வந்தனாக, செல்வாக்குள்ளவனாக, வசதிகள் படைத்தவனாக, தொழிலதிபனாக மாறுகிறான்? மாறினான்? எப்படி மாற முடிந்தது?

ஒரு மனிதன் தனது உழைப்பினால் செல்வந்தனாகிறான் என்கிறார்கள். கொத்தவால் சாவடியில் மூட்டை சுமக்கும் உழைப்பாளிகள் ஏராளமாக இருக்கிறார்கள்.

ஒரு மனிதன் தனது கற்பனையினால் பணக்காரனாகிறான், தொழிலதிபனாக மாறுகிறான் என்று கூறுகிறார்கள். கற்பனை வளம் படைத்த ஓவியர்களும் எழுத்தாளர்களும் வறுமைக்கோட்டைத் தாண்டமுடியாதவர்களாய் தவிப்பதைக் காண்கிறோம்.

தனது தொழில் நுட்பத்தினுல் மனிதன் புதிய பொருளைக் கண்டு பிடித்துப் பணக்காரனுகிருன் என்று சொல்லக்கூடும். தொழில்நுட்பமும், புதிய பொருள் கண்டுபிடிக்கும் திறமையும் கொண்ட ஏராள மான விஞ்ஞானிகளும் பொறியியலாளர்களும் மாதச் சம்பளத்தை நோக்கிக் காலத்தை ஓட்டிக் கொண் டிருக்கிருர்கள்.

அப்படியானுல் எது ஒரு மனிதனை மற்றவர்களை விடப் பணக்காரனுக உயர்த்திக் காட்டுகிறது? வெறும் உழைப்பு மட்டுமல்ல; வெறும் கற்பனை மட்டு மல்ல; வெறும் தொழில் நுட்ப அறிவு மட்டுமல்ல.

நாளை தொழிலதிபனுகும் இன்றைய மனிதனிடம் தன் காலிலேயே நிற்கும் தணியாத ஆர்வமிருக்கிறது. தன் வாழ்க்கையை விதி கட்டுப்படுத்தவில்லை; அத்தை, பாட்டி, அப்பா,மாமா என்று தன் குடும்பத்தினர் கட் டுப்படுத்தவில்லை; தன் வாழ்க்கையை அரசாங்கமோ, எதிர்பாராது நிகழும் சம்பவங்களோ கட்டுப்படுத்த முடியாது என்ற நம்பிக்கை அவனிடம் இருக்கிறது.

''நான் முன்னேறுவேன்; செல்வந்தனுவேன்; தொழிலதிபனுவேன்; மதிக்கப்படுவேன்; ஊருக்கும் உலகத்துக்கும் ஒரு பயனுள்ள பொருளை அல்லது திறமையை அளிப்பேன்'' என்ற தணியாத ஆர்வம்— தொழிலார்வம் அவனிடம் இருக்கிறது.

முன் கட்டுரை ஒன்றில் குறிப்பிட்டது போல, தொழிலில் இருப்பவர்களையும், தொழிலில் புகுந்த பெண்களையும், தொழில் நிர்வாகம் படிக்கும் வாணிபத்துறை மாணவர்களையும் ஒரு 'சர்வே' செய்த

தில் வெற்றிகரமாகச் செயல்படுபவர்கள் என்ன பதிலைத் தெரிவித்தார்கள்?

சுமார் நான்கு வகை மக்களை இந்த 'சர்வே'க்குத் தேர்ந்தெடுத்தார்கள்.

முதல் வகையினர். 'வளர்ச்சி, தொழில், முன்னேற்றம், புதுப் பொருட்கள்' இவை பற்றித்தான் அதிகம் சிந்தித்துக் கொண்டிருந்தார்கள். ஒரு நல்ல ஸ்தாபனத்தை—கம்பெனியை—உருவாக்குவது பற்றி அவர்கள் பெரும்பாலும் முயன்று கொண்டிருந்தார்கள். பல சமயம் பல தொழில் ஸ்தாபனங்களை அவர்கள் நிறுவ முயன்றார்கள். புதிய தொழில்களில், லாபகரமான தொழிலை அவர்கள் தேர்ந்தெடுத்தார்கள். அந்தப் புதுத் தொழிலை விளம்பரம் மூலமாகவும், விற்பனை யுக்திகளைக் கையாண்டும் வளர்த்தனர்.

சர்வே செய்யப்பட்ட இரண்டாவது வகையினர். தொழிலைச் சிறிதாக வைத்துக் கொள்ள விரும்பினார்கள். தரமான பொருட்களை உற்பத்தி செய்து விற்பதுதான் அவர்களது முக்கிய நோக்கமாயிருந்தது. விளம்பரம் அதிகம் செய்வதில்லை இவர்கள். நல்ல பொருள் இருந்தால் தானாக விற்பனை ஆகும் என்று நம்புபவர்கள் இவர்கள்.

சர்வே செய்யப்பட்ட மூன்றாவது வகையினர். முற்றிலும் பெண்கள். தொழிலை விரிவுபடுத்த வேண்டும் என்ற ஆர்வமுடையவர்கள். இருப்பதைவிடச் சிறப்பாகச் செய்ய வேண்டுமென்று ஆசைப்பட்டுச் செயல்படுபவர்கள்.

நான்காவது வகையில் மாணவர்கள் இருந்தார் கள். சொந்தத் தொழில் செய்ய விரும்பும் மாணவர் கள். பெரும்பாலும் சராசரி வயது இவர்களுக்கு 23. அடுத்த மூன்றுண்டுகளுக்குள் சொந்தமாகத் தொழில் செய்யும் வாய்ப்பு 50 சதவிகிதம் உண்டு என்று அபிப்பிராயம் தெரிவித்தார்கள் இவர்கள். ''ஒரு நாள் சொந்தத் தொழில் செய்வேன்'' என்று 85 சதவிகிதத்தினர் கூறினுர்கள்.

மொத்தமாக இவர்களை சர்வே செய்ததில், 40 சதவிகிதத்தினர் கூறினுர்கள், ''என் விதியை நான் தான் நிர்ணயிக்கிறேன்'' என்று. வாழ்க்கைச் சம்பவங் களை தங்களால் கட்டுப்படுத்தித் தாங்கள் விரும்பி யதை அடைய முடியும் என்ற நம்பிக்கை—அசைக்க முடியாத நம்பிக்கை இவர்களிடம் இருந்தது.

மாணவர்களில் ஒரு 11 சதவிகிதம் ஆசிரியர் களுக்கு அதிகச் செல்வாக்கும் அதிகாரமும் இருக்கிற தென்று கருதினுர்கள். வேலையிலிருப்பவர்கள், மேலதி காரி தங்கள் வாழ்வை நிர்ணயிப்பதாக எண்ணினுர் கள். கல்யாணம் ஆகி மனைவி குழந்தைகளைப் பெற்ற வர்கள், தங்கள் வாழ்க்கைத் துணையும் குழந்தைகளும் தங்கள் வாழ்க்கையை நிர்ணயிப்பதாகக் கூறினுர்கள். அதாவது கிட்டத்தட்ட 90 சதவிகிதத்தினர் பிறர் தலையீடு தங்களைப் பாதிப்பதில்லை என்று கூறினுர்கள்.

சுமார் எட்டு சதவிகிதத்தினர் மட்டிலும் விதி தங்கள் வாழ்க்கையை நிர்ணயிப்பதாகக் கூறினுர்கள். ''வெற்றி பெற அதிர்ஷ்டம் வேண்டும்'' என்று இவர் கள் நம்பினுர்கள். ''சரியான இடத்தில், சரியான

சமயத்தில் இருக்கின்ற வாய்ப்பு வேண்டும்'' என்றும், ''எல்லா துரதிர்ஷ்டமும் தங்களைத் தேடி வருவதாக வும்'' இவர்கள் குறைபட்டுக் கொண்டார்கள்.

விஷயமே இங்குதான் துவங்குகிறது. என்னுல் முடியும் என்ற நம்பிக்கையில்தான் அது துவங்கு கிறது. வாழ்க்கைச் சம்பவங்களை நான் விரும்புகிற மாதிரி — என் லட்சியத்திற்கேற்ப — நான் உப யோகித்து வெற்றி காண முடியும் என்ற நம்பிக்கை யில்தான் தொழில் வெற்றி துவங்குகிறது.

பிறர் நம் வாழ்க்கையைத் தீர்மானம் செய்வ தில்லை; 'பிறர் நிர்ணயிக்க விடமாட்டேன்' என்ற நம்பிக்கை.

'விதியோ, எதிர்பாராது நிகழும் சம்பவங்களோ என்னை ஏதும் அசைக்க முடியாது' என்ற நம்பிக்கை...

உங்கள் வாழ்க்கையை இந்த மூன்று வகை எண்ணங்களுடன் ஒப்பிடுங்கள். உங்கள் வாழ்க்கை எப்படி இதுவரை வந்திருக்கிறது என்று பின்னேக்கிப் பாருங்கள். உங்கள் வாழ்க்கையை நீங்கள் அமைத் தீர்களா, அல்லது வாழ்க்கைச் சம்பவங்களுக்கேற்ப நீங்கள் ஓடினீர்களா என்று பாருங்கள்.

உங்கள் வாழ்க்கையைப் பிறர் தீர்மானிக்க விட்டீர்களா, எதிர்பாராது நேர்ந்த விதி வாழ்வை அமைக்க விட்டீர்களா என்று பாருங்கள்.

வாழ்வில் வெற்றி பெற்றவர்களின் மனேபாவங் களை மேலே பார்த்தீர்கள். அவர்களுடன் உங்களை ஒப்பிடுங்கள்; சிந்தியுங்கள்; உங்கள் வாழ்க்கைச் சம்ப வங்களை எழுதி அலசுங்கள்.

உங்களை நீங்களே அறிந்துகொள்ள இது உதவும். நம்மைப் பற்றிப் பூரணமாகத் தெரிந்து கொள்வது தான் நாம் திருந்த, முன்னேற உதவும் முதல்படி.

# 4

# செய்க பொருளை

அமெரிக்காவில் வாழும் ஒரு யூத இளைஞனைப் பார்த்து, ''தம்பீ! நாளைக்கு நீ என்ன செய்ய விரும்புகிறாய்?'' என்று கேட்டால், ''நான் சொந்த பிசினஸ் ஆரம்பிக்கப் போகிறேன்'' என்றுதான் கூறுவான். அமெரிக்கத் தொழிலும் வியாபாரமும் முழுக்க முழுக்க யூதர்களின் கையில் இருக்கிறது. ஆகவே அவர்கள் கையில் பணம் இருக்கிறது. செல்வாக்கு இருக்கிறது. யூதர்கள், அமெரிக்க ஜனத்தொகையில் சிறுபான்மையினராக-மைனாரிட்டியாக இருந்தாலும், இஸ்ரேல் விஷயத்திலும் மற்ற எந்த விஷயத்திலும் அரசாங்கத்தை அடிபணிய வைக்கிறார்கள். பணத்திற்கும் தொழிலுக்கும் இருக்கும் செல்வாக்கைப் பாருங்கள்!

சொன்னார் திருவள்ளுவர். ''தம்பீ! பொருள் செய்க. எதிரியின் ஆணவத்தை ஆணி வேரொடு சேர்த்து அறுக்கும் கத்தி, செல்வம் போல் வேறெதுவும் இல்லை. ஆகவே, தம்பீ, பொருள் செய்க!'' பணம் என்பது வாழ்க்கை ஆதாரம் மட்டுமல்ல; பணம் என்பது படை. வலுவான படை. விரும்பியதைச்

சாதித்துக் கொள்ள உதவும் ஓர் அற்புதமான ராணுவப் படை. இன்று படையில்லாமல் நாம் தவிக்கிறோம்.

தமிழர்கள் எங்கே இருக்கிறார்கள் பண பலத்தில், பணப் படையில்?

பஞ்சாப் மாநிலத்திற்கு நம்மைப் போல் மூன்று மடங்கு சராசரி வருமானம் என்று சொல்லப்படுகிறது. குஜராத் மாநிலத்தின் சராசரி மனிதனின் வருமானம் தமிழ்நாட்டைப் போல் இரண்டு மடங்கு என்று எழுதப்படுகிறது. நாம் என்ன செய்கிறோம்?

அரசியல் மேடை அமைத்து எதிர்க் கட்சிகளைச் சாடிக் கொண்டிருக்கிறோம். அவலங்களை மறக்க சினிமா, நாட்டியம், நாடகம் பார்த்துக் கொண்டிருக்கிறோம். அரசியல், சினிமா இவை இரண்டைத் தவிர எது தமிழ்நாட்டில் பேசப்படுகிறது? சிந்திக்கப்படுகிறது?

ஐயகோ! தமிழ்நாடே! வீரப் பரம்பரையா நீ! யவன மிசிர ரோம் நாடுகளுடன் வாணிபம் நடத்தி வந்த இனமா நீ...? இமயத்தில் புலிக்கொடி பதித்த இனமா நீ...? தன்மான உணர்வுடன் கப்பலை மிதக்க விட்டாரே சிதம்பரம், அந்தப் பரம்பரையில் பிறந்தவனா நீ...? "வெளிநாடுகளில் நம்மவர்களை அடிக்கிறார்களா? அனுப்பி விடுங்கள் இங்கே. இங்கே பர்மா பஜார் போடுகிறோம், இலங்கை அகதி முகாம் திறக்கிறோம்" என்று முதுகொடிந்து எதையும் ஏற்றுக் கொள்ளும் இனமாக எப்போது நீ ஆனாய்...?

இனம் என்பது எது? தனி மனிதத் தொகுதியைத் தான் இனம் என்கிறோம். வீரமும் தன்மானமும்

வாணிபத் திறமையும் மக்கி மடிந்து போய்விட்டதா தமிழன் என்ற தனி மனிதனிடம்?

அறிஞர்களே, கொஞ்சம் சிந்தித்துப் பாருங்கள்;
தலைவர்களே, கொஞ்சம் யோசியுங்கள்!

அக்கறை கொண்டவர்களே, இது இப்படியே போய்க் கொண்டிருந்தால் எப்படி?

ஒரு தொழில் செய்பவன் தன் காலிலேயே நிற்பவன். ஆனால், தமிழினமாகிய நாமோ பெரிய சார்ந்து நிற்கும் சமுதாயமாக உருவாகியிருக்கிறோம்.

'தண்ணீர் தண்ணீர்' சினிமாவில் நம் நிலையை, நம் தவிப்பைத் தத்ரூபமாகக் காட்டினார்கள். "இது இப்படி இல்லை" என்று ஏமாற்றிக் கொள்ள வேண்டுமென்று நிர்ப்பந்திக்கும் நியாயவாதிகளும் நம்மிடையேதான் வாழ்கிறார்கள். இவர்களும் தமிழினம் தான்.

நமது பாரம்பரிய புத்தியே வயது வந்த பின்னும் —இப்படி அப்பாவை, அம்மாவை, அதிகாரியை, ஒரு கம்பெனி ஊழியத்தை, அரசாங்கத் தயவை நம்பி வாழும் இனமாக உருவாக்கி இருக்கிறது.

எனது நண்பர் ஒருவர் கூறுவார். "வெளிநாட்டிலும், தமிழ்நாட்டிலுமுள்ள இரண்டு இளைஞர்களைத் தேர்ந்தெடுத்து அவர்களிடம், 'இதோ பாருங்கள்! இதோ ஒரு லட்சரூபாய் இருக்கிறது. இதை வைத்துத் தொழில் செய்யலாம். அல்லது இந்தக் கம்பெனியில் மாதம் இரண்டாயிரம் ரூபாய்க்கு வேலை இருக்கிறது. எது வேண்டும்?' என்று கேட்டால், வெளிநாட்டவன், "ஒரு லட்சத்தைக் கொடு, தொழில் செய்கிறேன்!' என்பானும். ஆனால், ஒரு தமிழனோ, 'இரண்டாயிரம்

சம்பளம், கை நிறையச் சம்பளம். பாதுகாப்பான வேலே. அதுவே எனக்கு வேண்டும்!' என்பானும்.''

டெல்லிக்கும் பம்பாய்க்கும் நாம் எப்படிப் போயி ருக்கிறோம்!

தொழில் செய்பவனுகவா? தொழிலதிபனுகவா போயிருக்கிறோம்? இல்லே. குற்றேவல் செய்யும், கணக் கெழுதும் ஊழியர்களாய்ப் போயிருக்கிறோம். இங்கே சென்னேயில் பாருங்கள். தமிழனல்லாதவன் எத்தனே பேர் டாக்ஸி ஓட்டுகிறார்கள், எத்தனே பேர் தொழில் செய்கிறார்கள், எத்தனே பேர் கணக்கெழுதுகிறார்கள், எண்ணிப் பாருங்கள்.

வந்தாரை வாழ வைக்கும் தமிழ்நாடு என்பதா? அடிமைப் புத்தி நிறைந்த ஊழிய இனம் நம்முடையது என்று அவமானப்படுவதா?

இந்திக்கெதிராகப் போர்க்கொடி தூக்குகிறோமே அது தன்மானம்தான். ஆனல், உண்மையில் தன் மானம் நம் அடிமைத்தனத்தைக் களேவதில் அல்லவா இருக்க வேண்டும்? நமது ஊரிலாவது நம்மவர்கள் பெருந் தொழிலதிபர்கள் ஆவதில் அல்லவா கருத்துச் செலுத்த வேண்டும்? எல்லாவற்றிற்கும் அடிப்படை, பொருளாதாரம்தான் என்கிற நினேப்பின்றி வெறும் தமிழ்க்கொடி உயர்த்தி என்ன பயன்?

நம் சமுதாயமும் நம் தலேவர்களும், எங்கே சூட்சுமம் இருக்கிறது என்பது தெரியாமல், விஷய மில்லா விஷயங்களிலும் வெறும் வீருப்புக்களிலும் நம் சிந்தனேயையும் செயலேயும் அர்ப்பணித்துக்கொண் டிருந்தால் தமிழ்நாடு எங்கே போகும்? நமது அடுத்த தலேமுறை என்ன ஆகும்?

அமெரிக்காவில் கம்ப்யூட்டரும் எலெக்ட்ரானிக் ஸூம் வளருகிறது என்றதும், ஜப்பானில் என்ன செய் தார்கள்? உயர்மட்டக் குழு ஒன்றை ஏற்படுத்தினுர் கள். அரசாங்கம் 500மில்லியன்டாலரும்தொழிலதிபர் கள் 500 மில்லியன் டாலரும் போட்டார்கள். விஷயங் களை ஆராய்ந்து, தங்கள் நாடு மேம்படத் திட்டம் தீட்டிச் செயல்படுகிருர்கள்.

நாடு போகிற திசை தெரிந்தும் நாம் என்ன செய்கிறேம்? எங்கே வந்தது அக்கறை?

தன் காலிலேயே நிற்க, தமிழ்ச் சமுதாயம் தயங்கு கிறது என்பது உண்மையானுல், நமது பாரம்பரியம் அதுவானுல், அதை மாற்ற நாம் என்ன செய்தோம்?

என்ன செய்யப் போகிறேம்? நாடு போகும் திசையைக் கொஞ்சம் எண்ணிப் பாருங்கள்.

5

# தொழிலில் ஆர்வம் கொள்க

''வேலை, வேலை' என்று தேடி அலைபவர்கள், 'என்னுடைய வேலையை நான் உற்பத்தி செய்வேன், நான் ஒரு தொழில் செய்வேன்' என்று ஏன் எண்ணுவதில்லை; நம்மிடையே—நம் சமுதாயத்தில் அப்படிப்பட்ட மனப் பழக்கம் ஏன் இல்லை? 'படித்தவுடன் ஒரு வேலை தேடு' என்று எல்லாரும் நினைக்கிறார்களே ஒழிய படித்தவுடன் ஒரு வியாபாரத்தைச் செய்வோம், ஒரு தொழிலைச் செய்வோம் என்று ஏன் எண்ணுவதில்லை?

அப்படி எண்ணும் பழக்கம் நம் சமுதாயத்தில் இருக்குமானால், வளரும் இளைஞன் பார்க்கிற ஒவ்வொரு பொருளிலும், நிகழ்கின்ற ஒவ்வொரு சம்பவத்திலும், சந்திக்கின்ற ஒவ்வொரு மனிதரிடமும் இது, இவை, இவர்கள்-என்ன தொழிலுக்கு எப்படி உதவக் கூடும் என்று சதா சிந்திப்பான்.

எண்ணம்தான் விதை.

ஒரு 45 நாள்-ஒரு மண்டல காலம்—நீங்கள் தொழில் தொழில் என்று எண்ணிக் கொண்டு, கிராமத்தையோ சென்னை நகரத்தையோ பவனி

வருவீர்களானால் ஆயிரம் யோசனைகள் தோன்றும். உதவக்கூடிய அரிய மனிதர்களைச் சந்திப்பீர்கள். வாய்ப்பு என்பது பிறர் எடுத்து நம்மிடம் தருவதல்ல. நம் கற்பனையால், துணிச்சலால், விடா முயற்சியால் நாம் உருவாக்குவதுதான் வாய்ப்பு. வேலை வாய்ப்பும் அப்படித்தான்.

தொழில் செய்யத் துவங்குபவர்களின் சில பிரச்னைகள் என்னவென்றால், திடீரென்று குபேரனாகி விடவேண்டும் என்று பலர் எண்ணுகிறார்கள். உலகில் எதுவுமே திடீரென்று நிகழ்ந்துவிடுவதில்லை. பூவாகிப் பிஞ்சாகிக் காயாகித்தான் கனி கிடைக்கிறது. விதை, செடியாகி, மரமாகித்தான் நிழல் தருகிறது. சிப்பியிலே முத்து உடனே விளைந்துவிடுவதில்லை. கோலார் தங்கச் சுரங்கத்தில் யாரும் தங்கத்தை அப்படியே பாளம் பாளமாக வெட்டி எடுத்து வருவதில்லை. தங்க ரேகை படர்ந்த பாறையைத் தூளாக்கி, கழுவி, சலித்து, ரசாயன முறையில் பிரித்துத்தான் தங்கம் எடுக்கிறார்கள்.

''திறமையை உபயோகிக்கும் அரிய வாய்ப்பாகத் தொழிலைக் கருதுங்கள்'' என்று கூறுகிறார்கள் அனுபவஸ்தர்கள். அப்படித் திறமையையும் தரத்தையும் முன் வைத்து உழைக்கும் போது பணம் தானே வரும்; தேவைக்கு மேல் வரும்.

தொழில் துவங்குபவர்கள் சந்திக்கும் இரண்டாவது பிரச்னை: சுலபமாக—உழைக்காமல்—சாமர்த்தியத்தின் மூலம் பணக்காரனாக முடியும் என்று நினைக்கிறார்கள். காரணம்? ஒன்றுமில்லாதிருந்த சிலர் சில ஆண்டுகளில் மிகச் செல்வந்தர்களாகி இருப்பதைப்

பார்ப்பவர்கள், ஏதோ அவர்கள் சுலபமாகப் 'பேத்து மாத்து' செய்து பணக்காரர்களாகிவிட்டதாகத் தவருக எண்ணுகிருர்கள். இவ்வுலகில் ஒவ்வொரு விளைவுக்கும் முன்னுல் ஒரு காரணம் இருக்கிறது. காரணத்திலிருந்து காரியம் பிறக்கிறது.

உழைப்பிற்கேற்ற ஊதியம் என்ற ரீதியில்தான் சமுதாயம் பண்டமாற்று வியாபாரம் நடைபெறு கிறது. ஓர் ஆசிரியர் தனக்குத் தெரிந்த எல்லா விஷயங்களையும் சொல்லிக் கொடுக்கிருர் என்பதற் காக அவரது ஊதியம் மற்றெல்லோரையும்விட அதிகமாவதில்லை. சமுதாயத்தின் பல பகுதிகளும் ஒன்றை ஒன்று நம்பி, இணைந்து செயல்படுகின்றன. இந்த நியாயத்தைப் புறக்கணிக்கும் எதுவும் நெடு நாள் ஜீவிப்பதில்லை.

ஒருவன் ஏன் தொழில் செய்ய ஆசைப்படுகிருன்? ஒரு மனிதனது எல்லாவிதத் திறமைகளையும் வெளிக் கொணரும் வாய்ப்பு தொழிலில் இருக்கிறது.

எனது நண்பர் தாலூகா ஆபீசில் வேலை பார்த் துக்கொண்டிருந்தவர், தனது 35-வது வயதில் திடீரென வேலையை விட்டார். ஏனென்று கேட் டேன்.

''என்னுல் மக்கள் ருசியைக் கணிக்க முடியும். என்னுல் எளிதில் எதையும் தர்க்கரீதியாக ஆராய்ந்து, பிறர் எனது கருத்தை ஏற்றுக் கொள்ளச்செய்ய முடியும். எனக்கிருக்கும் நண்பர்கள் கூட்டத்தை வைத்துக்கொண்டு நான் பல காரியங்களைத் தொழில் களைச் செய்யமுடியும்.

தாலூகா ஆபீசில் எனது எல்லாவிதத் திறமை களுக்கும் குணங்களுக்கும் வாய்ப்பில்லை. மேலும்

அங்கே நான் பெற்ற சம்பளம் என் திறமைக்கு ஈடல்ல என்ற குறை என்னை உறுத்திக்கொண்டே இருந்தது'' என்றார். நகரிலே பெரிய எண்ணெய்க் கடை வைத்து, தான் வாங்கிய சம்பளத்தைப்போல் நான்கு மடங்கு வருமானத்தைப் பெறுகிறார் என நண்பர் இப்போது.

மனித வாழ்க்கை-ஒரு மனிதனின் முழுத் திறமைகளையும் வெளிக்கொணரும் ஒரு முயற்சி. திறமைகள் வெளியே வரும்போது ஓர் ஆத்ம திருப்தி ஏற்படுகிறது. நமக்கும் பிறருக்கும் பயன் ஏற்படுகிறது. பலர் தங்களுக்கிருக்கும் திறமைகளை உணராமலே வாழ் நாளைக் கழித்து விடுகின்றனர். பலர் தங்கள் திறமைகளை உணர்ந்தும் அதற்கு ஒரு வடிகாலும் வாய்ப்பும் அளிக்காமல், இருந்த இடத்திலேயே இருந்து ஒரு செக்குமாட்டின் வாழ்க்கையாகத் தங்கள் வாழ்வை முடித்துக் கொள்கின்றனர்.

ஒரு கலைஞன் தன் கலையில் தன்னைக் காட்டுவது போல், தன் முழுத்திறமையும் வெளிக்கொணர்ந்து எல்லோரையும் மகிழ்விப்பது போல, ஒவ்வொரு மனிதனும் அவரவர் துறையில் தங்கள் முத்திரையை பதிக்க முடியும்.

சுய முன்னேற்றப் புத்தகங்கள் பல எழுதிய ஆராய்ச்சியாளர் நெப்போலியன் ஹில், மனிதஉள்ளத்தில் ஒன்றைப் பற்றித் தணியாத ஆசை எழும்போது அதை நிறைவேற்றும் திறன் அந்த ஜீவனுள் ஐக்கியமாகியிருக்கிறது என்பதுதான் உண்மை. அதனால் தான்—அந்தத் துடிப்பின் விளைவாகத்தான்—அந்த ஜீவனுக்கு அந்த எண்ணமே எழுகிறது' என்று எழுதுகிறார்.

என்ன அருமையான விளக்கம் பாருங்கள்! நாம் பயப்படத் தேவையில்லை. நம்மால் முடியுமா என்று சந்தேகப்படத் தேவையில்லை. எப்படித் தொழிலார்வம் ஏற்படுகிறது? வெளிவரத் துடிக்கும் திறமைகளின் மொத்த உருவம் நமது தொழிலார்வம் என்ற விதை. விதையின் ஜீவத்துடிப்பு வாழ்க்கையை அவாவுகிறது. எண்ணத்தின் ஜீவத் துடிப்பு செயல்களாக, திறமைகளாகப் பரிமளிக்கிறது.

ஆகவே, தொழில் பற்றிய எண்ணம் வரும்போது தொடருங்கள். கற்பனையைப் பறக்க விடுங்கள். எண்ணங்களை ஆசைதீர மேயவிடுங்கள்.

கற்பனைக்கு வானம்தான் எல்லை. நமது சாதனைக்கும் நமது கற்பனைதான் எல்லை.

பின் ஏன் சிலர் கற்பனைக்கு மூடி போடுகிறார்கள்? நம்மால் முடியுமா என்ற மலைப்பு, இவ்வளவுதான் முடியும் என்று நாமாக நியமித்துக் கொண்ட அளவுகோல், தோற்றுப்போய் விடுவேனோ என்ற பயம், பிறர் என்ன சொல்வார்களோ என்ற சந்தேகம்—இவை எல்லாம் ஆர்வத்திற்கு முட்டுக்கட்டையாக—மூடியாக—நிற்கின்றன.

வாழ்க்கை என்ற ஜாடிக்குள் ஆக்கசக்தி என்ற மிகப் பெரிய தேவதை நம் ஒவ்வொருவருள்ளும் இருக்கிறது. ஜாடியின் மூடியைத் திறந்துவிடுங்கள். நம் வாழ்வும் நாடும் மலரட்டும்.

6

# விதியையும் வென்று வாழலாம்

''இந்தத் தொழில் செய்து பணம் சேர்ப்பேன்!'' என்று ஆவலுடன் தொழிலில் இறங்கும் மனிதன் நம்மைப் போன்றவன்தான். அவனும் நம்மைப் போன்ற கஷ்ட நஷ்டங்களைச் சமாளிக்கிறான். ஆனால், அவன் சளைப்பதில்லை. லட்சியத்திலேயே குறியாயிருக்கிறான். தடம் தவறிப் போனாலும் திரும்பத் திரும்ப மீண்டும் அதே பாதைக்கே திரும்புகிறான், உழைக்கிறான்.

இந்தக் குணத்தை என்ன என்று சொல்வது? துணிச்சல் என்று கூறலாம். சளைக்காத மனம் என்று கூறலாம். விடாமுயற்சி என்று கூறலாம். ஆனால், இவை எல்லாவற்றையும்விட மிக உயர்வான வார்த்தை தேவைப்படுகிறது அந்த மனிதனது சாதனையை விளக்க.

சொந்தத் தொழில் புரிந்து முன்னுக்கு வருபவனும், ''நான் விரும்பும் தொழில்-கலை—இது. இதில் புகுந்து பிரகாசிப்பேன்'' என்று உழைப்பவர்களும் தங்கள் விதியைத் தாங்களே நிர்ணயித்துக்கொள்

கிறார்கள். தங்கள் வாழ்க்கையைப் பற்றித் திட்டமிடு கிறார்கள்; உழைக்கிறார்கள்; பலன் பெறுகிறார்கள். விதியை நிர்ணயிக்கும் பெருமக்கள் அவர்கள் ''என் வாழ்வு என் கையில்; என் விதி என் கையில்'' என்று இவர்கள் உலகம் அறியக் கூறுமல் இருக்கக்கூடும். ஆனல், இவர்கள் தங்கள் விதியைத் தாங்களே நிர்ண யிக்கிறார்கள்.

ஓர் அணை கட்ட விரும்புபவர்கள் என்ன செய் கிறார்கள்? ஆற்றின் ஓட்டத்தையும் தண்ணீர் தேங்கி நிற்கக்கூடிய இடத்தின் அமைப்பையும் முதலில் ஆராய்கிறார்கள். பின் திட்டமிடுகிறார்கள்; பின் கட்டி முடிக்கிறார்கள். வீடு கட்டுவதும், கோயில் கட்டுவதும், அணை கட்டுவதும்—எல்லாம் திட்டமிட்டுச் செய்யப் படும் காரியங்கள்.

அதேபோல நம் வாழ்க்கையை ஏன் திட்டமிட்டுச் செயல்படுத்தக்கூடாது? நாம் விரும்புவதை அடையக் கூடாது? வீடு கட்ட—அணை கட்ட—திட்டமிடும் நாம், நம் வாழ்க்கையின் எதிர்காலத்தைப்பற்றி ஒரு திட்டம் அமைக்க, அதன் வழியில் செயல்பட ஏன் அஞ்சு கிறோம்?

ஏன்...?

அப்படி வாழ்க்கையைத் திட்டமிட்டு நடத்திச் செல்ல முடியும் என்று நம்பும் மனப்பழக்கம் நம்மிடம் இல்லை. வாழ்க்கை என்று வந்ததும் ஏதோ இனம் புரியாத புதிர்-அச்சம்-நம்மை ஆட்கொள்கிறது.

''விதி நம் வாழ்க்கையை எப்படி இழுத்துச்செல் லுமோ?'' என்ற அச்சம்-சந்தேகம் நம்மை ஆட்கொள்

கிறது. ஆக, வாழ்வில் சம்பவங்கள் வரவர அதற்கேற்ப நாம் ஈடுகொடுக்க முயல்கிறோமே ஒழிய, சம்பவங்களை நாம் விரும்பும் வழியில் அமைப்பதில்லை. ஏனெனில், ''வாழ்க்கை நம் கையில் இல்லை'' என்ற ஒரு தத்துவம் நம்மை ஆழ்மனத்திலிருந்து ஆட்டிப் படைக்கிறது.

''நாளை நான் இப்படிச் செய்வேன்!'' என்று யாராவது திடமான -தீர்மானமான—குரலில் கூறும் போது, மேனாட்டில்கூட சிலர் பதிலுக்குக் கூறுவார்கள். ''உன் ஆசைகளைச் சத்தம் போட்டுச் சொல்லாதே! பிசாசுகளும் தெய்வங்களும் கேட்டுக் கொண்டிருக்கின்றன'' (அவை நடக்காமல் செய்துவிடும்). என்று.

தன்னம்பிக்கை அற்ற மனிதன் இப்படிப் பல விதங்களிலும் தன் பயத்துக்குச் சோடனைசெய்து கதை அமைத்திருக்கிறான்.

விதி என்ற சொல் மனித மனத்தை முடக்கிப் போட்டிருக்கிறது.

அமெரிக்காவிலுள்ள சிகாகோ நகரில் 1920-ல் மார்ஷல் பீல்டு என்பவரின் மிகப்பெரிய கடை தீக் கிரையாயிற்று. ஒரு பசுமாடு காலை உதைத்து அரிக்கன் லாந்தரைக் கவிழ்க்கப் போக, தீ பரவி அந்தப் பகுதி யையே எரித்து விட்டது. இன்ஷ்யூரன்ஸ் எல்லாம் இல்லாத காலம்.

மறுநாள் பஸ்மமாகி இருந்த தன் கட்டடத்தின் முன்வந்து பார்த்த மார்ஷல் பீல்டு என்ன சொன்னார்? ''நான் இதே இடத்தில் இதைவிடப்பெரிய கடையைக் கட்டுவேன்!'' என்றார். ஆம்! அப்படியே கட்டி முடித்தார்! 'விதி' என்று அவர் விட்டிருக்கலாம். அவர்

அப்படி விடவில்லை. தன் விதியைத் தானே நிர்ண யித்தார்.

விதியைப் பற்றிப் பயப்படுபவர்கள் சிலப்பதிகாரக் கதையைப் படிக்கவேண்டும். இளங்கோவும் அவரது அண்ணன் சேரன் செங்குட்டுவனும் அரசவையில் அமர்ந்திருக்கிறார்கள். அரசவை சோதிடர் வருகிறார், கூறுகிறார். ''அரசே! இவ்விரண்டு இளைஞர்களில் இளைய வரே பட்டம் ஏற்று உலகு முழுவதையும் ஒரு குடைக் கீழ் ஆளுவார்'' என்று-அண்ணனின் முகம் இது கேட்டு சுணக்கமடைந்ததைக் கண்ட இளங்கோ, ''நாட்டை அண்ணனே ஆளட்டும். நான் துறவு பூண்கிறேன்'' என்று 'குணவாயில் கோட்டத்து அரசு துறந்திருந்த' இளங்கோ அடிகளாக மாறுகிறார்.

விதியை இளங்கோ ஒரு கண நேரத்தில் மாற்றி அமைக்கிறார். விதியை இளங்கோ தானே நிர்ணயிக் கிறார்.

**கா**லஞ்சென்ற பிரபல நாடகாசிரியர் பம்மல் சம்பந்த முதலியார் ஒரு சமயம், ''என் மனைவியை எனக்குப் பிடித்திருந்தது. ஆனால், கல்யாணம் செய்து கொண்டால் நான் இறந்து போய்விடு வேன் என்று சோதிடர் கூறவே, கல்யாணம் தடைப்படும் போல் இருந்தது. ஆனால், நான் விடாப் பிடியாக நின்றதால் எனக்கும் என் மனைவிக்கும் கல்யாணம் நடைபெற்றது. இப்போது எனக்கு 80 வயது ஆகிறது. 'கல்யாணத்தின்போது ஒரு தாலி, அறுபதில் ஒரு தாலி, எண்பதில் ஒரு தாலி' என்று மூன்று முறை என் மனைவிக்குத் தாலி கட்டினேன். நாங்கள் இன்பமாக இருக்கிறோம்'' என்றார். தன்

வாழ்க்கை விதியைத் தானே நிர்ணயித்தார் பம்மல் சம்பந்த முதலியார்.

"முன்வினைப் பயன்கள் என்பதெல்லாம் பொய்யா?" என்று சிலர் கேட்கக்கூடும். முன்வினைப் பயன் என்பதெல்லாம் காரணகாரியம் போல் நம் வாழ்வைத் தொடர்வனதான். ஆனால், அத்தகைய எண்ணங்களினால் நாம் இந்த வாழ்க்கையைக் கெடுத்துக்கொள்ளக்கூடாது; நாம் நம்மை முடக்கிக் கொள்ளக் கூடாது. "வாழ்க்கை என்பது வாழ்வதற்கான அருமையான வாய்ப்பு. கடவுள் நமக்கு அளித்திருக்கிறார்; அதை நாம் தவற விடக்கூடாது" என்ற உணர்வோடு நாம் செயல்படவேண்டும்.

விதியை மதியால் வெல்லலாம். விதியைப் பிரார்த்தனையால் வெல்லலாம்.

ஆகக் கூடி, "இது என் வாழ்க்கை. இதை நான் விரும்பியபடி நான் அமைப்பேன்!" என்ற உறுதியுடன் நாம் முயலவேண்டும். அப்படி முயன்றவர்களால்தான் இவ்வுலகம் பல நன்மைகளைக் கண்டு இருபதாம் நூற்றாண்டின் விஞ்ஞான யுகமாக மாறி இருக்கிறது.

சந்திர மண்டலத்திற்கு மனிதனை அனுப்பியது திட்டமிட்ட செயல். எண்ணம், நம்பிக்கை, திட்டம், செயல் என்று விதை கனியைத் தருகிறது; காரியங்கள் நிகழ்கின்றன.

வாழ்க்கை என்பது வருகின்ற சம்பவங்களுக்கு ஈடு கொடுத்துக் கொண்டிருப்பதல்ல. அது அன்றாடங் காய்ச்சி வாழ்க்கை.

வாழ்க்கை என்பது மலர்த் தோட்டம்; கனித் தோட்டம். தெளிவுடனும் தீர்க்க தரிசனத்துடனும் திட்டமிட்டு முயல வேண்டிய ஒரு நிர்மாணப் பணி அது. தென்றலையும், குளிரோடையையும், மலையையும், அலை கடலையும், உண்பதற்கு வேண்டிய பயிர் பச்சைகளையும், உறவாட மனித உயிர்களையும் ஆண்டவன் படைத்திருக்கிறான். சிரித்து மகிழ்ந்து நமக்கும் பிறருக்குமாக வாழ்ந்துவிடுவதுதான் வாழ்க்கை. அந்த வாய்ப்பைத் தவற விட்டுவிடாதீர்கள்.

# 7

# பொருளாதாரச் சிந்தனையை வளர விடுக

செல்வந்தனுவதற்குச் சிந்திப்பதுதான் அடிப்படை என்ருல் எல்லோராலும் தான் சிந்திக்க முடியுமே, அது எளிய வழியாயிற்றே—என்பன போன்ற எண்ணங்கள் உங்கள் மனத்தில் எழக்கூடும்.

நம் மனத்தில் தோன்றும் எண்ணமானது நாளடைவில் திடமான நம்பிக்கையாய் மாறுகிறது. திடமான நம்பிக்கை நம்மிடம் செயலைத் தூண்டுகிறது. திரும்பத் திரும்பச் செய்யப்படும் செயல் நமது பழக்கமாய் மாறுகிறது. நமது பழக்க வழக்கங்களே நமது குணநலன்களாகத் (Character) திகழ்கின்றன. நமது குணநலன்களே நமது விதியை—வெற்றியை நிர்ணயிக்கின்றன. இப்படி அழகாக—எண்ணம் எப்படி விதியாக மாறுகிறது என்பதை—ரால்ப் வால்டோ டிரைன் என்ற தத்துவஞானி எழுதி வைத்திருக்கிருர்.

பல படித்த இளைஞர்கள் இங்கே அமெரிக்காவுக்கு மேற்படிப்பிற்காகவும் ஆராய்ச்சிப் படிப்பிற்காகவும் வருகிருர்கள். அப்படி ஒருவராய் வந்த என் நண்பர்

டாக்டர் கே. பரஞ்சோதி ஒரு சமயம் கூறினர்: ''நான் மிகமிக கஷ்டப்பட்டுப் படித்து ஆய்வுக்கூடத்தில் இரவு பகலாக ஆராய்ச்சி செய்து டாக்டர் பட்டம் வாங்கினேன். ஆய்வுக் கூடத்தில் வேலே செய்த போது எனக்கு நிறைய அவகாசம் இருந்தது சிந்திப்பதற்கு. அப்போதெல்லாம் புகழ் பெற்ற விஞ்ஞானிகளேப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருப்பேன். எப்படி—ஒரு சாதாரண எடிசன்-காது செவிடாக வாழ்க்கையைத் தொடங்கிய எடிசன்—ரயிலில் பேப்பர் விற்கும் பையனுக வாழ்வைத் தொடங்கிய எடிசன்—மாபெரும் விஞ்ஞானியாய் மாறினர் என்று யோசிப்பேன். நோபல் பரிசு பெற்ற இந்திய விஞ்ஞானியான ஹரி கோவிந்த குரானு ஆராய்ச்சிக்காக லண்டன் சென்றபோது அவரது திறமையில் பெரிதும் நம்பிக்கை வைக்காத அவரது பேராசிரியர் டாட். அவருக்கு ஓர் உதவாக்கரை விஷயத்தைக் கொடுத்து அதை ஆராயுமாறு கூறினர்.

இவர்களெல்லாம் எப்படி உலகம் புகழும் சிறந்த விஞ்ஞானிகளாய் மாறினர்கள் என்று யோசிப்பேன். புதியன கண்டுபிடிக்கும் மனேபாவம் இவர்கள் வெற்றிக்கு அடிப்படை என்பதை அறிந்தேன். தாங்கள் எண்ணிய விளக்கத்தைச் சோதனேச் சாலேயில் செய்து அவர்கள் நிரூபிக்கிறுர்கள். ஆக, எதையும் கண்டுபிடிக்குமுன் இவர்கள் தீவிரமாக—இரவு பகலாக—ஒரு கருத்தைப் பற்றிச் சிந்திக்கிறுர்கள். அதில் ஊறிப் போகிறுர்கள். சிந்திப்பதுதான் மூலம். சிந்திப்பதிலும் ஏதோ ஒரு வழி இருக்கவேண்டும். ஒரு குறிப்பிட்ட பாதை வழியே சிதம்பரத்திலிருந்து சென்னே செல்வதுபோல, ஒரு குறிப்பிட்ட எண்ணப்

பாதை வழியேதான் இவர்கள் தங்கள் இலட்சியத்தை அடைந்திருக்கிருர்கள். அந்த எண்ணப்பாதை என்ன? அதை எல்லோரும் பயில முடியுமா? நடைமுறையில் கையாள முடியுமா?

''இது போன்ற எண்ணங்களே நான் டாக்டர் பட்டம் பெற்றதிலிருந்து என்னே அலேக்கழித்து வந்தன.''

விஞ்ஞான கண்டுபிடிப்புகளுக்கு ஓர் எண்ணப் பாதை உண்டு. அதைத் தெரிந்து, அதன் வழியே நடந்தோமானுல் நம்மாலும் கண்டுபிடிக்க முடியும். இது அதிர்ஷ்டமல்ல.

வாழ்க்கையில் பலர், பல காரியங்கள் மூலம் நிறைவைக் காணுகிருர்கள். விஞ்ஞான ஆராய்ச்சிக் கண்டுபிடிப்பு சிலருக்கு லட்சியமாக அமைகிறது. சிறப்பாக விவசாயம் செய்வது சிலருக்கு லட்சியமாக அமைகிறது. ஆசிரியராக, அரசியல்வாதியாக, நாட்டிய நட்சத்திரமாக என்று பல்வேறு லட்சியங்களிலும் மனிதவர்க்கம் நிறைவுகாண முயல்கிறது. ஆனுல், இதில் எல்லாவற்றிற்கும் அடிப்படை செல்வம்தான். நாட்டியமாடுபவர் பணம் பெற்ருல்தான் வீட்டில் சோறு பொங்கும். விஞ்ஞானி சம்பளம் பெற்ருல் தான் தன் வயிற்றையும் குடும்பத்தையும் கவனித்துக் கொள்ளமுடியும்.

ஆகவே எல்லாவற்றிற்கும் அடிப்படையாகவும் ஆதாரமாகவும் இருப்பது செல்வம்தான். அதன் வருவாயிலேதான் வயிறு நிறைவும் மனநிறைவும் அமைகின்றன.

அந்தக் காலத்திலே உழவின்மூலம் பொருளை உற்பத்தி செய்தார்கள். இன்றோ உழவும் தொழிலும் செல்வத்தைச் சேர்க்கும் தலையாய சாதனங்களாக இருக்கின்றன. நமது ஊரில் செல்வந்தனுகும் ஆசை, ஆர்வம், முயற்சி எல்லாம் இளமைப் பருவத்தில் வீட்டிலும் சரி, பள்ளிகளிலும் சரி போதிக்கப்படுவதில்லை. நமது சமுதாயத்தில் இந்த ஆர்வம் இலைமறை காய்போல சமுதாய எண்ணப்போக்கில் நிற்கிறது.

மேல்நாடுகளிலோ பொருளாதாரப் பாடம், ஆரம்ப நாட்களிலேயே ஆரம்பப் பள்ளிகளில் சொல்லிக் கொடுக்கப்படுகிறது. பள்ளி முடிந்ததும் ஓர் ஓய்வு நேர வேலை செய்து சம்பாதிக்க முயல்கிறான் ஒரு பள்ளி மாணவன். கல்லூரிகளிலோ சுமார் 42 சத விகித மாணவர்கள் எந்தக் காரணத்தை முன்னிட்டாவது தொழில் செய்வது சம்பந்தமான வியாபாரக் கண்ணோட்டம் தரும் பாடங்களைப் படிக்கின்றனர்.

மேல்நாடுகள் பொருளாதாரத்தில் சிறந்திருப்பதற்கு ஒரு முக்கிய காரணம் அங்கே பொருளாதாரச் சிந்தனைகள் வளர்க்கப்படுகின்றன. எல்லோருக்கும் மத்தியில் பொதுவாகப் பேசப்படுகின்றன; பத்திரிகைகளில் எழுதப்படுகின்றன; விவாதிக்கப்படுகின்றன. பள்ளிகளிலும் பல்கலைக் கழகங்களிலும் போதிக்கப்படுகின்றன.

நாம் இங்கே என்ன செய்கிறோம்? எதை நம் இளைஞர்களுக்கு முன் வைக்கிறோம் என்று கொஞ்சம் எண்ணிப் பாருங்கள்.

சினிமாவை.

அரசியலை.

சினிமா கிசுகிசுக்கள் இங்கே எழுதப்படுகின்றன. அரசியல் நம் ஆதார சுருதியாக நம் வாழ்க்கையில் மேவி நிற்கிறது.

'பொருளில்லார்க்கு இவ்வுலகமில்லை' என்று திருவள்ளுவரே கூறிவிட்ட பிறகு, அந்தக் குறளின் பொருளை நாம் அன்றாட வாழ்வில் கண்டு அனுபவித்து நலிவுறும்போது நாம் இன்னும் எதற்காகக் காத்திருக்கிறோம்?

மனிதனிடம் உள்ளவை இரண்டு. உள்ளம், உடல்.

மனித ஆத்மா உரிமைகளுக்காகப் போராடுகிறது. நீதிக்காக, நேர்மைக்காக, உண்மைக்காக, சமத்துவத்திற்காக, சுதந்திரத்திற்காக என்று புலப்பொருளைக் கடந்த தத்துவங்களுக்காகப் போராடுகிறது.

அந்தப் போராட்டமும் உடலில் உயிர் இருக்கும் போதுதான் சாத்தியமாகிறது. ஆகவேதான், உடல் தன் ஜீவியத்திற்காக, தன் வாழ்க்கை வசதிகளுக்காக, இவற்றினால் ஏற்படும் மன நிறைவிற்காகப் போராடுகிறது. இந்த உடல் தேவைகளையும், நம் மனம் தான் தன் தேவையாக எடுத்துக்கொண்டு பருப்பொருளுக்காகப் பாடுபடுகிறது. அதனால்தான் கூறுகிறார்கள், உடல் ஒரு கோயில், உள்ளம் அதன் ஆண்டவன் என்று. கோயிலும் பூசனையும்கூட வயிற்றுப் போராட்டத்திற்குப் பின்தான் என்று கூறுகிறார் திருவள்ளுவர். ஆனால் இப்படி உடலுக்கு உதவுவதும் உள்ளம்தான்.

ஆகவே, நாம் சிந்திப்பதன் மூலம்தான் நம் வாழ்க்கைத் தேவைகளுக்கு ஒரு வழி காண முடியும்.

மனம் எப்படிச் சிந்திக்கிறது என்பதை அறிந்து கொள்ள மனத்தைத்தான் நாம் உபயோகிக்கிறோம். அதே போல செல்வத்தை எப்படிச் சேர்ப்பது, வசதியாக பொருளாதார நிறைவுடன் வாழ்வது என்பதைத் தெரிந்து கொள்ளவும் நாம் மனத்தைத் தான் உபயோகிக்க வேண்டும். மனம் எல்லாவற்றையும் சிருஷ்டிக்க வல்லது.

நமக்கு முன்னே வாழ்ந்தவர்கள் அது விஷயத்தில் எப்படித் தங்கள் மனத்தை உபயோகித்தார்கள் என்று நாம் சிந்திக்க வேண்டும். இன்றைய மேல்நாடுகளில் எப்படிச் சிந்தித்துச் செல்வந்தராயிருக்கிறார்கள் என்பதைப் படித்துப் புரிந்துகொள்ள வேண்டும். பணக்கார நாடுகளின் சரித்திரத்தை நாம் படிக்க வேண்டும். முன்னேறிய செல்வந்தர்களின் வாழ்க்கை வரலாறுகளை நாம் உன்னிப்பாகப் படிக்கவேண்டும். ஏனெனில்...

இது ஜீவாதாரப் போராட்டம்.

அதற்கொரு வியூகம் வகுத்து நம்மால் வெற்றி காண முடியுமா? நிச்சயமாக. முதலாவதாக, நாம் செல்வம் சேர்க்கும் எண்ணங்களில் மனத்தை ஊறப் போட வேண்டும்.

# 8

# எண்ணத்தின் வலிமை

டாக்டர் பரஞ்சோதி விஞ்ஞானியாகும் முறையைப் பற்றிச் சிந்தித்தது போல, பல சிந்தனுவாதிகள், எழுத்தாளர்கள், தொழிலதிபர்கள் செல்வந்தனுகும் முறை ஏதாவது இருக்கிறதா என்று சிந்தித்திருக்கிருர்கள்; ஆராய்ந்திருக்கிருர்கள்.

இவர்களுள் பலரது பெயரை நாம் இங்கே குறிப்பிட முடியும். நெப்போலியன் ஹில் எழுதிய 'சிந்தி; செல்வத்தைச் சேர்' (Think and grow rich) என்ற புத்தகம் பிரபலமான புத்தகம். பயனுள்ள புத்தகம். என்னைப் பொறுத்தவரை ஜேம்ஸ் ஆலன் எழுதிய 'எண்ணிய வண்ணம் அமையும் வாழ்வு' (As man thinketh) என்ற புத்தகம்தான் வாழ்க்கைச் சிந்தனைகளுக்கெல்லாம் எளிய மூலாதாரம். ஜேம்ஸ் ஆலன் பலகாலம் சிந்தித்து ஆராய்ந்து ஒரு கருவூலத்தை நம்முன் வைக்கிருர். அந்தக் கருவூலத்தை ஆழ்ந்து படிக்கும்போது நாம் எந்தத் துறையிலிருக்கிருேமோ அதற்கேற்ப அங்கே வழிகள் புலப்படுமாறு புத்தகம் நம்மை அழைத்துச் செல்கிறது. ஜேம்ஸ் ஆலனின் புத்தகத்தைத் தினமும் படிக்கவேண்டிய

வேத புத்தகமாக நாம் கொள்ளவேண்டும் என்று என் வாசகர்களுக்குக் கூறுவேன். ஏனெனில் ஜேம்ஸ் ஆலன் ஒரு ஞானி. தீர்க்கதரிசனம் பெற்றவர். அவர் எழுத்து எக்காலத்திற்கும் பயன்படும். அவர் எண்ணங்கள் நம்மை உயர்த்தும் சக்தி வாய்ந்தவை.

ஆனாலும் அமெரிக்காவில் புதிது புதிதாகப் புத்த கங்கள் வெளிவந்து கொண்டிருக்கின்றன. அவை ஒவ்வொன்றும் நம் கண்களைப் பல விதங்களில் திறந்து விடுகின்றன; பல வகைகளில் நம் மனத்திற்கு ஆர்வ மூட்டுகின்றன; நம்மைச் செயல்படத் தூண்டுகின்றன.

'தன்னம்பிக்கை பெற', 'செல்வம் சேர்க்க', 'வாழ்க்கையைச் சிறப்பாக வாழ' வழிகாட்டும் புத்த கங்களைக் குறிப்பிடுங்கள் என்று எனது வாசகர்களிட மிருந்து வரும் கடிதங்கள் ஏராளம். நானும் பொறு மையோடு ஜேம்ஸ்ஆலன், நெப்போலியன் ஹில் பற்றி எழுதுவேன். அத்துடன் மால்கம் மரல்ட்ஸ் என்பவர் எதிய சைக்கோ சைபர்னடிக்ஸ் (Psycho cybernetics) என்ற புத்தகம் பற்றியும் டேவிட் ஷ்வார்ட்ஸ் எழுதிய 'பெரிதாகச் சிந்தியுங்கள் அதிலே மந்திர சக்தி இருக் கிறது' (The magic of thinking big) என்ற புத்தகம்பற்றி யும் கிளாட் பிரிஸ்டல் என்பவர் எழுதிய 'நம்பிக்கை கொடுக்கும் மந்திர சக்தி' (The magic of believing) என்ற புத்தகம் பற்றியும் நான் குறிப்பிடுவதுண்டு. சமீபத்தில் என்னைக் கவர்ந்த புத்தகம் வாலஸ் டி வாட்டில்ஸ் என்பவர் எழுதிய 'செல்வந்தனுவதில் வெற்றி' (Financial success) என்பதாகும்.

''உண்மையைக் கூற ஒரு புத்தகம் போதாதா?'' என்று நீங்கள் கேட்கக்கூடும். உலகிற்கு ஒரு புத்தர்

போதாதா? ஏன் ஏசு என்றும் நபிகள்நாயகம் என்றும் சங்கரர் என்றும் காந்தி என்றும் நம்மிடையே பல மகான்கள் தோன்றினார்கள்?

காலத்திற்குக் காலம் சொல்லும் வகை வேறுபடு கிறது. ஆகவேதான் இன்றைய நிலையில் நமக்கு ஒரு மகாத்மா காந்தி தேவைப்படுகிறார். மேலும், பல் வேறு வகைகளில் விஷயங்கள் திரும்பத்திரும்ப கூறப் படும்போதுதான் நம் மனத்தில் அவை ஆழமாகப் பதி கின்றன.

ஆகவே, நல்லது என்று படும் எல்லாவற்றையும் படியுங்கள் என்று கூறுவேன். ஒரு வரி உபயோகப் படக்கூடியதாக இருந்தாலும் அதைத் தனியே எடுத்து எழுதி வைத்துக் கொள்ளுங்கள். அதைத் தினமும் படி யுங்கள். அதில் கூறியிருக்கிறபடி செயல் புரிய முயலுங்கள்.

அப்படி திரும்பத் திரும்பச் செயல்படும்போது நாமே நம்மையறியாமல் மாறி விடுகிறோம். திருக் குறளைத் திரும்பத் திரும்பப் படித்து அதை வாழ்க்கை யிலும் பயிலும் ஒரு மனிதர் திருவள்ளுவருக்குச் சமான மான இன்றைய மனிதராய் நம்மிடையே உலவி வரு வார். எதைப் பற்றி நாம் சிந்திக்கிறோமோ நாம் அதுவாகவே மாறி விடுகிறோம். இப்படி உபநிடதம் கூறுகிறது.

மனித மனத்தில் தோன்றும் எண்ணம் மெல்லிய பஞ்சாடை போன்றது. ஆனால் திரும்பத் திரும்ப அதே விஷயத்தை எண்ணும்போது நாம் ஒன்றன்மேல் ஒன்றாக மெல்லிய பஞ்சாடைகளை அடுக்குகிறோம். அப்போது அது உறுதி பெறுகிறது. எளிதில் அதைக்

கிழிக்க முடிவதில்லை. இப்படி மன உறுதி பெறும் மார்க்கத்தைத்தான் நம் பெரியோர்கள் 'மந்திரம் நீ இதை தினமும் ஜபி' என்று கூறி வைத்துவிட்டுப் போயிருக்கிருர்கள். எண்ணம் திரும்பத் திரும்ப ஜெபிக்கப்படும் போது உருவேற்றப்படுகிறது. மந்திரமாகிறது. மந்திரம் தன் 'மாய வித்தை'களால் எண்ணத்தைப் பலனுக மாற்றித் தருகிறது.

எண்ணம் பலன் தரும் விதத்தைப் பற்றித் தீவிர மாகச் சிந்தித்துப் பாருங்கள். மந்திரம் ஜெபிப்பது எப்படி மன உறுதி தருகிறது, மனத் தெளிவு தருகிறது என்பதைப் பற்றி ஆழமாகச் சிந்தித்துப் பாருங்கள்.

ஒரு விஷயம் உங்களுக்குப் புலப்படும்.

எண்ணத்தை வலுப்படுத்தும் சக்தியைத்தான் மந்திரம் என்கிருேம். நாம் எண்ணும் எண்ணத்தை வாழ்வில் பலனுகப் பெறும் முறையைத்தான் மந்திர ஜபம் என்கிருேம் என்பது விளங்கும். இப்படி இரண் டாயிரம் ஆண்டுகட்கு முன்-நம் முன்னேர் கண்டு பிடித்ததைத்தான் எமிலிகூ என்ற பிரெஞ்சு மருத்துவர் 'மனத்திற்குச் சொல்லும் யோசனை'(Auto suggestion) என்று கடந்த நூற்ருண்டில் பிரபலப்படுத்தி ஆழ் மன இயக்கத்தின் ஒரு பகுதியாக இதைத் தெளிவு படுத்திஞர். இன்று இது எல்லா மனேசிகிச்சை நிபுணர்களாலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட ஒரு மருத்துவ முறையாகக் கருதப்படுகிறது.

முன்பே கூறியது போலக் காலத்திற்குக் காலம் பழைய விஷயங்கள் புதிய விஷயங்களாகக் காலத்திற் கேற்ற வகையில் சொல்லப்பட வேண்டியிருக்கின்றன. ஆகவே நாம் புதிய மனிதர்களையும் புதிய பாணியையும் வரவேற்க வேண்டும்.

பரிணும தத்துவப்படி அறிவும் புதிது புதிதாக வளர்கிறது. உண்மையின் விளக்கங்கள் பலவிதமாக வெளிப்பட்டு மின்சாரமாகவும் அணுசக்தியாகவும் நமக்குப் பயன்படுகின்றது.

அப்படி செல்வம்சேர்ப்பதைப்பற்றி புதிதாய்க் கூற வந்த மற்ருெரு மனிதர் மேக்ஸ்கந்தர். இவர் 'ஃலைப் வாராந்தர இதழின் புகழ்பெற்ற நிருபராகப் பணி யாற்றியவர். பிரபல எழுத்தாளர். ஓய்வு கிடைத்த போதெல்லாம், பணக்காரர்களேயும் வெற்றி பெற்ற வர்களேயும் அவர்கள் எப்படிப் பணக்காரர்களாஞர் கள், வெற்றி பெற்ருர்கள் என்று கேட்டுக் கேட்டுச் சுமார் இருபதாண்டுகள் விஷயங்களேச் சேர்த்தார்.

''தற்செயல், தாயத்து, அதிர்ஷ்டம் என்பதெல் லாம் வேறு விஷயம். அதிர்ஷ்டக்காரர்களிடையே நான் கண்ட குணங்கள் ஐந்து. அவை:

1. தங்கள் நண்பர்களே-மனித உறவுகளே இவர் கள் பெருக்கிக் கொண்டார்கள்.

2. 'இது இப்படித்தான்' என்ற அறிவுபூர்வமான உணர்வை இவர்கள் வளர்த்துக் கொண்டார்கள்.

3. நஷ்டம் வந்தபோது வேகமாகச் செயல்பட்டு நஷ்டத்தைக் குறைத்துக் கொண்டார்கள்.

4. துணிச்சலாகக் காரியம் செய்தார்கள்.

5. நடக்காமல் போனுலும் போகலாம் என்ற சந்தேகமும், பயமும் இவர்களிடையே இருந்தது. அதற்கேற்ப இவர்கள் திட்டம் தீட்டிக் கொண்டார் கள்.

அவரது இந்த ஐந்து அனுமானங்களேயும் பற்றி நிதானமாக யோசித்துப் பாருங்கள்.

# 9

# பிறருடைய அனுபவத்தை அறிய ஆர்வம் கொள்க

'தன்னம்பிக்கையையும் சுயமுயற்சியையும் பற்றி எழுதும் நீங்கள் அதிர்ஷ்டம் என்ற சொல்லை இப்படி முக்கியம் கொடுத்து உபயோகிக்கிறீர்களே' என்று நீங்கள் யோசிக்கக்கூடும்.

அதிர்ஷ்டம் என்பது என்ன?

அதிர்ஷ்டம்—ஓர் எதிர்பார்க்கும் மனோநிலை. சிலர் மந்திரத்தால் மாங்காய் விழும் என்று எதிர்பார்த்து உட்கார்ந்திருக்கின்றனர். சிலர் சுய முயற்சியால் என்னென்ன செய்ய முடியுமோ அத்தனையையும் செய்துவிட்டு—காரியம் ஆற்றிக்கொண்டே எதிர் பார்க்கின்றனர்.

அதிர்ஷ்டம் என்பது பாதி சுயமுயற்சி; பாதி சந்தர்ப்பவசம். பல சமயம் சுயமுயற்சியுடையவர்கள், இதுதான் சரியான சந்தர்ப்பம் என்று காலப் போக்கை மக்கள் ரசனைப்போக்கைக் கணிக்கின்றனர். புடைவை டிஸைனிலிருந்து, நாட்டுமக்களின் அரசியல்

மனோபாவம் வரை இவர்கள் சரியாகக் கணிக்கிறார்கள். பின் அதை உபயோகிக்கிறார்கள். அந்தந்தத் துறையில் தலைவர்களாகிறார்கள். உலகம் அவர்களுக்கு அதிர்ஷ்டக்காரர்கள் என்று அடைமொழி சூட்டுகிறது.

பணக்காரர் ஆனவரைப் பார்த்து அதிர்ஷ்டக்காரர் என்று சொல்வது நம் மரபு. லாட்டரியில் முதல் பரிசு வந்தால் அதிர்ஷ்டம் எனலாம். ஒரு தொழிலை லட்சியமாக வைத்து, திட்டமிட்டு முன்னேறி அதன் மூலம் பெரும் பணம் திரட்டும் ஒரு தொழில் அதிபரை நாம் எப்படி அதிர்ஷ்டக்காரர் என்று கூறுவது?

பிரபலமான ஒரு பத்திரிகையையோ, புகழ்பெற்ற ஒரு ரசாயன உரக் கம்பெனியையோ போய், அதிர்ஷ்டக்காரர்கள் என்று நாம் கூறிவிட முடியுமா? இல்லை. அவர்கள் திட்டமிட்டு வியாபார நுணுக்கங்களை அறிந்து செயல்படுகிறார்கள்.

எங்குமே தனி மனிதர்கள்தான் ஒரு ஸ்தாபனம் உருவாகக் காரணமாயிருக்கிறார்கள். ஒரு தனி மனிதரது கற்பனையில், நம்பிக்கையில், முயற்சியில், திட்டத்திலிருந்துதான் பல வெற்றி வாய்ப்புக்கள் தோன்றுகின்றன. அப்படிச் செல்வந்தர் ஆனவர்களது வாழ்க்கையை நுணுகி ஆராய்ந்தால் ஏதாவது வழி புலப்படுகிறதா?

எப்படி அவர்கள் செல்வந்தர் ஆனார்கள்? எப்படி, எதைச் சிந்தித்தார்கள்? எத்தகைய திட்டத்தை மனத்தில் உருவாக்கினார்கள்? நம்பிக்கையை எப்படி மனத்தில் வளர்த்தார்கள்? எப்படி சந்தர்ப்பங்களை உருவாக்கிச் செயல்பட்டார்கள்? எப்படிச் சிந்தனையைச் சாதனையாக்கினார்கள்?

செல்வந்தர்களாக ஆசைப்படும் பலரும், சாதனை கள் புரிய விரும்பும் எல்லோரும் இதுபற்றி சாவகாச மாகச் சிந்திக்க வேண்டும்; அடிக்கடி சிந்திக்க வேண்டும். சாதனை என்ற நூல்பந்தின் ஆரம்ப நூலைக் கண்டுபிடிக்க வேண்டும். அது எப்படி எப்படி எல்லாம் செல்கிறது என்று கவனிக்கவேண்டும். அவர்கள், சாதித்த அதே முறை, அதே வழி நமக்குப் பயன்படாது போகலாம். ஆனால் நமது மனம், நாமிருக்கின்ற சூழ்நிலையில் நமக்கேற்ற ஒரு வழியை நமக்குக் காட்டிக் கொடுக்கும்.

ஆகவேதான் நாம் வாழ்க்கையில் முன்னேறியவர் களது, பணக்காரர்கள் ஆனவர்களது வாழ்க்கைச் சரிதத்தைப் படிக்க வேண்டும். அப்படி யாராவது அருகிலிருந்தால், அவர்களுக்கு நேரம் கிடைக்கு மானால் அவர்களுடன் பேசவேண்டும்; அவர்களின் அனுபவங்களைக் கேட்க வேண்டும். அத்துடன் முன் னேறியவர்களது வாழ்க்கையை மனோதத்துவ ரீதியில் அலசி ஆராய்ந்து, அந்தக் கண்டுபிடிப்புகளை நமக்கு அளிக்கும் ஆசிரியர்களையும் அவர்கள் நூல்களையும் நாம் படிக்கவேண்டும்.

**மே**க்ஸ்கந்தருக்கு அப்படி ஓர் ஆர்வம். ‘எப்படி இந்த மனிதன் பணக்காரனானான்? அதிர்ஷ்டமா? முயற்சியா? சிந்தனையா? அவர்களிடம் என்ன குணம் பணக்காரனாவதற்கு உதவியது? பணக்காரனாகும் குணங்களைத் தனிப்படுத்த முடியுமா’ என்றெல்லாம் யோசித்தார்; ஆராய்ந்தார்; பணக்காரர்களுடன் பழகி அறிந்தார்.

மேக்ஸ்கந்தரது முதல் கண்டுபிடிப்பு. ‘பணக்காரர் களானவர்கள் தங்கள் நண்பர்களைப் பெருக்கிக் கொள்கிறார்கள்.’ உபயோகப்படுகிறவர்கள், உபயோ

கப்படாதவர்கள் என்ற பாகுபாடின்றி எல்லோருடைய அறிமுகத்தையும் விரும்பி வரவேற்கின்றனர். சந்தர்ப்பம் வரும் போது அவர்களை உபயோகிக்க, அவர்கள் யோசனையைப் பயன்படுத்த முனைகிறார்கள்.

வலை பெரிதாக இருக்கும்போது நிறைய மீன்கள் கிடைக்கின்றன. அதே தத்துவம்தான். பிறரைத் தெரிந்து கொள்வதன் மூலம், தங்களைப் பிறர் முன் வைக்கிறார்கள். தன்னாலானதைப் பிறருக்குச் செய்ய முயல்கிறார்கள். அறிமுகமில்லாதவர்களுடன்கூட கலகலப்பாகப் பேசிப் பழகுங்கள் என்பதுதான் முதல் பாடம். உங்கள் நண்பர்—அறிமுக—வட்டாரத்தை அறிமுகப்படுத்திக் கொள்ளுங்கள் என்பதுதான் முதல் பாடம்.

இரண்டாவதாக, பணக்காரர்கள், மனோதத்துவ அறிவை உணர்ந்து அதைச் சூத்திரக்கயிறாகப் பயன்படுத்தினார்கள். தங்கள் மனத்துடன் சதா தாங்களே பேசி, 'தம்பீ! உன்னால் முடியும்!' 'மகளே! நீ கெட்டிக்காரி!' என்று உற்சாகமூட்டிக்கொண்டார்கள். எல்லாவற்றையும்விட ஆழ்மனக் கணிப்பை இவர்கள் வளர்த்துக் கொண்டார்கள். பிரச்னைகள், மனிதர்கள் என்று வரும் போது எல்லாவிதமான—கிடைக்கக்கூடிய தகவல்களை எல்லாம் பெற்றார்கள். பின், "இது இப்படித்தான்; இவர் இப்படித்தான்!" என்ற புலனறிவைத் தாண்டிய ஓர் உணர்வை முடிவெடுப்பதில் பயன்படுத்தினார்கள். ஆழ்மனக்கணிப்பு என்பது இதுதான்.

மூன்றாவது, துணிச்சல். சோதனை வரும் என்று தெரிந்தும் இறங்கினார்கள். ஆற்றின் வேகம் அதிகம் என்று அறிந்தும் நீந்தினார்கள். முழுச் சம்பளத்தையும் லாட்டரி சீட்டாக வாங்குகிறானே முட்டாள், அந்தத்

துணிச்சல் அல்ல இவர்களுடையது. சந்தர்ப்பங்களை, காலப்போக்கை, மனிதர்களை, அவர்களது உள்நோக்கங்களை எல்லாம் ஆராய்ந்த பின் எடுக்கும் முடிவு தான் இவர்களது துணிச்சல். எதையும் நூறு சதவீதம் சரிக்கட்டிக் கொண்டு ஒரு காரியத்தைச் செய்ய முடியாது என்பது இவர்களுக்குத் தெரியும்.

நான்காவது, தவற்றை ஒத்துக் கொள்ளும் மனோபாவம்; நஷ்டத்தைக் குறைத்துக் கொள்ளும் மனோபாவம். தவற்றைப் புரிந்து கொண்டு உடனடியாகத் தங்களைத் திருத்திக் கொண்டார்கள். வியாபாரத்தையும் தொழிலையும் முதல் தவறிலிருந்து காப்பாற்றிச் சரிப்படுத்தினார்கள்.

'நான் தவறு செய்தேன்!' என்று ஏற்றுக்கொள்ள பெருந்தன்மை வேண்டும். நம் கர்வம் குறுக்கே நிற்கக் கூடாது அங்கே. அப்போதுதான் நாம் திருந்த முடியும்; எப்போது வெளியேற வேண்டும், எப்போது பேச்சை நிறுத்த வேண்டும், எவ்வளவு தூரம் நஷ்டத்தை ஏற்றுக் கொள்ளலாம் என்பது அவர்களுக்குத் தெரியும். இதனால் இவர்கள் முழு மூலதனத்தையும் இழக்காமல் தங்களைக் காத்துக் கொண்டார்கள். பலர், 'எல்லாம் சரியாகிவிடும்!' என்று தங்கள் அதிர்ஷ்டத்தில் நம்பிக்கை வைத்துக் காலத்தை ஓட்டுவார்கள். அதற்குள் மீள முடியாத நஷ்டத்தில் தொழில் இறங்கிப் போயிருக்கும். குடும்ப விஷயத்திலும் இவர்கள் இப்படித்தான். 'நமக்கு வாய்த்தது அவ்வளவுதான்!' என்று துரதிர்ஷ்டத்துக்கு மாலையிடுபவர்கள் இவர்கள். திருத்த, திருந்த விரும்பாதவர்கள் இவர்கள் வெற்றி கண்டவர்களோ நஷ்டத்தைக் குறைத்துக் கொண்டவர்கள்.

மிக முக்கியமானது என்று நான் கருதும் ஐந்தாவது குணத்தை அடுத்துப் பார்ப்போம்.

# 10

# இறுமாப்பு ஏமாற்றத்தை அளிக்கும்

கடந்த முப்பதாண்டுகளாக 'மனத்தை உற்சாகப்படுத்து', 'உன்னால் முடியும் என்ற நம்பிக்கையோடு செயல்படு', 'அதைரியமூட்டுபவர்களை அருகில் விடாதே' என்கிற மனோதத்துவம் அமெரிக்க மக்களிடையே பரப்பப்பட்டிருக்கிறது இதை ஆங்கிலத்தில் 'பாசிட்டிவ் மென்டல் ஆட்டிடியூட்' (Positive mental attiude) என்று கூறுவார்கள், எதிலும் நல்லதை நோக்கும் மனோபாவம் இது. இதைக் குறிப்பாக நார்மன் வின்சென்ட் பீலும், டாக்டர் ராபர்ட் ஷூலரும், நெப்போலியன் ஹில்லும் மற்றும் பலரும் நாட்டில் பரப்பியிருக்கிறார்கள். இது பள்ளிகளில், கல்லூரிகளில் போதிக்கப்பட்ட மனோதத்துவமல்ல. இது பொது மக்களிடையே பொதுமக்களுள் சிலரால்—அனுபவ சாலிகளால்—போதிக்கப்பட்ட மனோதத்துவம். இது நல்ல பயனைத் தந்தது. நாட்டு முன்னேற்றத்தில் இதன் முத்திரையைக் காண முடிந்தது. "தங்கள் வாழ்க்கை முன்னேற்றத்திற்கு இதுதான் உதவியது" என்று பல முன்னேறிய பெருமக்கள் சான்று கூறினார்கள்.

கல்லூரிகளில் சொல்லிக் கொடுக்கப்படும் மனோ தத்துவம்,ஆபிரகாம் மாஸ்லோ என்ற அறிஞர் மனித வாழ்க்கை-மனிதன் தன் முழுத்திறமையையும் வெளிக் கொணர்ந்து நிறைவு காண முயலும் ஒரு சாதனம் என்று கூறுவதற்கு முன்னால், பெரும்பாலும் வேறு வழியில் சென்று கொண்டிருந்தது.

அதாவது, சாதாரண மனிதனது பிரச்னைகளை அணுகி ஆராய்வதற்குப் பதில், சித்த பேதம் கொண்டவர்களை—அசாதாரண மனிதர்களை — அவர்களுக்கு ஏற்படும் மனப்பிராந்தி, பயம், தற்கொலை செய்து கொள்ளும் மனநிலை —இத்தகைய அதீத விஷயங்களை ஆராய்வதிலேதான் மனோதத்துவத்துறை ஈடுபட்டிருந்தது. இப்படி இந்த விஷயங்களை ஆராய்ந்தவர்கள் அப்படியே மாறிப்போய் விசித்திர மனிதர்களாய்ப் பொதுமக்களால் கருதப்பட்ட நிலையும் இருந்தது.

விஷயம் இதுதான். மேக்ஸ்கந்தர் கூறும் அதிர்ஷ்டத்தின் ஐந்தாவது குணம் சற்று அதிசயமானது, சற்று வேறுபட்டது. அவர் கூறுகிறார், 'பணக்காரர்களது வாழ்க்கையை அலசி அலசி ஆராய்ந்ததில் அவர்களிடையே ஒரு அவநம்பிக்கையைக் கண்டேன். கெட்டது நேரலாம், கெட்டது நேரும் என்ற அவர்களது பயத்தைக் கண்டேன். அவர்கள் அதிலே ஊறி அதை ஒரு கலையாகப் பயின்று வாழ்வில் கடைப்பிடிப்பதைக் கண்டேன்'' என்று.

''நம்பு, நல்லது நடக்கும்'' என்று கூறும் ஒரு சமுதாயத்தில், ''நல்லது நடக்காமலும் போகலாம்; கெட்டது நடக்குமானால் அதற்கு உன்னைத் தயார் செய்து கொண்டாயா?'' என்று யாராவது கேட்டால் என்ன நினைப்பீர்கள்?

"ஏன் துக்கிரிபோல் பேசுகிறாய்?" என்போம். "ஏ! அபசகுனம்! வாயை மூடு!" என்று படபடப்போம். ஏனெனில் கஷ்டத்தை-துரதிர்ஷ்டத்தை நினைக்கவும் நாம் பயப்படுகிறோம். துரதிர்ஷ்டத்தை எண்ணி அதைப் பெரிதுபடுத்தினால் அதுவே நிகழும் சம்பவமும் உண்டு. இது உண்மை. இதைத்தான் Self Fulfilling Prophecy என்று ஆங்கிலத்தில் கூறுவார்கள். தமிழில் "பட்ட காலிலே படும்" என்கிறோமே—அந்த முதல் தரம் பட்ட அனுபவம் மீண்டும் மீண்டும் நினைவில் இருந்து நமக்குத் துரதிர்ஷ்டத்தை தொடர்ந்து கொடுக்கிறது என்பதுதான் இதன் பொருள்.

விஷயம் அப்படியிருக்கும்போது, "கொஞ்சம் அவநம்பிக்கைப்படு, விஷயம் நடக்காமலும் போகலாம்" என்றால் அதை எப்படி எடுத்துக் கொள்வது? நம்மைக் கெடுத்துக் கொள்ளாமல் எப்படி அதை வாழ்வில் கடைப்பிடிப்பது?

நான் படித்த நூற்றுக்கணக்கான மனோதத்துவ நூல்களில் இத்தகைய கருத்தை இதுவரை யாரும் சொன்னதில்லை.

ஆகவேதான் நாம் இதைப் படிக்கும்போது சற்று நிமிர்ந்து உட்காருகிறோம். 'இது என்ன மாறுபாடு? பொருத்தமாக இல்லையே' என்று சிந்திக்கிறோம். இதனால்தான் இந்தக் கருத்தை இக்கட்டுரைத் தொடரின் கடைசிக் கட்டுரையாக எழுதவேண்டும் என்று நான் இருந்தேன். ஆனால், யோசித்துப் பார்த்தபோது இதைப் பற்றி முதலிலேயே கூறி விடுவது பல தவறுகளைத் தவிர்க்க உதவும் என்ற முடிவுக்கு வந்தேன்.

இது பற்றிய சில அபிப்பிராயங்களைச்சில கோடீஸ்வரர்களது வாயிலிருந்து கேட்கலாம். ''ஒரு தொழிலில் இறங்கும்போது, நான் போட்டிருக்கிற சட்டையாவது மிஞ்சுமா என்ற சந்தேகம், பயமாக என் எலும்பை உறைய வைக்கும்'' என்கிறார் பால் கெட்டி என்ற அமெரிக்க எண்ணெய் மன்னர்.

''எல்லாம் என்னால் முடியும் என்ற இறுமாப்பு ஏற்படும்போது மனிதன் பலமற்று இருக்கிறான். அந்தச் சமயம் பார்த்துத் துரதிர்ஷ்டம் அவனைஒரேயடியாகச் சாய்த்துவிடும்!'' என்கிறார் மற்றொரு செல்வந்தர்.

அமெரிக்காவில் மர்பி விதி என்றொரு வேடிக்கையான விதி ஒன்று உண்டு.

'ஏதாவது நடக்காமல் போகச் சாத்தியமிருக்குமானால் அதுநிச்சயம் நடக்காமல் போகும்!' இதுதான் மர்பி விதி. சொல்லப் போனால் பணக்காரர்களாக ஆனவர்கள் எல்லாம் மர்பி விதியில் பூரண நம்பிக்கை கொண்டவர்களாயிருக்கிறார்கள். ஆனால் ஒன்று, அவர்கள் அத்துடன் நின்று விடுவதில்லை. இப்படி ஏற்படும் தவற்றிலிருந்து நஷ்டத்திலிருந்து தங்களைக் காத்துக் கொள்ளத் திட்டமிடுகிறார்கள், காத்துக் கொள்கிறார்கள்.

ஜெரால்ட் லோப், ஸ்டாக் மார்க்கெட்டில் பணம் பண்ணுவதில் வல்லவர். அவர் ''ஸ்டாக் மார்க்கெட் உயர்ந்து கொண்டே போகும். எல்லாம் நன்றாக அமையும் என்கிற மனோபாவம் உங்களைக் கொன்று விடும்'' என்கிறார்.

அதிர்ஷ்ட தேவதையின் செல்லக்குழந்தை என்று எண்ணி இந்திராகாந்தி எமர்ஜென்சிக்குப் பின்

தேர்தலை நடத்தி, தோல்வி கண்டதை எண்ணிப் பாருங்கள். அப்படி எண்ணி ஜான் கென்னடி கியூபா வில் படையெடுத்துத் தோற்றதை நினைவுக்குக் கொண்டு வாருங்கள்.

ஓரிரு விஷயங்களில் உங்களுக்குத் தொடர்ந்து வெற்றி கிடைத்ததும், 'நான் எடுத்ததெல்லாம் தோற்பதில்லை' என்ற எண்ணம் பலருக்கு வந்துவிடு கிறது. 'அடுத்த முறை நீங்கள் சந்திக்கும் சம்பவம் புதிய சம்பவம்; புதிய சூழ்நிலை. விழிப்போடும், தோற்ருல் என்ன செய்யலாம் என்ற தற்காப் போடும் — செயல்படாவிட்டால் நிச்சயம் தோல்வி யைத் தழுவவேண்டியிருக்கும்' என்கிருர் மேக்ஸ் கந்தர்.

யாரும் அதிர்ஷ்ட தேவதையின் செல்லக்குழந்தை அல்ல.

'தோற்றுப்போய் விடுவோமோ' என்ற அவ நம்பிக்கையும் அதைரியமும் நமக்கு ஒரு பாதுகாப்பை யும் விழிப்பையும் தருகின்றன. அது இல்லாதபோது உள்மனம் சொல்லும் பல குறிப்புக்களையும் நாம் உதா சீனப்படுத்துகிருேம்.

கார் ஓட்டுபவர்களில் யார் அதிகம் விபத்துக்கு ஆளாகிருர்கள் என்று ஒரு சர்வே செய்தார்கள். ''நான் நல்ல டிரைவர், எதையும் சமாளித்து விடு வேன்!'' என்ற மதர்ப்புடன் இருந்தவர்களே அதிகம் விபத்துக்கு ஆளாஞர்கள்.

ஆயுள் பாதுகாப்பு இன்ஸ்யூரன்சை எடுத்துக் கொள்ளுங்கள். அவர்கள் எதை விற்பனை செய்கிருர் கள்? நீங்கள் எதிர்பாராத வயதில் செத்துப் போவீர்

கள் என்பதை வைத்து வியாபாரம் செய்கிறார்கள். அதாவது, அவநம்பிக்கையை வியாபாரம் செய்கிறார் கள். அந்த அவநம்பிக்கையை இன்ஷ்யூரன்ஸ் பாலிசி மூலம் நாம் வாங்குகிறோம். நம்புகிறோம். அதே வித மான அவநம்பிக்கையை மற்ற விஷயங்களில் அனு சரிப்பது நம் ஆண்மைக்கு இழுக்கு என்று நாம் எண்ணப் பழக்கப்படுத்தப் பட்டிருக்கிறோம்.

உலகம் ஒரு நியதியில்தான் இயங்குகிறது. ஆனாலும் நமக்குப் புரியாத சில நியதிகள் இருக் கின்றன. அதை அனுசரித்து நாம் ஜாக்கிரதையாக இருப்பது நல்லது. அந்த ஜாக்கிரதைதான் இந்த அவ நம்பிக்கை.

# 11

# மனத்தைப் பண்படுத்துக

லட்சியங்களைத் தேர்ந்தெடுக்குமுன் நாம் ஒரு நல்ல மனநிலையைத் தயார் செய்து கொள்ள வேண்டும். நன்ருகப் பண்படுத்தப்பட்ட நிலத்தில் தான் விவசாயி விதைக்கிருன். நிலம் பண்பட்டிருக்கும் போதுதான் விதை லேசாக வெடித்து வேர் விட ஏது வாகிறது; செடி நன்ருக வளர்கிறது. ஒரு கரம்பு நிலத்தில் கட்டாந்தரையில் யாரும் விதைப்பதில்லை.

நிலத்தைப் பண்படுத்துவதைப் போல, உற்சாக மான ஒரு மனநிலையை நாம் முதலில் உருவாக்கிக் கொள்ளவேண்டும். 'இது முடியும்' என்ற மனநிலை, 'சந்தோஷமாக வாழ்வேன்' என்றதீர்மானம், 'முடிந்த வரை உதவுவேன்' என்ற மனப்போக்கு, 'பெருந்தகை யாளனுக நடப்பேன்' என்ற உயர் உள்ளம்—இவை தான் சாதனை புரியும் மனத்தின் அடித்தளம்.

பண்படுத்தப்பட்ட நிலத்தில் விழும் நீரை விதை உறிஞ்சுவது போல, வாழ்வின் லட்சியங்கள் சூழ் நிலையை ஈர்க்கும் காந்த சக்தி படைத்தவை. அவை, ஒத்த உள்ளங்களையும் உற்சாகமான உள்ளங்களையும் சாதனைக்கேற்ற சூழ்நிலையையும் வெளியுலக வாழ்வில்

நமக்காக அமைக்கின்றன. ''எடுத்தது முடியும், நல்லது நடக்கும் என்று உற்சாகமான மனநிலையில் இருங்கள்'' என்று நார்மன் வின்செண்ட் பீல் போன்ருேர் அறிவுரை வழங்கும்போது, சில மனேதத்துவ நிபுணர்கள், ''இது குழந்தைத்தனமாக இருக்கிறது. நடைமுறை உலக இயல்பில், எப்படி இதுபோல எப் போதும் ஒரு நல்ல மனநிலையை ஏற்படுத்திக் கொள்ள முடியும்? வாழ்வின் உண்மை நிலையை மறந்து பேசு கிருர் இவர்'' என்று கூறுகிருர்கள்.

வாழ்வில், பகலும் இரவும் உண்டு; ஒளியும் நிழலும் உண்டு; உற்சாகமும் துக்கமும் வாழ்வின் சக்கரங்கள். எப்போதும் இந்த உயர் உற்சாக நிலையில் இருப்பது சாத்தியமல்லதான்.

பிரச்னைகள் வரும்போது—இடர்ப்பாடு வரும் போது—சம்பவங்கள் எதிர்பாராது நேரும்போது— மனிதனுக்குத் தன் திறமையிலேயே சந்தேகம் வந்து விடுகிறது. 'நான் உதவாக்கரை. எப்போதுமே இப்படித்தான்' என்று தன்னையே நொந்து கொள் கிருன். 'ஏன் எனக்கென்று இப்படி நேர்கிறது?' என்று தன்னையே வெறுக்கிருன். பல சமயம், சிலர் தற்கொலை செய்து கொள்ளும் அளவுக்குக்கூடப் போகிருர்கள். பெரிய தலைவர்களிலிருந்து, அறிஞர்களிலிருந்து, சாதாரண இளைஞன் வரை அப்படி எண்ணவும் செய் கிருர்கள்.

உண்மையிலேயே விஷயங்கள் அவ்வளவு மோசமாக இருப்பதில்லை. சில சமயம் சில கண நேரம் காத் திருந்தாலே ஒரு தெளிவு ஏற்படும். சில மணி நேரம், சில நாள், சில மாதங்கள் என்று பிரச்னைகளுக்கேற்ப

விஷயங்களை ஒத்திப் போடுவது, ஒரு புதிய நோக்கை நமக்குத் தரும்.

நமது உடல், பலத்த வேலைக்குப் பின் பலவீன மடைந்து தளர்ந்து போவதைப்போல, மனமும் சில சமயம் ஹார்மோன்களின் குறைவால் தளர்ந்து அதைரியத்தை ஊட்டும் என்று விஞ்ஞானிகள் கூறு கிறார்கள்.

வெளிக் காரியங்கள், உடல் உழைப்பில் ஈடு படுத்தும் வேலை, மாறுபட்ட சூழ்நிலை அல்லது நமக்கு நெருங்கியவர்களிடம் நம் பயத்தை, வெறுப்பை, கோபத்தை, இழைக்கப்பட்ட அநீதியைப் பகிர்ந்து கொள்வது நம் மனச்சுமையைக் குறைக்கும். சுமை இறங்கியவுடன் 'ஸ்பிரிங்'கில் இயங்கும் கடிகாரம் போல, மனம் மீண்டும் உற்சாகமடையத் தொடங்கு கிறது.

ரமண மகரிஷி 'நான் யார்?' என்ற கேள்வியை எழுப்பி, 'உடலா, ஆத்மாவா? எது நான்?' என்று உள்ளே, உள்ளே சென்று ஞான மார்க்கத்தின் மூலம் விடை கண்டது போல, 'நான் ஏன் துக்கத்தில் ஆழ்ந் திருக்கிறேன்? பயத்தில் ஊறிப் போயிருக்கிறேன்?' என்று பின்னோக்கிப் பின்னோக்கிக் கேள்வியை எழுப்பி, அக்கு வேறு ஆணி வேறாக அலசுவதன் மூலம் நம் பயத்தைப் போக்கி ஒரு தைரியத்தை மனத்தில் உலவ விடலாம்.

மனத்தின் இயல்பான நிலை உற்சாகம்தான்; நம்பிக்கைதான். அது இல்லாவிட்டால் இந்த உடல், மாவடு வெதும்பி விழுவதைப் போல செத்துப் போகும். ஆகவே மனம் தன் இயல்பான நிலைக்கு

வர, ஒரு சந்தர்ப்பம் அளியுங்கள்; அவகாசம் அளியுங்கள்; உங்கள் மனத்துடன் பேசிப் பேசி ஒரு நம்பிக்கை கொடுங்கள்.

வாழ்வே, மனத்தை நம்ப வைக்கிற முயற்சிதான். மனத்தைச் சமாதானப்படுத்துகிற வேலைதான்: உற்சாகமாக வைத்துக்கொண்டு, அந்த உற்சாகத்தின் மூலம் செய்யக்கூடியவற்றை எல்லாம்செய்யும் முயற்சிதான். சொல்லப்போனால், வாழ்வு என்பது மனத்தை அந்தப் பிரபஞ்சப் பேரொளியுடன் இணைக்கும் முயற்சிதான். ஆகவே மனம்தான் வாழ்வின் ஆரம்பமும், நடுவும், கடைசியும்.

நாம் ஒரு விஷயத்தை எடுத்துக்கொண்டு, அது பற்றிய கோபத்தை நாம் பெருக்கிக் கொள்ளலாம். அதே போல் ஒரு விஷயத்தைப் பற்றி நம் வருத்தத்தை—திரும்பத் திரும்ப நினைப்பதன்மூலம், அதிகப்படுத்திக் கொள்ளலாம். நாம் சந்தோஷமாக இருக்கிறோமா இல்லையா என்பது உலகிற்கு அக்கறையில்லாத விஷயம். நமக்குத்தான் நம் சந்தோஷம் முக்கியம். அப்படி இருக்கும்போது நம்மை நாமே தட்டிக் கொடுத்து மகிழ்ச்சி நிலையில் வைத்துக் கொள்ளாமல், வருந்துவது யாருக்குச் செய்யும் நன்மை?

''வாழ்வில் பற்றற்று இரு'' என்பார்கள் நமது முனிவர்கள். நம் விஷயங்களில் நாம் விருப்பு வெறுப்புக்களைச் சற்று மறந்து நம்மை மூன்றாவது மனிதன் போலப் பார்க்கக் கற்றுக் கொள்வது நம்மைப் பற்றிய குறைகளை உணர உதவும்; மீறி வளர உதவும். ''உடல் ஒரு போர்வை. வாழ்க்கை ஆத்மா பெறும்

அனுபவப் பயிற்சி' என்பதை உணர்ந்து கொண்டோமானால் நம்மை மூன்றும் மனிதனுக முன்னிலைப் படுத்திப் புரிந்துகொள்வது சுலபம். இது நம் வளர்ச்சிக்கு நல்லது.

மனநிலை என்பது ஓர் உணர்ச்சி நிலை. அந்த உணர்ச்சி உற்சாகமாக இருக்கும்போது, நம் உடம்பிலுள்ள ஒவ்வொரு ஸெல்லும் புது ரத்தம் பெற்றுத் துடிப்போடு இயங்குகிறது; நம் லட்சியத்திற்குக் கை கொடுக்கிறது.

அந்த உணர்ச்சி 'துயரம்', 'இயலாமை' என்னும் போது நம் ஒவ்வொரு ஸெல்லிலிருந்தும் நம் சக்தியை வடித்து விடுகிறது. பலவீனமான நிலையில் உடலில் கிருமிகள் நுழைந்து நோய் பரவக் காரணமாகிறது.

வாழ்வை நாம், நம் உறவினர்கள், ஊர்க்காரர்கள், நாடு, உலகம், பூமி, பிரபஞ்சம் என்ற பரந்த கண்ணோட்டத்தில் காணக் கற்றுக்கொள்ளவேண்டும். இவ்வுலகிலே மலர், தென்றல், கள்ளங் கபடில்லாத குழந்தை, அலைகடல், இளமை, அழகு, சலசலக்கும் அருவி, நீலவானம், சிற்பம், ஓவியம், அன்பு, தாய்ப் பாசம் என்று எத்தனையோ உயர் உணர்ச்சிகளைத் தூண்டும் விஷயங்கள் இருக்கும்போது நாம் அழத் தேவையில்லை; அனுபவிக்கக் கற்றுக் கொள்ள வேண்டும்; ஆனந்திக்கக் கற்றுக் கொள்ள வேண்டும்.

பிரபஞ்சத்துடன் உங்களை இணைத்துக்கொள்ளுங்கள். இப்பிரபஞ்சத்தில் நாம், இறந்த காலத்திற்கும் எதிர்காலத்திற்கும் இடையே உள்ள ஒரு தொடர்;

சங்கிலிக்கரணை, பிரபஞ்சம் என்ற பரந்த படுதாவில் நாம் ஓர் அழகிய, தேவைப்படும் டிசைன். பிரபஞ்சத்தில் மனிதன் என்பவன்—தனித்தும், இணைந்தும் இயங்கும் ஓர் ஆக்க சக்தி.

நம் வசம் இருப்பது நம் மனம்தான். நாம் அதற்கு உற்ற தோழனுய், தாயாய், ஞானியாய் இருந்து உதவ வேண்டும்.

மனத்தைப் பண்படுத்துவோம் முதலில். செல்வம் சேர்க்கும் எண்ணங்களைத் தூவுவோம் நாளை.

# 12

# செல்வம் கொழிக்கத் திட்டம் வேண்டும்

அவன் அடிக்கடி விமானத்தில்பயணம் செய்பவன். ஒரு சமயம் விமான நிலையத்தில் அவன் கைப்பெட்டியைச் சோதனை போட்டபோது அதனுள் ஒரு வெடி குண்டு இருப்பதைக் கண்டார்கள். ''ஏன் ஐயா வெடி குண்டைப் பெட்டியில் எடுத்துப் போகிறீர்கள்?'' என்று கேட்டதற்கு, ''எல்லாம் என் பாதுகாப்பிற்காகத்தான்!'' என்றான் அவன். விமான நிலைய சோதனையாளர்களுக்கு விளங்கவில்லை. அவன் கூறினான், ''விமானத்தில் வெடிகுண்டை யாரேனும் எடுத்து வரும் அபாயம் பத்தாயிரத்தில் ஒன்று எனக் கூறினார்கள். எனக்குப் பயமாகப் போய்விட்டது. நான் அது பற்றி ஆராய்ச்சி செய்ததில் விமானத்தில் ஒரே சமயத்தில் இரண்டு பேர் வெடிகுண்டை எடுத்துச் செல்லும் அபாயம் லட்சத்தில் ஒன்று என்று தெரிந்தது. ஆகவே, அபாயத்தைக் குறைப்பதற்காகத் தான் நான் வெடிகுண்டைப் பெட்டியில் எடுத்துப் போகிறேன்!'' என்று.

உடனே விமான நிலைய அதிகாரிகள், ''தம்பி! நீ மகா புத்திசாலி! உன்னைப் போன்ற சர்வ ஜாக்கிரதை யான புத்திசாலி ஒருவரைத்தான் எங்கள் நாடு தேடிக் கொண்டிருக்கிறது. எங்கள் டகல்பூர் ராஜ்ஜியத்தில் தலைமைப் பதவி காலியாக இருக்கிறது. நீதான் அமர்ந்து கோலோச்ச வேண்டும்!'' என்று வேண்டிக் கொண்டு, தாரை தப்பட்டையுடன், மாலை மரியாதை களுடன் அவரை ஊர்வலமாக அழைத்துச் சென்றார் களாம்.

இது கதை.

ஆனால் நமது ஊரில் நடைமுறையில் நடக்கும் விஷயங்கள் இந்தக் கதைகளையும் தூக்கி அடித்துவிடும் வண்ணம் நிஜமாக நிகழ்கின்றன.

சுதந்திரம் வந்து 36 ஆண்டுகட்கு பின்னும் நமது நாட்டின் பொருளாதாரம் சீர்படவில்லை; வேலை வாய்ப்புக்கு ஒரு வழி ஏற்படவில்லை.

காரணம் என்னவென்று யோசித்துப் பாருங்கள்.

அரசியல் கட்சிகள் மூலம் பதவிக்கு வந்தவர்கள் அரசியல் கட்சிகளைப் பற்றியே நினைத்துக்கொண்டிருக் கிறார்களே ஒழிய பொருள் உற்பத்தி பற்றிச் சிறிதும் கவலைப்படுவதாகக் காணோம். எதிர்க்கட்சி பற்றியும் எதிர்க்கட்சித் தலைவர்கள்பற்றியும் இரவுத் தூக்கத்தை இழப்பவர்கள், நாட்டின் இளைஞர்களின் வருங் காலத்தையும் வேலை வாய்ப்பையும் பற்றிக் கவலைப் படக் காணோம்.

உதாரணமாக தமிழ்நாட்டை எடுத்துக்கொள் ளுங்கள். நமது ஆண்டு வருமானம் சுமார் 1700

கோடி. இதில் சத்துணவுத் திட்டத்திற்குச் சுமார் 150 கோடி; விவசாயக் கடன் வரி ரத்திற்காக சுமார் 200 கோடி. இப்படிப் புதிதாகச் செலவினம் சுமார் 350 கோடி ஆகிறது.

இந்த 350 கோடி செலவும் தேவையான செலவு என்று வாதிக்கலாம். யாரும் மறுப்பதற்கில்லை. ஆனால் 1700 கோடி ரூபாய் வருமானத்தில் இருபது சத விகிதத்திற்கு மேல்-சுமார் 350 கோடி-உற்பத்திக்கு உதவாத செலவினங்களில் போனால் நாடு என்னாகும்? அதாவது உங்கள் குடும்ப வருமானம் 1000 ரூபாய் என்று வைத்துக் கொள்ளுங்கள். அதில் 50 ரூபாய் தர்மத்திற்கு ஒதுக்கலாம். சுமார் 200 ரூபாய் தான தர்மத்திற்கு என்று செலவிட்டால், என்ன ஆகும் என்று யோசித்துப் பாருங்கள். ‘ஆன முதலில் அதிகம் செலவானால் மானம் இழந்து மதிகெட்டு...’ என்ற தமிழ்ப் பாட்டே நினைவுக்கு வருகிறது!

செலவு செய்வது தவறல்ல; ஆனால் முதலில் வருமானத்தை நாம் அதிகமாக்கிக் கொள்ள வேண்டும். ‘சுமை அதிகமாயிருக்கிறதே என்று அழ வில்லை. ஆண்டவனே, முதுகை அகலமாக்கித் தா என்றுதான் கேட்கிறேன்!’ என்று ஒரு பிரார்த் தனையைப் படித்திருப்பீர்கள்.

அமெரிக்காவும், மற்ற மேனாடுகளும், ஜப்பான், கொரியா, சிங்கப்பூர் போன்ற ஆசிய நாடுகளும் எப்படிப் பணக்கார நாடுகள் ஆயின என்றால், அங்கெல்லாம் தனி மனித முயற்சியை ஊக்கு விக்க அரசாங்கம் செயல்பட்டது. தேர்தலில் இந்தத் தலைவன் நாட்டுப் பொருளாதாரத்தை உயர்த்தினானா உயர்த்தவில்லையா என்பதை வைத்து வோட்டுப்

போட்டார்கள். கல்லூரிகளும், பல்கலைக் கழகங்களும் பொருளாதாரத் திட்டங்கள் வெளி வரும் அறிவுக் களஞ்சியங்களாகச் செயல்பட்டன. தலைவன் தன் கீழ் உள்ள ஒவ்வோர் அமைச்சரின் முழுத் திறமையும் வெளிவருமாறு சுதந்திரம் அளித்துச் செயல்படுகிறான்.

ஜப்பானில், அரசாங்கமும் தொழிலதிபர்களும் சேர்ந்து வருங்காலத்திற்குத் தேவைப்படும் விஞ்ஞான —கம்ப்யூட்டர் ஆராய்ச்சிகளுக்காக ஏராளத் தொகையை ஒதுக்கி இன்றே அதற்காகத் தங்களை அர்ப்பணித்துக் கொள்கின்றனர். ஊதியம் அதிகம் கேட்பதனால் உற்பத்தி செய்யும் பொருளின் விலை கூடிப்போய் சர்வதேச மார்க்கெட்டில் தங்கள் நாட்டுப் பொருள் விற்பனை ஆவதில்லை என்பதை உணர்ந்த இரும்பு எஃகுத் தொழிலாளர் யூனியன்கள் 15 சதவிகித ஊதியக் குறைப்பை இன்று அமெரிக்கா வில் ஏற்றுக் கொண்டிருக்கின்றன.

நமது தெருவை நாம் அசுத்தம் செய்யக்கூடாது என்ற உணர்வுக்கும் கண்காணிப்புக்கும் எப்படி அந்நிய விஞ்ஞான நுணுக்கம் தேவையில்லையோ அது போல, ‘‘வருமானத்திற்கு மேல் செலவு செய்யக் கூடாது. செலவு செய்யுமுன் நாட்டின் தொழில்களை அதிகரித்து, நாட்டின் வளத்தை முதலில் பெருக்க வேண்டும்’’ என்ற உணர்வும் அறிவும் பெற நமக்கு அந்நியப் பொருளாதார அறிவு நுணுக்கம் தேவையே இல்லை.

நம்மிடமுள்ள அறிஞர் பெருமக்களையும் அரசாங் கத்திலுள்ள அனுபவம் நிறைந்த அதிகாரிகளையும்

கற்பனையும் துணிவும் நிறைந்த தொழில் அதிபர்களை யும் கலந்து ஆவன செய்யத் திட்டம் தீட்ட வேண்டும். நமது ஊரில் சினிமாவுக்கு நூறு நாள் விழாக்கள், சிலை எடுக்கும் விழாக்கள், காலஞ்சென்ற மனிதர்களின் நினைவு நாள் விழாக்கள் என்ற காலத்தைச் செலவிடு வதற்குப் பதில் இங்கே இன்று இருப்பவர்களுக்காக இன்றிருக்கும் பிரச்னைகளுக்கு வழி காண நாம் முயல வேண்டும். 'நல்லதோர் வீணை செய்தே—அதை, நலங் கெடப் புழுதியில் எறிவதுண்டோ?' என்று பாரதியார் பாடுகிறார். அறிவுக்கும் திறமைக்கும் புகழ் பெற்ற தமிழகத்தில் நாம் நமது நல்ல வீணைகளை எல்லாம் மீட்டாமல் போனால் எப்படி?

தலைமை சில சமயம் தவறு செய்யலாம்; திசை தவறிப் போகலாம். ஆனால் அதற்காக எதிர்க்கட்சி களும் அப்படியே போகவேண்டுமென்று அர்த்தமல்ல. இன்னொரு காந்தி (மகாத்மா காந்தியைச் சொல் கிறேன்) நாட்டுக்கு இப்போது வேண்டும் என்று சொல்லிக் கொண்டிருப்பதற்குப் பதில் நாம் ஒவ் வொருவரும் நம்மாலானதைச் செய்ய முன் வரவேண் டும். சுதந்திரப் போராட்டத்தின் போது அப்படித் தான் மக்கள் ஒருமுகப்பட்டு ஒரு லட்சியத்தை நோக்கிச் சூரியன் ஒளிக் கதிர்களைக் குவிப்பது போலக் குவித்துப் பாடுபட்டார்கள்.

இன்று, பொருளாதாரம் நமது முக்கிய இலக்காக இருக்க வேண்டும்.

தனி மனிதனுக்குச் செல்வம் சேர்க்கும் வழிமுறை களையும் வாய்ப்புக்களையும் நாம் ஏற்படுத்தித் தர வேண்டும். அதே போல் அரசாங்கமும் பெரியஅளவில் செல்வத்தை அதிகரிப்பதற்கான திட்டங்களையும் தியாகங்களையும் செய்ய முன் வரவேண்டும்.

நாட்டு விடுதலையை எதற்காகப் பெற்ருேம்? நம்மை நாமே ஆண்டு, நாட்டின் வறுமையைப் போக்கி, எல்லோருக்கும் நல்வாழ்வளிப்பதற்காகத் தான் சுதந்திரம் பெற்ருேம். 'கரிபி ஹடாடோ' என்ற குரல் நல்ல குரல்தான். ஆனுல் வெறும் சத்தம் சோறு போடாது. இன்று அதற்கான திட்டம் தேவை; செயல் தேவை; அந்த லட்சியத்தை விட்டுப் பிறழாத உறுதி நம் தலைவர்களுக்குத் தேவை.

13

# மனக்கதவைத் திறந்து வைப்போம்

'அற்புதமான குணங்களுடைய மனிதனாக நான் வெளிவர வேண்டும்' என்ற எண்ணம் நம் எல்லோரிடமும் இருக்கிறது. இது நியாயமான ஆசை; நிறைவு தரும் ஆசை; புனிதமான ஆசை; நமக்குப் பூரிப்புத் தரும் ஆசை!

அந்தச் சமயத்தில் நம்மை நாமே அலசுகிறோம். நாம் செய்த தவறுகள் என்ன? எந்தச் சந்தர்ப்பத்தில் எப்படி நடந்துகொண்டிருக்க வேண்டும்? நாம் அப்படி அப்போது நடந்து கொண்டதன் உள்நோக்கம் என்ன? நமக்குள் எத்தகைய மனிதன்—எத்தகைய மனம் ஒளிந்து கொண்டிருக்கிறது என்பனவற்றைப் பற்றி எண்ணுகிறோம். முக்கால்வாசி நேரம் நம்மை நாமே அதட்டுகிறோம்; குற்றஞ்சாட்டுகிறோம். நொந்து கொள்கிறோம்; தண்டிக்கிறோம்.

நமது உணர்வுகள்தான் நம்மை ஆட்டுவிக்கின்றன. நமது உணர்வுகள் நம் ஆழ்மனத்தில் பதிந்துபோய் நமக்கு நிரந்தரத் தொல்லை தரலாம். நமது உணர்வுகள் நமது மனநிலையையும் உடல் நிலை

யையும் மாற்றி நம்மை வேறு மனிதனுகச் சில சமயம் நிறுத்திவிடுகின்றன.

காம எண்ணங்களை மனத்தில் தேக்கத் தேக்க காம உணர்வாக அது மாறுகிறது. வஞ்ச எண்ணம் வெறுப்பு உணர்வாக மாறுகிறது. கஞ்சத்தனமான எண்ணம் சுயநல உணர்வாக வெளிப்படுகிறது. பகைவனைப் பற்றிய எண்ணங்கள் பயத்தை, கவலையை, ஆணவத்தை, சினத்தை நம்முள் எழுப்புகின்றன.

உங்களுக்குப் பிடிக்காத ஒரு விஷயத்தைப் பற்றி அல்லது ஒரு சம்பவத்தைப் பற்றிக் கொஞ்சம் எண்ணிப் பாருங்கள். மனத்தை அதில் திரிய விடுங்கள். உங்கள் மனநிலையும் உடல் நிலையும் எப்படி அதனுல் மாறுபடுகின்றன என்பதை உணர்வீர்கள்.

மாருக ஒரு பச்சிளம் குழந்தையின் முகத்தை மனக்கண் முன் கொண்டு வாருங்கள். அதனுடன் சிறிது நேரம் கொஞ்சுங்கள்; பேசுங்கள்; சிரியுங்கள்; கண்ணுமூச்சி காட்டி விளையாடுங்கள். இப்போது உங்கள் மனநிலையும் உடல் நிலையும் இதன் விளைவாக எப்படி மாறி இருக்கிறதென்று கவனியுங்கள். அதே போல் ஒரு ஞானியின் முன் நிற்கும் அனுபவத்தை, ஒரு புது மலரை நுகரும் ரசானுபவத்தை மனத்தில் விரிய விடுங்கள். இத்தகைய எண்ணங்கள் நம்மை எப்படி புனிதப்படுத்துகின்றன; புல்லரிக்கச் செய்கின்றன என்று விளங்கும்.

நினைவில் கொள்ளுங்கள்.

உணர்வுகள் நம்மைப் பாதிக்கின்றன.

ஆனுல், உணர்வுகள் சாதாரண எண்ணங்களிலிருந்து—

சாதாரண நினைவுகளிலிருந்து புறப்படுகின்றன. அதாவது, எண்ணங்கள்தான் உணர்வுகளின் மூலம், இவ்வுலகில் நமது அலைக்கழிப்புக்கெல்லாம் காரணம் நமது மனத்தில் எழும் அல்லது ஆழப் பதிந்து போயிருக்கும் தீய உணர்வுகள்தான். காமம், கோபம், வஞ்சம், பொறாமை, ஆணவம், பயம், கவலை என்ற உணர்வுகள் நம் தலைக்குள் புகுந்து ஆழ்மனத்தில் கீறல் விழுந்த இசைத் தட்டைப் போல அதையே பாடிக் கொண்டிருக்கின்றன.

அதே போல் வறுமை வாய்ப்பட்ட மனிதனுக்கு ஏற்படும் பயமும், கவலையும், உலகின்மீது ஏற்படும் கோபமும் வஞ்சமும் பொறாமையும் அளவிட முடியாதவை. ஆகவே, வறுமையும் ஒரு பொல்லாத உணர்வுதான்.

நீங்கள் ஒரு மாளிகையின் அறையில் உட்கார்ந்திருக்கிறீர்கள். அந்த அறையில் எட்டு ஜன்னல்கள் இருக்கின்றன. அவற்றின் வழியாகத் தென்றலும் சூரிய ஒளியும் இதமும் மகிழ்ச்சியும் நம்மை மயக்கும் ஒலியும் ஜீவனும் வருகின்றன என்று வைத்துக் கொள்ளுங்கள். நீங்கள் என்ன செய்கிறீர்கள்...? உங்களை அறியாமல் கோபம், காமம், பொறாமை போன்ற உணர்வுகளால் அந்த அழகிய ஜன்னல்களை எல்லாம் மூடி விடுகிறீர்கள். இப்போது மலைக்காட்சி தெரிவதில்லை; அது தெம்பு தருவதில்லை. ஓடும் நதியின் காட்சி புலப்படவில்லை; அது தெளிவு தருவதில்லை. காற்றில்லை; ஒரே புழுக்கம். ஒளியில்லை. உள்ளே ஒரே இருட்டு. காற்றினிலே வந்த கீதத்தை இப்போது காது கேட்க முடியவில்லை; ஒரே பயங்கர நிசப்தம்.

சிலர் எல்லா ஜன்னல்களையும் இப்படி மூடிவிட்டு வாழ்கிறார்கள். பிறகு தங்கள் வாழ்க்கையைப் பற்றிக் குறைப்படுகிறார்கள். ஆனால், பலர் சில ஜன்னல் களை இப்படி மூடிவிட்டு அதைப் புரிந்து கொள்ளாமல், 'ஏன் இன்று ஒளியில்லை? ஏன் இன்று காற்றில்லை? ஏன் இன்று குயில் பாடக் காணோம்?' என்று தெரியாது வாழ்க்கையை ஓட்டிக் கொண்டிருக்கிறார்கள்.

எண்ணங்களைப் பற்றித் துருவித் துருவித் தேடிக் கொண்டு கடைசி வரைக்கும் போனால், நல்லெண்ணம் என்ற ஒரு சொல்தான் மிஞ்சுகிறது. அந்த ஒரு சொல் தான் வாழ்விக்கிறது. அந்த ஒரு சொல்தான் நம்மை யும் இப்பிரபஞ்சத்தையும் இணைக்கிறது. அந்த ஒரு சொல்தான் நமது மாளிகையின் எல்லா ஜன்னல்களை யும் திறந்து விடுகிறது.

எனது நண்பர் ஒருவர் இருக்கிறார். வாயார ஒன்று பேசுவார். மனத்திலோ வேறு எண்ணம் இருக்கும். அவரைப் பொய்யனென்றும், திருடன் என்றும் உலகம் புரிந்து கொள்ள அதிக காலம் ஆகவில்லை. சில சமயங்களில் நாம் மிகப் புத்திசாலித்தனமாக நடந்து கொண்டு வருகிறோம் என்று இறுமாந் திருப்போம். ஆனால், உலகில் நம்மைவிடப் புத்திசாலி கள் நிறையப் பேர் இருக்கிறார்கள் என்பது நமக்கு மறந்துவிடுகிறது.

தவறு செய்யும் போதுகூட உள்ளதை உள்ள படியே கூறுங்கள். நமக்கு அப்போது தவற்றைத் திருத்திக்கொள்ளும் வாய்ப்பு கொஞ்சம் இருக்கிறது. ஆனால், உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசும் போது, நமக்குத் திருத்திக்கொள்ளும் வாய்ப்பு இருக்

கிறதென்பதே புலப்படுவதில்லை. ஏனெனில் நம்மை நாமே ஏமாற்றிக் கொள்கிறோம். ஆகவேதான் சொன்னார் வள்ளுவர்,'தன்னெஞ்சறிவது பொய்யற்க' என்று. மேலும் சொன்னார், 'தன்னெஞ்சே தன்னைச் சுடும்!' என்று. நமது முன்னோர்களின் வாக்குகள் முக்காலும் பொய்க்காதவை; அனுபவத்திலிருந்து பிறந்தவை.

நம்மிடம் மன்னிக்கிற மனோபாவம் இருந்தால் தான் நமது தீய உணர்வுகள் நம்மைவிட்டு அகலும். மன அளவில் திரும்பத் திரும்ப எண்ணி மன்னிக்க முயல வேண்டும். எதிரியை ஒழிப்பேன் என்று எதிர்க் கட்சிக்காரர்களை ஒடுக்கியவர் தானே ஒழிந்துபோனார். உலகையும் எதிரிகளையும் நண்பர்களையும் தன் மனைவி யையுமே சந்தேகப்பட்ட ஒரு மனிதர் எல்லா இன்பங் களையும் இழந்தார். அவர் மனைவி அவரைவிட்டு ஓடிப் போனாள். சந்தேகத்தைப் போன்ற கொடியநோய் வேறில்லை.

வாழ்வில் நாம் கவனிக்க வேண்டிய மற்றோர் உண்மை இருக்கிறது. அதாவது வாழ்க்கை ஒரு தொடர் முயற்சி என்பது.

நேற்றுவரை ஞானியாக, துறவியாக இருந்த ஒரு மகான், காலப் போக்கில் பண வரவால், புகழால் செல்வாக்கினால் ஈர்க்கப்பட்டுச் சுக போகங்களில் மூழ்கினார். கண்களின் அடியே கரு வட்டம் தோன்றி முகஒளி மாறியது. அவரது பிரச்னைகள், துன்பங்கள், உடல் நோய்கள் அதிகமாயின. 'நேற்றுவரை நான் நல்லவனாக இருந்தேனே' என்னும் புலம்பல் எடுபட வில்லை. குணமும் ஒழுக்கமும் சேமிப்பு பாங்க்கில் போட்டுக் கொள்ளும் பொருட்கள் அல்ல. ஆகவே,

நாம் பழம் பெருமையில்—நான் நல்லவனாக இருந்தேன் — இருந்திருக்கிறேன் — என்ற எண்ணங்களில் காலந்தள்ள முடியாது. வாழ்க்கை ஒரு தொடர் முயற்சி. தொடர்ந்து நம் எண்ணங்களைக் கண்காணிக்க வேண்டும். இத்தகைய ஒரு மனவெளியில் —ஜன்னல்களைத் திறந்த நிலையில்—மனத்தில் ஆக்கபூர்வமான சிந்தனைகளை—பணம் சேர்க்கும் சிந்தனைகளையோ, சாதனை புரியும் சிந்தனைகளையோ, ஆத்ம வளர்ச்சி பற்றிய எண்ணங்களையோ விதைக்கும்போது மனிதன் அதிமனிதனாகிறான். அவன் ஆக்க சக்தியாக ஒளிவிடுகிறான். அந்த ஆத்ம ஒளி—நல்லெண்ண ஒளி இப்பிரபஞ்சத்திலுள்ள ஒளி சக்தியைத் திறந்த ஜன்னல்கள் வழியே அவன் மனத்தில் ஈர்க்கிறது.

மன ஜன்னல்களைத் திறந்து வைப்போம்.

ஆதவனை உள்ளே அழைப்போம்.

# 14

# நம் வாழ்க்கையை நாம்தான் உருவாக்கிக்கொள்ள வேண்டும்

தொழிலில் முன்னேறியவர்கள் மிகுந்த மனக் கட்டுப்பாடு உடையவர்களாய் இருக்கிறார்கள். மனக் கட்டுப்பாடு, பழக்கத்திஞல் கைவரக்கூடிய ஒன்று.

''மனத்தில் திரும்பத் திரும்ப எண்ணும் எண்ணம் நம்பிக்கையாகி வேர் விடுகிறது. நமது நம்பிக்கை செயலைத் தூண்டுகிறது. திரும்பத் திரும்பச் செய்யப் படும் செயல் பழக்கமாகிறது''என்று ரால்ப் வால்டோ டிரைன் என்ற தத்துவஞானி கூறிய வாக்கை நினைவில் கொள்ளுங்கள்.

மனக்கட்டுப்பாட்டை நம்முடைய பழக்கமாக்கிக் கொள்ள முடியும். அதற்கு உதவியாயிருப்பவை எண்ணமும் செயலும்தான். மன உறுதியைச் சில சமயம் பிடிவாதம், வைராக்கியம் என்றும் சொல்ல லாம். சுவாமி விவேகானந்தரே இளவயதில் எதையும் ஒரு வைராக்கியத்துடன் செய்ததாகக் குறிப்பிடுகிறார்.

'எதுவும் நம் கையில் இல்லை. சமய சந்தர்ப்பத் திற்கு ஏற்றாற்போல வாழ்க்கை அமைகிறது. இது

அவரவர் அதிர்ஷ்டத்தைப் பொறுத்தது’ என்று நமது ஊரில் நாம் எண்ணப் பழக்கப்பட்டிருக்கிறோம்.

இது பெரும்பாலும் உண்மை அல்ல. நம்முடைய வாழ்க்கையை நாம் பின்னோக்கிப் பார்த்தோமானால், வாழ்க்கையின் ஒவ்வொரு திருப்பமும் நாம் எடுத்த முடிவினால் ஏற்பட்டது என்கிற உண்மை தெளிவாகும்.

இதை ஒரு பயிற்சி மாதிரி செய்து பாருங்கள். ஒரு தாளை எடுத்துக் கொள்ளுங்கள். அதிலே உங்கள் வாழ்வில் ஏற்பட்ட முக்கிய சம்பவங்களை எழுதுங்கள். அவற்றுக்கெதிராக அவை எதனால், எந்த முடிவால் ஏற்பட்டது என்பதை எழுதுங்கள். நீங்கள் அப்போது எடுத்த முடிவுக்கு மாறாக வேறு ஒரு முடிவை எடுத்திருந்தால் என்ன நேரிட்டிருக்கும் என்று எழுதுங்கள்.

பள்ளிககுப் பின் கல்லூரிக்குப் போனீர்கள் அல்லது வேலை தேடினீர்கள். அது நீங்கள் எடுத்த முடிவு. அதை மாற்றிக் கொண்டிருக்கலாம். உங்கள் வாழ்வின் திசை திருப்பம் உங்கள் கையிலிருந்தது.

படிப்புக்குப் பின் வேலைக்குப் போகிறீர்கள்; அல்லது சொந்தத் தொழில் செய்கிறீர்கள்.

அது நீங்கள் எடுத்த முடிவு.

கொஞ்ச காலத்திற்குப் பின் திருமணம் செய்து கொள்ள நினைக்கிறீர்கள். உங்கள் அத்தை மகனையோ அல்லது மகளையோ அல்லது கல்லூரியில் படித்த நண்பரையோ அல்லது பெரியவர்கள் பார்த்து வைத்த பெண்ணையோ திருமணம் செய்து கொள்கிறீர்கள். அதுவும் நீங்கள் எடுத்த முடிவுதான்.

வாழ்வில் பெரும்பாலான காரியங்களும் நாம் அன்று எடுத்த முடிவுகளின் விளைவுகள்தான். அதாவது நம் வாழ்க்கையை நாம்தான் உருவாக்கி வந்திருக்கிறோம். விரும்பியிருந்தால் ஒவ்வொரு முடிவின் போதும், வேறு மாதிரி நடந்து கொண்டிருந்திருக்கலாம். நம்மிடம் அந்த வாய்ப்பு இருந்தது. நாம் தான் அதை நாம் விரும்பிய வழியில் உபயோகித்து இன்றைய வாழ்க்கையை அமைத்துக்கொண்டிருக்கிறோம்.

புயலும் இடியும் பூகம்பமும் சாவும் நம் கைக்கு அப்பாற்பட்டவையாயிருக்கலாம். ஆனால், நம் வாழ்வைச் சிருஷ்டித்த பல சம்பவங்களும் நாம் முன்பு எடுத்த முடிவின் விளைவுகள்தான்.

இதையே 'கோகே' என்ற புத்தகாசிரியர், "நம் வாழ்வைச் சிருஷ்டிக்கும் மிகப் பெரிய வாய்ப்பு நம்மிமிடம்தான் இருக்கிறது. இதுதான் உலகின் மிகப் பெரிய சக்தி" என்று கூறுகிறார்.

உதாரணத்திற்கு இரண்டு விஷயங்களை எடுத்துக் கொள்ளுங்கள். பி.ஏ. படித்த என் நண்பர் ஒருவர் அரசு அலுவலகத்தில் குமாஸ்தாவாகப் போய்ச் சேர்ந்தார். பல காலம் வாழ்வை ஓட்டிய பின் தன் வாழ்க்கை இப்படி ஆகிவிட்டதே என்று வருத்தப்பட்டார். அந்த அலுவலகத்தில் முன்னேற்றத்திற்கு வழியில்லை—வாழ்க்கை இப்படித்தான் என்று தெரிந்த பின் அதை விட்டு விட்டு வெளியே வர வேண்டியது தானே? யார் கூடாது என்றார்கள்? 'செக்குமாடாகச் சுற்றுவதில் ஓர் சுகம் இருக்கிறது' என்று தலையக் கொடுத்துவிட்டு, "என் கதி இப்படி ஆகிவிட்டதே..." என்று புலம்புவதில் என்ன அர்த்தம்?

இன்னும் ஒரு சிறிய விஷயத்தைப் பார்ப்போம். உணவருந்த ஓட்டலுக்குச் செல்கிறீர்கள். ஆறிப் போன உணவைப் பரிமாறுகிறுர் முதலாளி. என்ன செய்வீர்கள்? தொலைந்து போகிறது என்று சாப்பிட்டு விட்டு முணுமுணுப்பீர்களா, அல்லது ''நான் இதற்குக் காசு கொடுக்கப்போவதில்லை'' என்று அந்த இடத்தை விட்டு எழப்போகிறீர்களா?

இப்படித்தான் மனப்பழக்கம் ஏற்படுகிறது. நம்முடைய குணம் வெளிப்படுகிறது.

நமது ஊரில் எதையும் ஏற்றுக்கொள்ளும் மனோபாவம் அதிகம் வளர்ந்துவிட்டது. நம் மக்கள் அப்படி ஓர் 'பக்குவம்' அடைந்திருக்கிறுர்கள்.

இவர்கள் அச்சம் கொண்டவர்கள், எதிர்காலம் பற்றிய பயம் கொண்டவர்கள். தங்களது அபிப்பிராயத்தைவிடப் பிறரது அபிப்பிராயத்துக்குக்கட்டுப்படுபவர்கள். தங்களைப் பற்றித் தாழ்வு மனப்பான்மை கொண்டவர்கள். தன்னம்பிக்கை இல்லாதவர்கள்.

இப்போது தனி மனிதர்களை விட்டுவிட்டு இதே பிரச்னையை நாட்டுப் பிரச்னையாக எண்ணிப் பாருங்கள்.

டெல்லியைப் பற்றி சதா குறை சொல்லிக் கொண்டு காலத்தை ஓட்டும் மாநில அரசு; மாநில முதல்வரைப்பற்றிக் குறை சொல்லிக்கொண்டு ஒன்றும் செய்யாமல் அல்லது செய்யவே பயப்படும் அமைச்சர் கூட்டம்—இவர்களைப் பற்றிக் கொஞ்சம் சிந்தியுங்கள். 'நம் விதி நம் கையில்' என்று நினைத்துச் செயல்படுகிறுர்களா அல்லது 'நம் விதி அவர்கள் கையில்' என்று நினைத்துச் செயல்படுகிறுர்களா? எண்ணிப் பாருங்கள்! எதைச் சிருஷ்டிக்கிறுர்கள்?

இத்தகைய மனோபாவத்தின் மறுதலைப் பக்கம் என்ன? ''தொலைகிறது, விடுவோம்'' என்று பேசாம லிருக்கும்போது, அநியாயம் செய்பவர்கள் தைரியம் பெறுகிறார்கள். அநீதி வலுக்கிறது.

வயோலா என்ற நீக்ரோ பெண்மணி பஸ்ஸில் பிரயாணம் செய்தாள். ''எழுந்து பின் பக்கம் போய், கறுப்பர்களுக்கான இடத்தில் உட்கார். நிற்கும் வெள்ளைக்காரருக்கு இடம் கொடு'' என்றார் டிரைவர். வயோலா மறுத்து விட்டாள். டிரைவர் அடுத்த ஸ்டாப்பில் பஸ்ஸை நிறுத்தி அவளை இறக்கிவிட்டுப் போய்விட்டார். இன்வெறியைக் கண்டு அவள் குமுறினாள். நீக்ரோ இனமே குமுறியது. ''இந்த அவ மானத்தை—அநீதியை— இனியும் சகியோம்'' என்று குரல் கொடுத்து, நீக்ரோ மக்களை ஒன்றுபடுத்தி, 'பஸ் ஏறாப் போராட்டம்' நடத்தினார் மார்ட்டின் லூதர் கிங். பஸ்கள் மக்கள் இல்லாமல் காலியாக ஓடின. பஸ்நடத்துபவர்கள் நஷ்டமடைந்தார்கள். வருமானம் என்ற இடத்தில் யாரையும் அடிக்கும்போது, அவர்கள் நியாயத்தைக் காண முயல்கிறார்கள். (பணம் பேசு வதைக் கவனியுங்கள்!) இதன் மூலமாக நீக்ரோ இனம் பஸ்களில் சமத்துவ மரியாதை பெற்றது.

ஓர் இனத்துக்கே புதிய சுயமரியாதை பிறந்தது. நீக்ரோ வரலாற்றில் ஒரு புதிய சகாப்தம் பிறந்தது.

சம்பவங்களும் சரித்திரமும் நம் கையில்தான் இருக்கின்றன.

தொழில் தொடங்குகிறீர்கள்;உங்களிடம் தொழி லுக்கான ஒரு பிரமாதமான 'ஐடியா' இருக்கிறது. ஆகவே பாங்கிற்குச் சென்று பணம் கேட்கிறீர்கள்.

பாங்க்கில் பணம் இல்லை என கை விரிக்கிறார்கள். நாம் என்ன செய்யலாம்? 'விட்டதடி ஆசை விளாம்பழத்து ஒட்டோடே' என்று பாடிக்கொண்டு வீட்டுக்கு வருவீர்களா? இல்லை...?

எதிர்ப்புக்களை ஊடுருவும் மன தைரியம் இருக்கிறதே அது வேண்டும் நமக்கு. எதிர்ப்புக்களை எல்லாம் சமாளித்து, மேலே வரும் தன்னம்பிக்கை இருக்கிறதே அது வேண்டும் நமக்கு... அது இருந்தால் எல்லாவற்றிற்கும் ஒரு வழியைக் கண்டுபிடித்துவிடும் நம் மனம்.

சிலரைப் பார்த்திருக்கிறீர்களா, முடியாத காரியத்தைக்கூட எளிதாகச் செய்து விடுவதுபோன்ற ஒரு நளினம் அவர்களிடையே தென்படும். கஷ்டமான காரியங்கள்கூடச் சுலபமானதுபோல நம்மை நம்ப வைக்குமாறு அவர்கள் செயல்படுவார்கள். அத்தகைய குணங்களை அவர்கள் எப்படி வளர்த்துக் கொண்டார்கள் என்று யோசித்துப் பார்க்க வேண்டும்.

அது ஒரு மனோபாவம். தன்னம்பிக்கையை அடிப்படையாகக் கொண்ட மனோபாவம். வெற்றிகரமான சாதனைகளினால் மனிதர்கள் தன்னம்பிக்கைப் பெறுகிறார்களா, அல்லது தன்னம்பிக்கை அசாத்தியமாய் இருப்பதனால் எடுக்கும் காரியங்களில் வெற்றி காண்கிறார்களா என்றால் 'இரண்டும்தான்!' என்பதுதான் உண்மையாக இருக்க முடியும்.

# 15

# நல்ல மனநிலையை வளர்த்துக் கொள்க

நமது லட்சியத்திற்கேற்ப நாம் அடையும் ஊர் அமையுமே தவிர, மற்றபடி கடக்கவேண்டிய படிகள், திருப்பங்கள் எல்லாம் ஒன்றுதான். சிலர் அரசியல் தலைவராக வர ஆசைப்படுகிறார்கள். சிலர் தமிழ்ப் புலவராக வர ஆசைப்படுகிறார்கள். நீங்கள் தொழில் செய்பவராக—தொழிலதிபராக வர ஆசைப்படுகிறீர் கள்.

உலகில் வாழும் ஒவ்வொருவருக்கும் தனித் திறமைகளும் தனிப்பிரச்னைகளும் இருக்கின்றன. எந்த அறிஞனும் ஆலோசகனும் எல்லாவித தனிப் பிரச்னை களையும் பொதுவான கட்டுரைகளில் ஆராய முடியாது.

ஒரு கருத்தை நாம் படிக்கும்போது, நாம்தான் நிற்க வேண்டும்; நின்று சிந்திக்க வேண்டும்; 'இந்தக் கருத்தை என் வாழ்வில் எனக்கு வந்திருக்கிற பிரச்னை யில் உபயோகிக்கும்போது என்னாகும்?' என்று நாம் தான் பொதுவான விஷயங்களை நமதாக்க வேண்டும்.

அத்தகைய மனப் பழக்கத்தை நாம் வளர்க்க வேண்டும்.

பிறர் நமக்காகச் சிந்திக்க முடியாது; பிறர் நமக்காக முடிவெடுக்கக் கூடாது; பிறர் நமக்காக வாழ முடியாது. நாம்தான், 'நம்மால் முடியும். கஷ்டமோ நஷ்டமோ ஊடுருவிப் பார்ப்பேன்' என்று பல்லைக் கடித்துக் கொண்டு நம்பிக்கையோடு செயல்பட வேண்டும்.

தண்ணீரை உறிஞ்சி, சூரியனைக் காண விழைந்து, வெடித்து வெளிவரும் விதைபோல, நாம்தான் மலர முயல வேண்டும். மக்களின் தேவைகள் என்ன, எத்தகைய பொருட்களுக்குத் தட்டுப்பாடு இருக்கிறது, எதெதற்குத் தொழில் நுட்பம் தேவை, எதெதற்கு அதிக முதல் தேவை என்பன போன்ற விஷயங்களை மத்திய—மாநிலத் தொழில்நுட்ப உதவி நிலையங்களிலிருந்தும், தொழில் செய்பவர்களிடமிருந்தும், தொழில் ஆலோசகர்களிடமிருந்தும் பெற வேண்டும். இவை அனைத்தும் இரண்டாவதான விஷயங்கள். சாலையில் சல்லிகளைக் கொட்டித் தாரை ஊற்றி ரோடு போடுவதுபோல, இவையெல்லாம் நடைமுறைச் செயல்கள்; நுட்பங்கள்.

ஆனால், எங்கே சாலை போடவேண்டும், எந்த ஊருக்குச் செல்ல சாலை போடுகிறோம் என்கிற விஷயங்கள் முக்கியமானவை.

தொழிலில் முன்னேறுவதற்கு முக்கியமான அடிப்படைக் காரணங்கள் இரண்டு. 'தொழில் செய்வேன், பணக்காரனுவேன், என்னுல் முடியும்! அதற்காக எந்தத் தியாகத்தையும் மேற்கொள்வேன்' என்ற மனோபாவம். அது முதலாவது. இரண்டாவது, செயல்.

நம் லட்சியத்தை ஒட்டிச் சதா செயல்படுவது; காரிய மாற்றுவது.

மற்றைய விஷயங்கள்—நீர் பாய்ச்சி, களைஎடுத்து, பூச்சி மருந்து தெளித்து, நெற் கதிர் காயக் காத் திருந்து அறுவடை செய்வது போன்ற வழக்கமான விஷயங்கள்.

மனோபாவத்தை ஆங்கிலத்தில் Attitude என் பார்கள். சிலரிடம் சந்தோஷமான மனோபாவத்தைப் பார்க்கிறோம். சிலரிடம் துடிப்பான மனோபாவத்தைக் காண்கிறோம். சிலரிடம் எதையும் எளிதாக எடுத்துக் கொள்ளும் மனோபாவத்தைப் பார்க்கிறோம்.

இதை இன்னும் கொஞ்சம் விரிவாகக் காண் போம்.

ஒரு கவிஞன் எழுதுகிறான். கவிதை அங்கே ஊற்றாகப் பீறிடுகிறது. இனிமையும் தெளிவும் கவர்ச்சி யும் துடிப்புமாகக் கவிதை பிரவாகமெடுக்கிறது, அந்தக் கவிஞன் மனத்திலே என்ன நினைவுகள், என்ன எண்ணங்கள், என்ன கற்பனைகள் ஓடுகின்றன என்று கேட்டுப் பாருங்கள்.

சலசலவென ஓடும் தெளிந்த நீரோடைக்கு முன் உட்கார்ந்திருக்கும் ஒரு நினைவு மனத்தில் ஓடுகிறது என்கிறான். ஏதோ நீர்வீழ்ச்சி கொட்டுவதைப் போன்ற மனநிலை என்கிறான். ஆழத்தில்முத்தெடுப்பது போல, வைரக் கற்கள் பளிச்சிடுவதுபோல, கத்தி வீசுவது போல, சிலம்பம் விளையாடுவது போல, மத்தாப்பு வாணம் வானில் மலர்ந்து சிதறுவது போல—மனத்தில் கற்பனை ஓடுகிறது என்கிறான்.

இராம நாராயணன் என்ற சினிமா டைரக்டர், "செந்தமிழ் தேன்மொழியாள் நிலாவினில் சிரிக்கும் மலர்க்கொடியாள்" என்ற கவிஞர் கண்ணதாசனின் பாட்டு—ஆக்கப் படைப்புகளில் நான் ஈடுபடும்போது என்மனத்தில் ஓடும்" என்று ஒரு பேட்டியில் கூறுகிறார். ஓர் இனிய பாடல், நீர்வீழ்ச்சி கொட்டும் ஒரு மனக் கற்பனை—இதைத்தான் மனநிலையை உருவாக்கும் கற்பனை அல்லது உணர்வு என்கிறோம். இந்த மனோ பாவம் ஆழ்மனத்தில் உலவும்போது அந்த உணர்வு நம்முள் ஓர் ஆக்க சக்தியைத் தோற்றுவிக்கிறது.

'செய்து முடிப்பேன்' என்று எண்ணுபவனின் மன நிலை என்ன? மாட்டுப் பொங்கலில் கிராமத்தில் சிலம்பமாடும் வீரர்களை அவன் கற்பனை செய்கிறான். ராய் சவுத்திரி செய்து வைத்திருக்கும் உழைப்பாளர் களின் சிலை—அவன் மனத்திலே ஒரு கற்பனையாக எழுகிறது.

இந்த மன நிலையை நாம் அதிகம்—அடிக்கடி— மனத்தில் நிறுத்துவதன் மூலம் நம் காரியங்களைச் சாதனைகளாக்கலாம்.

"மலை உச்சியை நான் பார்த்துவிட்டேன்" என்று லட்சோபலட்ச நீக்ரோ மக்களிடையே முழங்குகிறார், மார்ட்டின் லூதர்கிங். மலை உச்சியில் ஏறும் துணிவு, வீரம், விடாமுயற்சி, அதில் ஏறி நிற்கும் பெருமை— இதைக் கற்பனையில் விரிய விடுங்கள். மனநிலை— மனோபாவத்தைப் பற்றிய விளக்கம் உங்களுக்குக் கிடைக்கும்.

வீரம், துணிவு, மலை ஏறும் உறுதி, மலை உச்சி, மலை உச்சியின் காற்று, ஏறி நிற்கும் சாதனை என்ற கற்பனை

களை அடி மனத்தில் உலவ விடுங்கள். உங்கள் தொழி லார்வத்தை வாழ்க்கை லட்சியத்தை அத்துடன் சேர்த்து மலர விடுங்கள்.

தமிழ்நாட்டில் ஜேம்ஸ் பிரடெரிக் என்ற இளைஞரை-கோரமண்டல் பூச்சி மருந்து கம்பெனியின் தலைவரைக் கண்டேன். ரஹ்மான் என்ற தொழிலதி பரைக் கண்டேன்; கனரா பாங்க்கின் தலைவரைக் கண்டேன்.

அங்கெல்லாம் சாதனைகளின் திருவுருவத்தைக் கண்டேன். முடியும் என்ற நினைப்பும், செய்வேன் என்ற துடிப்பும் கொண்ட மன நிலையின் பேருருவங் களாக அவர்களைக் கண்டேன்.

நமது ஆசைகள், கனவுகள், கற்பனைகள் வலிவு மிக்கவை. ஒரு விஷயத்தை மனத்தில் கற்பனைசெய்யும் போது, புலனுக்கப்பால் இருக்கும் கண்காணு அணுத் துகள்களைக் கொண்டு நாம் கட்டடம் கட்டுகிறோம். திரும்பத் திரும்ப அதே மனக் கற்பனையை மேவவிடும் போது மேலும் அணுத்துகள்கள் சேர்ந்து கட்டடத் திற்கு வலிவையும் உருவையும் கொடுக்கின்றன. இந்த நிகழ்ச்சி புலனுக்கப்பாலுள்ள விஷயங்களிலிருந்து துவங்கி புலனுக்குப் புலப்படும் பொருளாக மாறு கிறது. நம் ஆசை நிறைவேறுகிறது. சக்திநிலை பொருள் வடிவம் பெறுகிறது.

மனக் கற்பனைதான் தீர்க்க தரிசனம் என்ற பெயரைப் பெறுகிறது. தீர்க்க தரிசனக்காரர்கள் லட்சியங்கள் ஈடேறுவதை முன்கூட்டியே காண் கிறார்கள். சாதனையாளர்கள் கற்பனையின் மூலம் இன்று இல்லாததை நாளை ஓர் இருக்கும் பொருளாக

மாற்றுகிறார்கள். வரவிருப்பதைக் காண்பதும், வர விருப்பதை உருவாக்குவதும் மனக் கற்பனைதான்.

சித்தார்த்தர் ஒருநாள் கனவு காண்கிறார், உலகம் தீப்பற்றி எரிவதுபோல. ''ஓடு! காப்பாற்று!'' என்று யாரோ கூறுவதுபோல, இதன் விளைவாக தீய சிந்தனை, தீய பழக்கம், தீய சொல் என்பவற்றிலிருந் தெல்லாம் விலக ஓர் எட்டு வழிப் பாதையைக் கண்டு உலகின் முன் வைக்கிறார் புத்தபிரானாக.

நல்ல மனநிலை என்றபடுதாவில் லட்சியம் என்ற சித்திரத்தைத் தீட்டுவோம்.

# 16

# எல்லாவற்றிற்கும் மனப்பக்குவம் வேண்டும்

தியானம் பற்றியும் யோக மார்க்கங்கள் பற்றியும் கேட்ட சில அமெரிக்கர்கள் மிகுந்த உற்சாகமடைந்தார்கள். உடனே ஒரு விமானத்தை 'சார்ட்டர்' செய்தார்கள். இமயமலை அடிவாரத்தில் அந்த யோகியின் ஆசிரமத்திற்குப் போய்ச் சேர்ந்தார்கள். "குருவே! யோகமார்க்கத்தில் எங்களுக்குள்ள ஈடுபாடு கொஞ்சநஞ்சமல்ல. நீங்கள் அந்த யோக முறைகளை உடனே சொல்லித் தரவேண்டும்" என்று கேட்டுக் கொண்டார்கள்.

யோகி மேலும் கீழும் பார்த்தார். "நீங்கள் எல்லோரும் அந்தச் சுவரின் முன் உட்கார்ந்து கொண்டு ஒன்று, இரண்டு என எண்ணிக் கொண்டிருங்கள்" என்றார். அமெரிக்கர்களுக்கு 'சப்' பென்று போய்விட்டது, இந்தப் பதிலைக் கேட்டதும். அவர்கள் இப்போது யோகியை மேலும் கீழும் பார்த்தார்கள்.

யோக முறையும் சரி, வெற்றிகரமான வாழ்க்கையும் சரி, திடீரென முளைத்து விடுவதல்ல. அவை

எல்லாவற்றிற்கும் ஒருவழிமுறை உண்டு; ஒரு திட்டம், ஒரு நியதி உண்டு. பயிற்சி தேவை. மனப்பக்குவம் தேவை. காலம் தேவை.

வெற்றிகரமான தொழில் என்பது அதிர்ஷ்டமல்ல. விதியல்ல. ''பழைய இரும்பு விற்ருன், பணக்காரனுகி விட்டான்'' என்று பலரும் சொல்வதுபோல திடீரென ஏற்படுவதல்ல.

வெற்றிகரமான வாழ்க்கை வெற்றிகரமான நாட்களின் கூட்டுத் தொகுப்பு. வெற்றிகரமான தொழில், வெற்றிகரமான பல காரியங்களின்—பல கவனங்களின்—கூட்டு விளைவு.

தொழிலை லட்சியமாக எடுத்துக் கொள்பவர்கள்—தொழிலை, தொழிற் கூடத்தை, புதிய பொருளை—மனிதன்தான் கண்டுபிடிக்கிருன், வெளிக் கொணருகிருன் என்பதை மறந்துவிடக் கூடாது. மனிதன் தன் மனத்தைப் பிரதிபலித்து ஒரு தொழிலை உருவாக்குகிருன். ஆக, மனித மனத்தின் எண்ணங்களும், போக்குகளுமே ஒரு தொழிலின் வெற்றி தோல்வியை நிச்சயிக்கின்றன.

தொழில் தொடங்கும் அல்லது புதியன செய்யும்—விரும்பும் ஒருவன் எதைச் சிந்திக்க வேண்டும்; எதை ஆராய வேண்டும்?

1. நமது வலிமை-நமது திறமை—எதில் இருக்கிறதென்று நாம் பார்க்க வேண்டும். சிலரிடம் புதிய பொருளைக் கண்டு பிடிக்கும் விஞ்ஞானத் திறமை இருக்கும். சிலரிடம் பேச்சுத் திறமை தென்படும். சிலரிடம் எல்லோரையும் ஒன்று கூட்டி நிர்வகிக்கும் திறமை இருக்கும். எதில் நமது திறமை இருக்கிறது என்பதைத் தெளிய வைக்கும் பல கேள்விப் பட்டியல்

களை மனோதத்துவ நிபுணர்கள் தயாரிக்கிறார்கள். அந்தக் கேள்விகளுக்குப் பதிலளிப்பதன் மூலம் நம்மை நாம் அறியலாம். இதைவிட எளிதாக, எந்தெந்த விஷயங்களுக்காக, காரியங்களுக்காக உங்களைப் பிறர் பாராட்டி இருக்கிறார்கள் என்பதைப் பின்னோக்கி எண்ணிப் பார்த்து எழுதிக் கொள்ளுங்கள். இந்த 'முன் சாதனை' ஒரு வழிகாட்டியாகப் பயன்படும்.

மற்றும் ஒரு மூன்று மாதத்திற்குப் பத்திரிகை களில் வரும் எந்தெந்த விஷயங்கள் உங்களைக் கவரு கிறது என்பதை அந்தந்தப் பக்கங்களை, தாளைக் கத்த ரித்துக் கொஞ்சம் ஒட்டி வாருங்கள். உங்கள் ஆர்வம் புலப்படும்.

உங்களைத் தெரிந்த ஆசிரியர்கள், நண்பர்கள் இவர்களிடம் ஜாக்கிரதையாக — மறைமுகமாக விஷயங்களை விவாதியுங்கள்.

பலரது வாழ்க்கையையும் பார்க்கும்போது, வெற்றி பெற்றவர்கள் எல்லாம் அவர்கள் எதில் சிறப் பாகச் செய்ய முடியுமோ அதில்தான் இறங்கி இருக் கிறார்கள் என்பது புலனாகும்.

எனது நண்பர் ஒருவர் நிறைந்த நிர்வாகத் திறன் படைத்தவர். கண்டிப்பு, தெளிவு, திட்டம் இவற்றை வாழ்க்கையில் கடைப்பிடிப்பவர். கல்லூரியில் தேறி யதும் கல்லூரியில் ஒரு வேலை கிடைத்தது என்று எடுத்துக் கொண்டு, இன்று கல்லூரிப் பேராசிரியராக இருக்கிறார். பேராசிரியர் பதவி குறைவான பதவி யல்ல. தவறாகக் கொள்ளாதீர்கள். தான், காவல் துறையிலோ, நிர்வாகத் துறையிலோ இறங்கி இருக்க வேண்டும் என்பதை அவர் தம் அந்திய காலத்தில்

சொல்லுவதிலிருந்தும் உணர்வதிலிருந்தும் கூறு கிறேன்.

ஒரு செடியை நடும் நாம், அதற்கேற்ற மண்ணைத் தேர்ந்தெடுக்கிறோம்—பருத்திக்கோர் மண்; நெல்லுக் கோர் மண்;உளுந்துப் பயறு,துவரைக்கோர் மண்என. அதுபோல நம்மிடமுள்ள திறமை என்ற விதையைச் சரியான வாய்ப்பு என்ற சரியான மண்ணில் நட வேண்டும், நல்ல விளைச்சல் பெற.

2. சகஜமாக எந்தவிதமான உணர்வுகள் நம்மை ஆட்டிப் படைக்கின்றன என்று நம்மை நாமே பகுத் தறிய வேண்டும். நம்மிடம் மேவுவது காமமா? குரோதமா? வஞ்சமா? பிறன் கெட்டுப் போக வேண்டும் என்ற பொறாமையா? அன்பா? உதவும் உள்ளமா? என்பதை நாம் சீர்தூக்கிப் பார்க்க வேண்டும்.

தொழிலில் (வாழ்க்கையிலும் சரி) ஏற்றத் தாழ்வு கள் வரும். திடீரென பிரச்னைகள் முளைக்கும். யந்திரம் ஓடாது; பணத்தட்டுப்பாடு ஏற்படும்; முக்கியமான நபர் வேலையைவிட்டுப் போய்விடுவார். இதை எல்லாம் சமாளிக்க நமது உணர்வுகளைக் கட்டுப்படுத்த நமக்குத் தெரிந்திருக்க வேண்டும்.

நண்பர் ராமையா, ஸ்பிக்கின் தலைவர் திரு.ஏ.சி. முத்தையாவைப் பற்றிக் கூறிய வார்த்தைகள் என் நினைவுக்கு வருகின்றன. "பிரச்னைகள் பெரிதாக இருக்கும். என்ன செய்வதுஎன்று தெரியாமல் நாங்கள் படபடப்புடன் அவரை அணுகுவோம். அவர் நிதான மாக ஒரு புன்சிரிப்புடன் நாங்கள் சொல்வதைக் கேட் பார். அவர் நிதானத்தைக் காணும்போதே இந்தப்

பிரச்னே பெரிய விஷயமல்ல என்ற நம்பிக்கை எங்கள் மனத்திலே எழும்'' என்பார் திரு. ராமையா.

இதையேதான் 'நிலேயில் திரியாது அடங்கியான் தோற்றம்' என்கிருர் வள்ளுவர். எதிலும் தன்னே இழக்காமல் விஷயங்களேக் கணிக்கும் ஒரு மனேபாவம் ஒரு தொழிலே நிர்வகிப்பவர்கள் மற்ற எல்லா வேலே களேயும் செய்பவர்களேவிட அதிகம் நெருக்கடிகளுக்கு ஆளாக வேண்டி இருக்கிறது. அப்போதெல்லாம் உணர்வுகளால் உந்தப்படாமல் நிதானமாக நாம் அணுகக் கற்றுக் கொண்டோமானல் — பழகிக் கொண்டோமானல்—நாம் நீண்ட காலம் வாழ முடியும்.

3. நமது பழக்க வழக்கங்கள் எப்படி நம்மை உரு வாக்கி இருக்கின்றன—எப்படிப் பிறருடன் பழகு கிருேம்—என்பதை நாம் எண்ணிப் பார்க்கவேண்டும். ஏனெனில், ''வெற்றி என்பது என்ன? பிறர் உங்களே எடைபோடும் மதிப்புதான் வெற்றி'' என்று அனுபவ சாலி ஒருவர் ஒரு சமயம் கூறினர். கொஞ்சம் அதைப் பற்றிச் சிந்தித்துப் பாருங்கள். ஆசிரியர் உங்களேக் கணிக்கிருர்; உங்கள் மேலதிகாரி உங்களேக் கணிக் கிருர்; உங்களது சக தொழிலாளர்கள் உங்களேக் கணிக்கிருர்கள். ஊரும் உலகமும் பத்திரிகையும் உங்களேக் கணிக்கின்றன. வெற்றி என்பதெல்லாம் பிறர்போடும் எடையில்தான் முடிகிறது.

மேலும் இந்த உலகில் நாம் பிற மக்களுடன் வாழ்வதில்தான் பெரும்பகுதியைக் கழிக்கிருேம். அவர்களுடன் எப்படிப் பழகுகிருேம் என்பதில்தான் நம் சந்தோஷமே இருக்கிறது; நம் வெற்றியும் அதில் தான் இருக்கிறது. ஆகவே, மனித உறவுகளேப் பற்றிய

தெளிவும் ஓர் எடை போடும் மனோபாவமும், அதற் கேற்பப் பழகும் தன்மையும் இல்லாவிட்டால் தொழிலில் மட்டுமல்ல, வாழ்க்கையிலும் நாம் தோற்றுப் போய்விடுவோம்.

ஒரு தொழில் ஸ்தாபனத்தின் வெற்றி என்பது அங்குள்ள திறமைசாலிகளின் கூட்டு முயற்சியின் விளைவு. நம்மால் பிறருடன் சரியாகப் பழக முடிய வில்லை என்றால் ஒரு திறமைசாலி நம்முடன் இருக்க மாட்டார். தனிமரம் தோப்பாவதில்லை.

நாம் பிறருடன் பழகுந் தன்மையை வளர்க்க வேண்டும்; இனிமையாகப் பழகக் கற்றுக்கொள்ள வேண்டும்; பாராட்டக் கற்றுக் கொள்ளவேண்டும்; திறமையை மதிக்கக் கற்றுக் கொள்ளவேண்டும்; சிறு குறைகளைக் கண்டவிடத்துக் காணாதிருக்கக் கற்றுக் கொள்ள வேண்டும். நம்மையும் பிறரையும் உற்சாகப் படுத்தக் கற்றுக்கொள்ளவேண்டும்.

# 17

# லட்சியத்தில் பற்று வேண்டும்

வெற்றி பெற்றவர்களின் வரலாறுகளைக் கவனமாகப் படித்தோமானால் அவர்கள் எல்லோரும் பல தடைகளையும் மீறி வந்தவர்கள் என்பது புலனாகும். அவர்கள் பாதையில் ஏராளமான இடையூறுகள், சங்கடங்கள், தடைகள் இருந்திருக்கின்றன. தடைகளால் அவர்களைத் தடை செய்ய முடியவில்லை. தாங்கள் எடுத்த காரியத்திலேயே குறியாயிருந்து முன்னேறியிருக்கிறார்கள். தடைகளைக் கண்டு அவர்கள் மனங்கலங்கியிருக்கக்கூடும். ஆனால், அதற்காக அவர்கள் அதை விட்டுவிடவில்லை; பயந்து பின்வாங்கவில்லை.

ஹூஸ்டன் மாநகரில் வாழும் ஒரு மில்லியனர் தம் வரலாற்றை ஒரு புத்தகமாக எழுதி இருக்கிறார். டாம் பேட்ஜா (Tom Fatjo) என்ற அந்தக் கோடீஸ்வரர் குறிப்பிடுகிறார்: ''எந்தக் கஷ்டங்கள் வந்த போதிலும், அப்போதெல்லாம் எனக்கு நானே சொல்லிக் கொள்வேன். 'எது வரினும் சரி—எது நேரினும் சரி' என்று. இந்த மனோபாவத்தை நான் தொடர்ந்து ஒவ்வொரு முறையும் உபயோகித்தேன்.''

'எது வரினும் சரி...எது நேரினும் சரி...' என்ற வாக்கியத்தை நான்கு முறை உரக்கச் சொல்லிப் பாருங்கள். நம் மனத்தில் ஓர் உறுதி பிறக்கக் காண லாம் ஒரு பிடிவாதம், ஒரு வைராக்கியம் பிறக்கக் காணலாம். 'பல்லை நறநறவென்று கடித்தானையா ராஜா தேசிங்கு' என்ற நாடோடிப் பாடலைக் கேட்டி ருப்பீர்கள். அந்தப் பாடலை ஒருமுறை சொல்லுங்கள். மனத்திலே ராஜா தேசிங்கின் உருவத்தை ஒரு கணம் கற்பனையில் விரிய விடுங்கள். அந்தக் கற்பனையே நமக்குத் தெம்பு தரும்; உறுதி அளிக்கும்.

"எது நேரினும் சரி..." என்று சொல்ல எது அவர் களைத் தூண்டுகிறது.

தங்கள் லட்சியத்தில் உள்ள பற்று, தீவிரம், தணி யாத ஆசை. அவர்களிடம் லட்சியம் மனத்தில் கன லாகக் கனன்று கொண்டிருக்கிறது. அது அணைவ தில்லை. அந்தத் தணியாத கனல், எங்கே பஞ்சு இருக்கும், காய்ந்த மரமிருக்கும், பற்றி எரிய உண விருக்கும்-என்று சதா வானத்தில் வட்டமிடும் கழுகு போல் ஆராய்ந்த வண்ணம் இருக்கிறது. ஒவ்வொரு செயலையும் சந்தர்ப்பத்தையும் மனிதரையும் தன் லட்சியத்தையொட்டிச் சீர்தூக்கிப் பார்க்கிறது. இடம் கண்டவிடத்தே கனல், பொறியாகிப் பற்றி 'ஓகோ'வென்று எரிகிறது.

லட்சியம் திரும்பத் திரும்பச் சிந்திக்கப்பட வேண்டும். அந்த லட்சியம் தரும் பலன்களை ஆவலுடன் எண்ணிப் பார்த்து நம் லட்சியத்திலுள்ள தீவிரத்தை நாம் வளர்த்துக்கொள்ளவேண்டும்.

சிலர் ஒரு மூன்று மாத காலம், ஆறு மாத காலம் ஒரு விஷயத்தில் தீவிரமாக இருக்கிறார்கள். பின் அவர்

களுக்கே அதில் நம்பிக்கை போய்விடுகிறது; அல்லது பிற விஷயங்கள் அவர்களைக் கவர்ந்து விடுகின்றன; அவர்கள் லட்சியத்தில் அசிரத்தையாகிவிடுகிறார்கள்.

அஸ்திவாரத்தைப் போட்டுவிட்டு நாம் பேசாமலிருந்துவிட்டால் எப்படிக் கட்டடம் உருவாகும்? அதே கதைதான் இவர்களுடைய லட்சியத்துக்கு ஏற்படுகிறது. செடியைநடும் நாம், தினம் அல்லது வாரம் இருமுறை அதற்குத் தண்ணீர் வார்க்க வேண்டும், ஊட்டமளிக்க வேண்டும். 'செடியை நட்டு விட்டேன். அது தானாக வளரும்' என்று நம்புபவர்கள் பரிதாபத்திற்குரியவர்கள். அடுத்த முறை பார்க்கும்போது ஆடு தின்றிருக்கும்.

இதைத்தான் சளைக்காத மனம் என்று கால்வின் கூலிட்ஜ் எழுதுகிறார். ஆங்கிலத்தில் 'பர்சிஸ்டன்ஸ்' (Persistence) என்ற ஒரு வார்த்தை இருக்கிறது. விடாப் பிடியாக, தளராமல், உடும்புப் பிடியாக இருப்பதை அது குறிக்கிறது.

ஒரு சமயம் 'ரீடர்ஸ் டைஜஸ்டில்' வந்த கட்டுரை ஒன்றில் குறிப்பிட்டிருந்தார்கள்-எந்த விஷயத்தையும் 21 நாள் நாம் விடாமல் பயின்றோமானால் பலன் கிடைக்கும் என்று. அவர்கள் எடை குறைவதற்கான வழிபற்றி 21 நாளைக் குறிப்பிட்டிருந்தார்கள். நீங்கள் இதைப் பயிற்சி செய்து பார்த்தீர்களானால் இந்தச் சின்ன 21 நாள் விஷயம்கூட நம்மால் சில சமயம் தொடர்ந்து செய்யமுடியவில்லை என்பது விளங்கும்.

21 நாளா, 21 வருஷங்களா என்பது நாம் எடுத்துக் கொண்ட லட்சியத்தின் தன்மையைப் பொறுத்தது. 'நாட்டு விடுதலை' என்பதை எப்படி முழு மூச்சாய் எடுத்துக்கொண்டு, எத்தனை ஆண்டுகள்

காந்தி பாடுபட்டார் என்பதை நினைவில் கொண்டு வாருங்கள், பாகிஸ்தான் தனியே பிரிய வேண்டும் என்று எப்படி ஜின்னா உடும்புப் பிடியாய் நின்றார் என்று எண்ணிப் பாருங்கள்.

லட்சியத்தை அடைவது என்பது ரோஜாப்பூ பறிப்பதற்கு ஒப்பானதல்ல. அவ்வளவு எளிதாக இருந்தால் உலகமே வேறு விதமாக அமைந்திருக்கும். சாதனை என்பது தடைகளை மீறுவது, சோதனைகளைச் சமாளிப்பது, லட்சியத்தில் குறியாயிருப்பது—அது தான் சாதனை.

நம் லட்சியம் பயனுள்ளதாய் இருக்கவேண்டும். கண்ணியமானதாய் இருக்க வேண்டும். பெருமை தரவல்லதாய் இருக்கவேண்டும்.

சினிமா நட்சத்திரங்களின் பதிலைப் பெற்றுவிட வேண்டுமென்பதுதான் பல இளைஞர்களின் லட்சிய மாக இருக்கிறது! இதைப் பார்க்கும் போது, 'நாட்டின் எதிர்காலம் இளைஞர்கள் கையிலிருக்கிறது என்று சொல்கிறோமே' என்ற அச்சம் எழுகிறது. இவர்கள் வாழ்வு எங்கு, எப்படி முடியும் என்பதைப் பார்க்கச் சோதிடர் தேவையில்லை.

அமெரிக்க நாட்டில் ஏன் இளைஞர்கள் இப்படி சினிமா நட்சத்திரங்களின் நடுப்பக்கப் படத்தை எடுத்துச் சுவரில் ஒட்டி வைப்பதில்லை என்று யோசிக் கிறேன். வாழ்வில் எது முக்கியம், எது முக்கியமில்லை என்பது அவர்களுக்கு இளவயதிலேயே புரிந்திருக் கிறது. "தான் முன்னேற வேண்டும்; பிற மனிதர் களுடன் சரிக்குச் சரியாக, சமமாக உலவ வேண்டும்; தன்னால் முடியும் என்பதை உலகிற்கும் தனக்கும்

நிரூபிக்க வேண்டும்'' என்பது அந்தராத்மாவின் துடிப்பாக அவர்களிடம் இருப்பதைக் காண்கிறேன்.

பெரிய பெரிய தலைவர்களையோ, சினிமா நட்சத்திரங்களையோ கண்டு அவர்கள் அயர்ந்துவிடுவதில்லை. நமது ஊரில் ஒரு தலைவர் வருகிறார் என்றால் கூடும் கூட்டத்தில் பத்தில் ஒன்றுகூட இங்கு ஜனாதிபதிக்காகக் கூடுவதில்லை. சில சமயம் டெலிவிஷனில் ஜனாதிபதி வரும் போதுகூட அந்த நிலையத்தை அணைத்துவிட்டு வேறு நிலைய நிகழ்ச்சிகளைக் கவனிக்கிறார்கள். ஏன் அப்படி?

அசாதாரண மதிப்பு என்பது அவர்களுக்கு யாரிடமும் ஏற்படுவதில்லை. ''அவர், அவர் தொழிலைச் செய்கிறார், நான் என் தொழிலைச் செய்கிறேன்'' என்ற மனப்போக்கு.

சங்கப் பாடல் ஒன்று கூறுகிறது. ''பெரியோரை வியத்தலும் இலமே, சிறியோரை இகழ்தல் அதனிலும் இலமே'' என்று. ''ஆகா ஓகோ'' என்று துதிபாடும் குணம் தனி மனித வளர்ச்சிக்கு நல்லதல்ல. தன்னைத் தாழ்த்திக் கொண்டு பிறரை உயர்த்தும் பழக்கத்தை ஒரு கலையாக வளர்த்திருக்கிறோம் நம் நாட்டில். நாம் நம்மை இழக்காமல் பிறரைப் பாராட்டும் போது தான் நம் வளர்ச்சிக்கு நாம் உதவியவர்களாவோம். நாம் வளர்வோம்.

சமுதாய மனவியல் இப்படி ஏன் ஆகிறது? ஏன் தனி மனிதன் தன்னைத் தாழ்த்திக் கொள்கிறான்? இதனால் தனி மனிதனின் வளர்ச்சி எப்படிப் பாதிக்கப் படுகிறது? நாமும் நம் நாட்டு அறிஞர்களும் இதைச் சிந்தித்துப் பார்க்க வேண்டும்; மாற்ற முயல வேண்டும்.

# 18

# வலிவான லட்சியம் வேண்டும்

பேராசிரியர் அ. ச. ஞானசம்பந்தம் தனது 'இலக்கியத் திறனய்வு' என்ற நூலில் குறிப்பிடுகிறர். 'நீங்கள் குண்டூசியைத் தலைப்பாகக் கொண்டும் ஓர் உன்னத கவிதையை எழுதலாம்; அல்லது குமரிமுனை யைத் தலைப்பாகக் கொண்டும் ஓர் உயர்ந்த கவிதையை எழுதலாம். ஆனல், ஒரு கவிதை எதனல் உன்னதம் பெறுகிறது? குண்டூசியைப் பற்றி எத் தகைய பிரமாதமான கவிதை எழுதினலும் அதனு டைய கனம், குமரிமுனையைப் பற்றி எழுதும் கவிதைக் குச் சமமாகாது. காரணம்? பொருளின் தன்மை. குண்டூசி லேசான தலைப்பு. குமரிமுனை கனம் நிறைந்த தலைப்பு.'—இப்படிப் பொருள்பட விளக்குகிறர் அ.ச. ஞானசம்பந்தம்.

அதுவே மனித லட்சியங்களுக்கும் பொருந்தும். 'சினிமா நட்சத்திரங்களுக்கு ரசிகர் சங்கம் நிறுவ வேண்டும்; அதற்குத் தலைவனக வரவேண்டும்' என்ப தும் லட்சியம்தான். 'ஈழம் விடுதலை பெற வேண்டும். அதற்கு உழைக்க வேண்டும்' என்பதும் ஒரு லட்சியம் தான். லட்சியத்தின் கனத்தால் லட்சியங்கள்

பெருமை பெறுகின்றன. அதை எடுத்துக்கொண்ட மனிதர்கள் வலிமையும் பெருமையும் பெறுகிறார்கள். சரித்திரத்தில் சில சில சாதனைகளைப் பார்க்கும்போது நமக்கு ஒன்று தெரிகிறது. சாதாரண மனிதர்கள்கூட தாங்கள் கொண்ட மகத்தான லட்சியங்களால் உயர்ந்து விடுகிறார்கள் என்பதுதான் அது.

லட்சியம் கனம் கொண்டதாய், பயன் கொண்ட தாய் இருக்கவேண்டும். ஒரு தொழில் செய்ய விரும்பு கிறவனது லட்சியம் உயர்லட்சியமாஎனச் சில தத்துவ வாதிகள் வினவக்கூடும்.

சந்தேகமில்லாமல், ஒரு தொழில் செய்பவன் சமுதாயத்திற்கு உதவுகிறான். தொழில் செய்வதன் மூலம் பல பேருக்கு வாழ்க்கை வாய்ப்பை வேலை மூலம் அளிக்கிறான். பொருள் உற்பத்தி மூலம் அதிகப் பணம் புரட்டுகிறான். அதிகப் பணத்தின் மூலம் மேலும் பல நன்மைகளைத் தனக்குக் கொடுத்த சமு தாயத்திற்கே செய்கிறான். எண்ணிப் பாருங்கள், ஒரு அண்ணாமலைப் பல்கலைக் கழகம், ஒரு பச்சையப்பன் கல்லூரி, ஒரு ராக்பெல்லர் நிதி நிறுவனம், ஒரு கார்னகி நிதி நிறுவனம் என்றெல்லாம் பணம் இல்லாதபோது செய்யமுடியுமா என.

தொழில் செய்பவன் சமூகத்திற்குத் தேவையான ஒரு பொருளை அல்லது ஒரு சேவையைச் செய்கிறான். அதன் புனிதம் எந்த யோகியின் புனிதத்திற்கும் குறைந்ததல்ல. பிறருக்கு வேலை தந்து, அதிலே அவர் களைப் பெருமைப்படச் செய்து, அவர்களைத் தங்கள் காலிலேயே நிற்கும் சமுதாயப் பிரஜையாக மாற்றித் தருவது எளிதான விஷயமல்ல, பாராட்டப்பட வேண்டிய விஷயம்.

லட்சியத்தை வளர்ப்பதில்—மனத்தில் உருவேற்று வதில் மற்றுமோர் சூட்சுமம் இருக்கிறது. இதைச் செய்து முடிப்பேன் என்று பிடிவாதமாக உறுதி யுடன் இருப்பது ஒருமுறை.

மற்ருேர் எளிய வழி. மனத்தில் அது பற்றிய கற்பனைகளை விரிய விடுவது. முன்னதற்கு மன வைராக் கியம் தேவை. பின்னதற்குக் கற்பனை உள்ளம் தேவை. மன உறுதியைவிடக் கற்பனையைப் பயில்வது எளிது.

மனம் எதைப் படமாக—மனக்கண்ணில் காண் கிறதோ—திரும்பத் திரும்பக் காண்கிறதோ—அதை அது எளிதில் அடைகிறது.

நெப்போலியன் ஹில்லும், கிளெமெண்ட் ஸ்டோனும் ஒரு புத்தகம் எழுதி இருக்கிருர்கள். 'தோல்வியே இல்லாத—ஒரு வெற்றிக்கான வழி, (The Success system that never fails) என்பது புத்தகத் தின் தலைப்பு. அதிலே குறிப்பிடுகிருர்கள். 'எதை மனித மனம் (கற்பனையில்) உருவாக்குகிறதோ, நம்பு கிறதோ அதை அதனுல் அடைய முடியும்.'

சத்தியமான வார்த்தை என்கிருர்களே, மேற் கண்ட வாசகத்திற்குத்தான் அது மிகவும் பொருந் தும். அப்படியோர் சத்தியவாக்காய் அந்த வாக்கி யம் இருப்பதனுல் பல எழுத்தாளர்களும், அறிஞர் களும், பேராசிரியர்களும் அதை அப்படியே மேற் கோள் காட்டுகிறார்கள். (What the mind of man can conceive and believe it can achieve)

கவனத்துடன் தன் லட்சியத்தைப் பேணுபவன்—மன உறுதியுடன் அதை விடாது முயல்பவன். தன்னை அறியாமல் மேதையாகிருன்'' என்று அறிஞர் கள் கூறுகிருர்கள்.

"கனமானதோர் லட்சியத்தை—ஒரு தொழில் செய்து செல்வந்தனுகும் லட்சியத்தை தேர்ந்தெடுக்கிறீர்கள். பின் அதை மனக்கற்பனையில் விரியவிட்டு தினம் வளர்க்கிறீர்கள். பின் என்ன செய்ய வேண்டும்?

1. அன்றுட வாழ்வில் ஓர் ஒழுங்கு முறையை—மனக்கட்டுப்பாட்டை வளர்க்க வேண்டும். "இது உதவும் என் லட்சியத்திற்கு. அதற்காக அதைச் செய்வேன். மது, மாது, வீண் செலவு, ஆடம்பரம் போன்றவற்றில் என் உள்ளம் வீழ நான் இடம் கொடுக்க மாட்டேன். எனக்கு என் லட்சியம்தான் முதல்; லட்சியம்தான் முக்கியம்" என்ற மனக்கட்டுப்பாடு தேவை.

2. பாதைமேல் கண்வேண்டும் நமக்கு. திருப்பதி மலை ஏறி ஆண்டவனைத் தரிசிக்கப் போகிறீர்கள். வழியிலுள்ள மண்டபத்தில் உள்ள காபிக் கடையில் உணவளித்து உபசரிக்கிருர்கள் என்று அங்கே தங்கிவிடுவதில்லை நாம். தொழில் தொடங்குபவர்களும்சரி,வேறு லட்சியம் கொண்டவர்களும் சரி, பாதி வழியில் பலர் பாதையை மாற்றிக் கொள்ள முற்படுகிருர்கள். சிலர் தளர்ந்து போய்நம்பிக்கை இழந்துவிடுகிருர்கள். பலருக்கு அக்கரைப் பச்சையாகத் திடீரென்று தோன்றுகிறது. அவர்கள் லட்சியம் அத்தோடு போயிற்று!

லட்சியத்தை மாற்றக்கூடாது என்பதல்ல. அதை அடைந்தவுடன் மாற்றலாம். வேறு ஒரு லட்சியம் கொள்ளலாம். லட்சியத்தை அடைவதில் இடர்ப்பாடு இருக்கிறதென்ருல் நாம் அணுகு முறையை மாற்றி ஒரு புது முறையை முயல வேண்டுமே தவிர, லட்சியத்தையே மாற்றிக் கொள்ளக்கூடாது.

சினிமாப் புகழ் உச்சியில் எம்.ஜி. ஆர்., அரசியல் பிரவேசம் செய்தார். அடுத்த லட்சியத்தில் ஈடு பட்டார்.

3. ஒரு லட்சியத்தை அடைய முயலும்போது நமக்கு எது முக்கியம், எதை முதலில் செய்ய வேண்டும் என்பதில் தெளிவு வேண்டும். குதிரைக்கு முன்பாக யாரும் வண்டியை நிறுத்துவதில்லை. ஒரு காரியம் தொடங்கும் போது பல்வேறு பிரச்னைகள் தோன்றுகின்றன. தொழிலில் பொருளின் தரம் முக்கியமானது. உண்மை. ஆனல் பொருளுக்கு மக்களிடையே தேவை இல்லை என்றால்—மார்க்கெட் இல்லை என்றால்—பொருள் எத்தனை உயர்வானதாக இருந்தும் யாருக்குப் பிரயோஜனம்? அதே போல, நாட்டு நிர்வாகத்தில், கிராம மக்களது பொருளா தாரத்தை அபிவிருத்தி செய்வதா? இளைஞர்களுக்கு வேலை வாய்ப்பு அளிப்பதா? அல்லது சிலைகள் எழுப்பு வது முக்கியமா என்ற கேள்விகள் வருகின்றன. எது முக்கியம் என்பதைத் தேர்ந்தெடுத்துச் சாதிப்பதைப் பொறுத்துத்தான் சரித்திரம் அவர்களை எடைபோடு கிறது. எந்த விஷயத்திலும் 'எது முக்கியம்' என்று அணுகுங்கள்.

4. உங்கள் ஆர்வங்களை ஒரு குறிப்பிட்ட நோக் கில் செலவிடுங்கள் என்கிறார்கள் அனுபவம் பெற்றவர் கள். சிலர் சினிமா, பத்திரிகை, தொழில், அரசியல், ஆன்மிகம் என்று பலவற்றில் ஈடுபட முயல்வார்கள். நமக்கு அப்படி ஓர் ஆசை எழலாம். அப்போதெல் லாம் நம்மை நாமே 'சகலகலா வல்லவன்' என்று தட்டிக் கொடுத்து ஏமாந்து போகிறோம். நம்மிட முள்ள மனித சக்தி ஒரு குறிப்பிட்ட அளவுதான்.

அதைப் பலவற்றிற்கும் பங்கிடும் போது சக்தி சிதறிப் போய்விடுகிறது. பல்வேறு துறைக்கும் பகிர்ந்தளிக்கப் படும் சிறு சக்தியால் எதையும் சாதிக்க முடிவதில்லே. தன் சக்தியின் மீதும் திறமையின் மீதும் உள்ள அபார நம்பிக்கையால் இவர்கள் தங்களைத் தாங்களே தோற்கடித்துக் கொள்கிருர்கள்.

சினிமாக் காட்சியில் ஒரு காட்சியைக் காட்டி விட்டு, டைரக்டர் உடனே ஒரு நடிகரின் மனோபாவத் தைப் பிரதிபலிக்க அவர் முகத்தை மட்டும் திரைக் குப் பெரிதாகக் கொண்டுவருவார். அந்தச் சமயத் தில் அதை மட்டும்தான் பார்க்கிருேம். அதுதான் எல்லாம் அப்போது. அப்படி நமது மனசக்தியை ஒரு முகப்படுத்தி, நம் லட்சியத்தின்மீது ஒளி வெள்ளத் தைப் பாய்ச்ச நாம் கற்றுக் கொள்ளவேண்டும்.

5. காரியங்கள் கைகூடாமல் போவதன் காரணத்தை அலசுபவர்கள், மனிதன் பிறரைக் கண்டு பயப்படுவதுதான் தோல்விகளுக்கெல்லாம் பெருங் காரணம் என்று முத்திரையிடுகிருர்கள். பிறர் என்ன சொல்வார்களோ என்ற பயம், காரியம் செய்யாமல் மனிதனை முடக்கி விடுகிறது. ஒரு தொழில் தொடங் கும் போது, ''எல்லாவற்றையும் கிழிச்சுப்புட்டான். சொந்த பிசினஸ் செய்யப் போயிட்டான்!'' என்ருே, ''எனக்கு அப்பவே தெரியுமே, அவன் டபராதட்டு கழுவுறதிலே போய் முடிப்பான்னு'' என்ருே, ''மற்ற பேர் போல ஒரு தாலூகா ஆபீசிலே கௌரவமா வேலே பாக்கிறதை விட்டுவிட்டு 'லோ,லோ'ன்னு நாய் மாதிரி ஒரு பிழைப்பா?'' என்ருே சொல்லத்தான் சொல்வார்கள். இன்னும் அதிகமாக நம்மைப் பிறர் இழிவுபடுத்தக்கூடும்!

அப்போதெல்லாம், ''சாதிக்க முடியாதவர்கள் சாதனையாளர்களை ஒரு நாளும் மன்னிப்பதில்லை'' என்ற ஜப்பானிய ராஜதந்திரியின் வாக்கைத்தான் நினைத்துக் கொள்ள வேண்டும்!

சமீபத்தில் எனது நண்பரொருவர் அமெரிக்கா வரக் கிளம்பியபோது, படித்த அவரது உறவினர், ''அமெரிக்காவில் வேலையில்லாத் திண்டாட்டம் அதிகம். நீங்கள் போனீர்களானால் தெருக்கூட்டும் வேலைதான் கிடைக்கும்'' என்று கூறி உற்சாகப்படுத்தினாராம்! மாறாக, என் நண்பர் இங்கு வந்து எம்.பி.ஏ. பட்டமெடுத்துவிட்டு க்ம்ப்யூட்டரில் இப்போது வேலை செய்து வருகிறார்.

''அடேடே, நம்ம குப்புசாமியா? மந்திரியா?'' என்று எகத்தாளம் பேசுவோர் இருக்கத்தான் இருப்பார்கள். ஆபிரகாம் லிங்கனிலிருந்து பெட்டிக் கடை பரமசிவம் வரை, இவர்கள் விட்டு வைப்பதில்லை. ஆகவே, பிறர் அபிப்பிராயம் உங்களை ஆட்டுவிக்க விடாதீர்கள். நீங்கள் நினைவில் கொள்ளவேண்டியது. ''சாதிக்க முடியாதவர்கள் சாதிப்பவர்களை மன்னிப்பதில்லை!'' என்பதை.

6. தொழில் என்று தொடங்கியதும், லட்சியம் என்று வந்ததும், போலி கௌரவம் பார்க்காதீர்கள். வி.ஜி. பி. சகோதரர்கள் வீதிகளில் தாங்களே சென்று விடிய விடிய விளம்பர நோட்டீஸ் ஒட்டி வருவார்களாம். பணமில்லாத சமயத்தில் உங்களை உலகம் நகைத்தாலும், நீங்கள் பணக்காரர்களானதும் அதற்காகவே உங்களுக்குப் பாராட்டுப் பத்திரம் வழங்கும்; பூமாலை சூட்டிப் புகழும்.

ஹூஸ்டனில் ஆடிட்டராக வாழ்வைத் தொடங்கிய டாம் பேட்ஜோ வருமானத்திற்காக ஒரு குப்பை லாரியை நிர்வகிக்க ஆரம்பித்தார். ஆட்கள் வராத சமயத்தில் தாமே குப்பைகளை அள்ளிப் போட வேண்டி இருந்தது. விடியற் காலைவரை குப்பை லாரி வேலையும், காலை ஒன்பது மணிக்கு மேல் ஆடிட்டர் வேலையும் செய்தார் பேட்ஜோ. இரண்டாண்டுகளில் அமெரிக்க நகரங்களில் உள்ள குப்பை லாரி சொந்தக்காரர்களை எல்லாம் ஒன்று சேர்த்து ஒரு பெரிய 'கம்பெனி'யை உருவாக்கி, ஒரு பெரிய மில்லியனரானார் டாம் பேட்ஜோ.

செய்யும் தொழிலே தெய்வம். அது நாணயமான தொழிலாக இருக்கும் வரை அதைப் பற்றி நாம் அஞ்சத் தேவை இல்லை. போலி கௌரவம் பார்க்கத் தேவை இல்லை. போலி கௌரவம் பார்க்காதவர்களின் செயலுக்குள் என்ன இருக்கிறது? எதையும் யாரையும் லட்சியம் செய்யாத திட மனம் இருக்கிறது!

7. அடுத்ததாக, தொழிலில் ஒரு துடிப்புடன் ஈடுபடுங்கள். எல்லாவற்றிற்கும் மேலாக இந்தத் துடிப்பு உங்கள் வாழ்க்கையில் மேவி வர வேண்டும். சில பேரைப் பார்த்தால் 'துடிப்பான மனிதர்' என்கிறோமே, எது நம்மை அப்படிச் சொல்லச் செய்கிறது?

நீங்கள் நடிகராக விரும்புகிறீர்கள். நடிகரில் சிறந்த நடிகனாக வருவேன் என்று ஆசைப்படுங்கள். தொழிலில் தலைசிறந்த தொழிலதிபதியாவேன் என்று ஆசைப்படுங்கள். வெண்டல் ஹோம்ஸ் என்ற

அமெரிக்க நீதிபதியை ஒரு சட்ட மாணவன் கண்ட போது, ''ஐயா! நாடு பூராவும் வழக்கறிஞர்கள் இப்படி மலிந்திருக்கும்போது நான் சட்டத்துறையில் புக ஆலோசனை கூறுவீர்களா?'' என்று கேட்டதற்கு அவர் கூறினர், ''தம்பீ! மேலே இடங்கள் காலியா யிருக்கின்றன''என்று. அதாவது ''நீ ஒரு உயர்ந்தசட்ட ஆலோசகனுகும்போது உன்னைத் தேடி அழைப்பார் கள்'' என்ருர் ஹோம்ஸ்.

மற்ருேர் வழியில் பார்க்கும்போதும் சிந்தனை யைப் பெரிதாக மலர விடுவதில் ஏதும் தவறில்லை என்பது தெரிய வரும். ஜோ ஆன் சேஸ் என்ற மனேசக்தி படைத்த பிரபல பெண்மணி எழுது கிருர். ''ஆசைப்படும்போது பெரிதாக ஆசைப்படுங் கள். வீடுதான் கேட்கலாம், கார் கேட்கக்கூடாது என்று கடவுள் சொல்லவில்லை. வேலைதான் கேட்கலாம், சொந்தத் தொழில் கேட்கக்கூடாது என்று ஆண்டவன் கூறவில்லை. 'தட்டுங்கள் திறக்கப் படும்; கேளுங்கள் கொடுக்கப்படும்; தேடுங்கள் கண்டடைவீர்கள்' என்றுதான் ஆண்டவன் சொல்லி யிருக்கிருர். ஆண்டவன் வாசலிலே பஞ்சம் கிடை யாது. அப்படி இருக்கும்போது நாம் ஏன் பஞ்ச புத்தி யுடன் கடவுளை அணுகவேண்டும்?''

8. தொழில் செய்வது நமது பல்வேறு திறமை களையும் தட்டி வெளிக் கொணரும் ஒரு அரிய சோதனைக் கூடம். வாழ்க்கையின் பயன்—நமது முழுத் திறமையையும் நம் வாழ்வுக்குள் வெளிக் கொணரும் ஒரு அனுபவ நிறைவுதான். நாம் நமக்கும் பிறருக்குமாக வாழ, மற்றெல்லாத் துறை களையும்விட தொழில் துறைதான் நல்ல வாய்ப்பளிக்

கிறது. உலகில் யார் நிரந்தரமான வசதிகளுடன், செல்வாக்குடன் வாழ்கிறார்கள் என்று எண்ணிப் பாருங்கள். ஒரு அரசியல்வாதியின் காலம் மக்கள் மன அபிப்பிராயத்தை ஒட்டி ஓடுவது. அவனது உன்னதம் நிரந்தரமானதல்ல. ஒரு சினிமா நடிகை யின் புகழ் இளமையையும் மற்றும் சில திறமைகளையும் பொறுத்தது. வெற்றி கண்டுவிட்ட தொழிலதிபன் ஒரு சீரான வாழ்க்கையை வாழ்கிறான். பணத்தின் வலிமையால் வசதிகளும், செல்வாக்கும் அவனுடன் நிரந்தரமாக இருக்கின்றன.

சமூகத்திற்கு நன்மை செய்த தொழில் அதிபர் களை எண்ணிப் பாருங்கள்! மோட்டார் காரை எல்லோருடைய வருவாய்க்குள்ளும் கொண்டுவந்த ஹென்றி போர்டின் தொழிலால் அமெரிக்க சமுதாயமே மாறியது. மின்சாரத் தொழிலை தாமஸ் ஆல்வா எடிசன் மின்விளக்கின் மூலம் எல்லோருக்கு மாகக் கொண்டு வந்தார். கிரகாம் பெல், டெலிபோனை எல்லோருக்குமாகக் கொண்டு வந்தார். பயன் கண்டார். ஐ.பி.எம். என்ற அமெரிக்க நிறுவனம் கம்ப்யூட்டரை இன்று எல்லோருக்குமாகக் கொண்டு வந்து, எல்லோருடைய வாழ்வையும் தொடுகிறது. உலகில், தொழிலதிபர்களால் எவ்வளவு நன்மை என்று எண்ணிப் பாருங்கள்.

தெரு மூலையில் இருக்கும் சிறு தொழிலான தேநீர் விடுதி, நம் எல்லோருக்கும் பயன்படவில்லையா? அது கூட நம் வயிற்றுக்கு நிறைவையும் மனத்திற்கு மகிழ்ச்சியையும் வழங்கும் ஒரு சிறு தொழிலாகத் தான் இயங்குகிறது.

நமது ஊரில் தொழில் செய்பவர்களை, 'திருடன், பொய்யன், ஏமாற்றுக்காரன்' என்றெல்லாம் சொல்லிப் பிதற்றுபவர்களைக் காண்கிறோம். தொழில் செய்பவர்களிடையே சில ஏமாற்றுக்காரர்கள் இருக்கக்கூடும். எல்லாத் தொழிலிலும் இது இருக்கக்கூடிய மனித இயல்புதான். அதற்காகத் தொழில்துறை ஏமாற்றுப் பிரதேசமல்ல.

இன்று ஒரு ஸ்பிக் நிறுவனத்தினால் எத்தனை ஆயிரம் பேருக்கு வேலை என்பதை எண்ணிப் பாருங்கள். இன்று அது உற்பத்தி செய்யும் ரசாயன உரங்களினால் நாட்டில் எத்தனை மூட்டை மகசூல் அதிகம் என்று எண்ணிப் பாருங்கள்.

'முடியும், முயல்வோம்' என்ற மன அங்கீகாரத்தைப் பெற்றவுடன் நமது லட்சியம் சாதாரண மனிதர்களைக்கூடத் தன்னுடைய அசாதாரண சக்தியால் உயர்ந்த மனிதர்களாக்கிவிடுகிறது, வலிமை பெற்றவர்களாக்கிவிடுகிறது.

வறுமையைப் போல் இழிவில்லை. வறுமையைப் போல் மற்றோர் கொடுமையில்லை. இன்று நாட்டுக்குத் தேவைப்படுவது பொருள் வளம்தான். தனி மனிதத் திறமைகள் வெளிவரட்டும். சுபிட்சம் நிறைந்த சமுதாயத்தை உருவாக்குவோம்.

# 19

# தத்துவங்கள் வாழ்க்கைக்கு வழிகாட்டுகின்றன

உங்கள் ஆசை எதுவாக வேண்டுமானாலும் இருக்கலாம். இளங்கோவடிகள் போல துறவு பூண்டு இலக்கியம் படைக்க விரும்புவது உங்களது லட்சிய தாகமாக இருக்கலாம். பெரும் தொழிலை நிறுவிப் பலருக்கு வேலை வாய்ப்பளித்து, மக்களுக்குப் பயன்படும் ஒரு பொருளை உற்பத்தி செய்து செல்வந்தனாக வேண்டும் என்பது உங்கள் குறிக்கோளாக இருக்கலாம்.

எண்ணம், ஆசை, குறிக்கோள், லட்சியம் என்று தமிழில் பல வார்த்தைகள் இருக்கின்றன. ஒவ்வொன்றும் உங்கள் மனத்தில் எத்தகையதோர் பொருளைத் தருகிறது, எத்தகைய கற்பனையைத் தோற்றுவிக்கிறது, எத்தகைய உணர்வை—ஈடுபாட்டை—உங்களிடம் உண்டுபண்ணுகிறது என்று எண்ணிப் பாருங்கள். அதில் எது அதிக அழுத்தம் வாய்ந்ததாக இருக்கிறதோ அதை உபயோகியுங்கள்.

நமது தீவிரமான ஆசை—ஒருமுகப்பட்ட ஆசை—நமது மனத்தில் லட்சியப் பொறியாய் விழுகிறது. பின் லட்சியம் கனன்று கொண்டிருக்கிறது. லட்சி

யத்தை அடையும்வரை அந்தத் தீ நம் மனத்தில் சுடர்விட்டு எரிந்து கொண்டிருக்கிறது. இந்த ஆசை-நமது ஆழ்ந்த ஆசை; நமது ஜீவ தாகம்; இது நமது ஆத்மாவுடன் ஒன்றி இருப்பது.

இது சதா நம்மை விரட்டிக் கொண்டிருக்கிறது; முடுக்கிக் கொண்டிருக்கிறது. ''காரியம் செய், செய்!'' என்று தூண்டிக் கொண்டிருக்கிறது.

''இந்த விதமான லட்சிய தாகங்கள் எப்படிக் கிளம்புகின்றன?'' என்று வியக்கிறார் தத்துவஞானி ஜேம்ஸ் ஆலன். மேலும் ஒரு படி சென்று, ''இவை எங்கிருந்து வருகின்றன?'' என்று கேட்கிறார் அவர்.

உடற் பசிகளுக்குப் பின் தத்துவம் வாழ்க்கைக்கு மிக முக்கியம். தத்துவங்கள் வாழ்க்கைக்கு ஒரு தெளிவையும் பாதையையும் காட்டுகின்றன. அதன் மூலம் நாம் முன்னேறுகிறோம்; ஒரு நிறைவு பெறுகிறோம். அதன் மூலம்தான் வாழ்க்கை அர்த்தமுள்ளதாகிறது.

தத்துவ நோக்கில் இதைச் சற்று அணுகுவோம். வாழ்வின் லட்சியங்கள் எங்கிருந்து புறப்படுகின்றன? ஜீவன்-தன் வாழ்வில் இனிமை காணத் துடிக்கிறது; அந்த இனிமையைப் பிறர் வாழ்வில் ஊட்டப்-பகிர்ந்து கொள்ளத் துடிக்கிறது; உலகிற்குப் பயன்படத் துடிக்கிறது. இதுதான் ஜீவனின் அடிப்படைத் துடிப்பு. இது நம் எல்லோரிடம் இருக்கிறது. இவ்வுலகில் காணும் கல்லும் மண்ணும் புல்லும் ஜீவராசிகளும், இப்பிரபஞ்சத்தில் நாம் காணும் நட்சத்திரங்களும் ஒன்றை ஒன்று சார்ந்து இயங்குகின்றன. ஒன்றை ஒன்று தழுவி இயங்குகின்றன. அதே துடிப்பால்தான் இயங்குகின்றன. ஒவ்வொன்றிற்கும் ஒரு வாழ்க்கைத்

தர்மம் இருக்கிறது. அந்தத் வாழ்க்கைத் தர்மத்தை நிறைவேற்றத்தான் நாம் பிறப்பெடுக்கிறோம். பிரபஞ்சத்தில் நம் வேலையை-நம் தொண்டை-நம் வாழ்க்கைத் தர்மத்தை நிறைவேற்றும் போதுதான் இப்பிரபஞ்சம் சரியான கதியில் இணைந்து இயங்குகிறது. அப்போதுதான் இப்பிரபஞ்சத்தில் நமக்கிடப் பட்டிருக்கும் நம் பங்கை நாம் செய்கிறோம்.

ஜேம்ஸ் ஆலன் கூறுகிறார், ''நம் வாழ்வை, மறைந்து கிடக்கும் ஓர் நியாயம் ஓட்டிச் செல்கிறது'' என்று. ஒரு 'தர்மம்' ஒரு 'நியாயம்' நம் வாழ்வின் அடித்தளமாக இயங்கிக் கொண்டிருக்கிறது. இதை ஒரு சிலரே புரிந்து கொள்கின்றனர். வெகு சிலரே அதை உணர்ந்து செயல்பட்டு, தங்கள் வாழ்க்கை தர்மத்தினால் தாங்களும், சூழ்ந்திருக்கும் உலகமும் பயன் பெறச் செய்கிறார்கள்.

''நம் வாழ்வை, மறைந்து கிடக்கும் ஓர் நியாயம் ஓட்டிச் செல்கிறது...'' என்ற வாக்கியத்தைக் கொஞ்சம் அவகாசம் எடுத்துக் கொண்டு சிந்தித்துப் பாருங்கள். உங்கள் கண்முன் உங்கள் திறமை வெளி வரும். நமக்கும் நாட்டுக்கும் பயன்படும் துறைகள் தென்படும் நம் வாழ்வை நடத்திச் செல்லும் ஓர் அடிப்படை நோக்கம் புலப்படும்.

''எது உங்கள் வாழ்க்கையை ஆட்டுவிக்கிறது?'' ஏதோ ஒரு தர்மம். ஏதோ ஒரு நியாயம். எதற்காகவோ நீங்கள் தேவைப்படுகிறீர்கள். எந்தப் பணியோ உங்களால் செய்யப்படுவதற்காகக் காத்திருக்கிறது.

அதை காந்தி புரிந்து கொண்டார். அன்னை தெரசா புரிந்து கொண்டார், தம் வாழ்க்கைப்

பயனை ஆண்ட்ரூ கார்னகியும், ஹென்றி போர்டும், டாட்டாவும், பிர்லாவும் புரிந்து கொண்டிருக்கிறார்கள். அதனால்தான் அவர்கள் திறமை பிரகாசித்தது. இன்றும் பிரகாசிக்கிறது. புனிதம் நிறைந்த அன்னை தெரசாவையும், ஆண்ட்ரூ கார்னகியையும் டாட்டாவையும் ஒப்பிடுகிறோமே என்று நினைக்காதீர்கள். புனிதத்திற்காக இங்கு ஒப்பிடப்படவில்லை. அவரவர்கள் கொண்ட வாழ்க்கைத் தர்மத்தினால் நாடும் மக்களும் எவ்வளவு பயன் பெற்றார்கள் என்பதை விளக்கவே குறிப்பிடுகிறேன்.

நம் ஆசைகள் எப்படி சாதனை ஆகின்றன? ஒரு லட்சியத்தைப் பற்றி—தொழிலைப் பற்றி—எண்ணுகிறீர்கள். நாளை ஒரு தொழில் தொடங்கினால் எவ்வளவு பெரிய தொழிற்சாலையாக இயங்கும், எத்தனை பொருட்கள் உற்பத்தியாகும், எத்தனை வசதியுடனும் செல்வாக்குடனும் வாழலாம் என்ற கற்பனை எழுகிறதே தவிர எண்ணத்தின் விளைவாக, அந்தக் கற்பனை வலிமை மிகுந்தது. ''நம் லட்சியம் நம் வாழ்வை மாற்றிவிடும்'' என்பதை உணரும்போது, அதை நாம் நம் மனக்கண்ணில் காணும்போது நாம் உற்சாகம் கொள்கிறோம்; உணர்வு பெறுகிறோம்; அந்த லட்சிய ஆசை நம்மை வாட்டுகிறது, காரியம் செய்யத் தூண்டுகிறது.

நம் லட்சியம் எங்கே கொண்டுபோய் விடும் என்று எண்ணும்போது, நம் மனத்தில் லட்சியத்தின் விளைவுகளைக் காண்கிறோம். இந்த லட்சிய விளைவுகள் தான் நம்மைச் சதா உந்தித் தள்ளுகின்றன— (Motivation) என்று மனோதத்துவ நிபுணர்கள் கூறுகிறார்கள்.

தொழில் செய்து செல்வந்தனாக விரும்பும் நண்பர்களே, உங்கள் ஆசை லட்சியத்தை மலர விடுங்கள். லட்சியத்தின் இனிய விளைவுகளை ரசியுங்கள். லட்சியத்தில் உங்களுக்கு ஏற்படும் புதிய ஈடுபாட்டைக் கண்டு நீங்களே மலைத்துப் போவீர்கள்.

குழந்தை நன்கு படித்து நல்ல மதிப்பெண்கள் பெற்று வரும்போது மகிழ்வுடன் பாராட்டுகிறோம். அந்த மகிழ்வும் பாராட்டும் குழந்தையைச் சதா உந்திக் கொண்டிருக்கின்றன, மேலும் நன்கு படிக்க.

"நான் உனக்காக வாழ்கிறேன்!" என்று கூறும் காதலன் ஓர் அரவணைப்பை, ஒரு பாதுகாப்பை, ஒரு தியாக உணர்வைத் தோற்றுவிக்கிறான். காதல்—இதயக் கலப்பில்—திருமணத்தில் முடிகிறது. இந்தப் பெண்ணை அல்லது ஆணைத் திருமணம் செய்துகொள்ள வேண்டும்'என்ற ஆர்வம் பெற்றோர்களைத் துறக்கவும், ஊர் ஏச்சுக்களை ஏற்கவும், தியாகம் செய்யவும், கஷ்டங்களைச் சமாளிக்கவும் காதலர்களைத் தூண்டுகிறது.

லட்சியத்தின் விளைவு நம் மனத்தில் ஏற்படுத்தும் கற்பனைகள் நம்மை எதையும் செய்யத் தூண்டுகிறது; எதையும் சமாளிக்கும் தைரியத்தை அளிக்கிறது. லட்சியங்களை, நீங்கள் காதலனாக அணுகினாலும் சரி, போர்வீரனாக அணுகினாலும் சரி, நீங்கள் அடைந்தே தீருவீர்கள்.

# 20

## கற்பனை செய்யுங்கள்

லட்சியம் இருக்கிறதே அது நம் கனவு. அதை முதலில் மனத்தில்தான் பார்க்கிறோம். அது நம் கையில் தொட்டுத் தடவிப் பார்த்து உணரக்கூடிய நிலையில்—பொருள் வடிவத்தில் இன்று இல்லாமலிருக்கலாம். ஆனாலும் நம் மனத்தில்—நாம் செல்வந்தனாகும் நிலையை, அதன் முழு விவரங்களுடன் நம் கற்பனையில் காண முடியும்.

ரோஜாப் பூவைப்பற்றி எண்ணுகிறீர்கள். அதை மனத் திரையில் கொண்டு வருகிறீர்கள். ரோஜா இதழின் சிவந்த நிறம், அதிலே இருக்கும் மெருகு, அதில் ஒட்டிக் கொண்டிருக்கும் நீர்த் திவலை—எல்லாம் ஏதோ நேரே பார்ப்பது போன்று தெரிகின்றன. சட்டென்று ரோஜாவின் மணத்தை நுகர்கிறீர்கள். ரோஜாவை மனத் திரையில் கண்டாலும் ஏதோ நிஜம்போல் உணர்கிறீர்கள். அந்த உணர்வை நீங்கள் கொண்ட லட்சியத்தில் காணவேண்டும். லட்சியத்தை உணர்ச்சி பூர்வமாக்க வேண்டும்.

உங்கள் மனம் தொழிற்சாலை ஏற்படுத்தச் சரியான இடம்தான். மனத்தில், இடம் பரந்து கிடக்

கிறது. ஊருக்கு வெளியில் பல ஏக்கர் நிலப்பரப்பில் தொழிற்சாலையை மனத்தில் கட்டுங்கள். அங்கே தொழிலாளர்களை உலவ விடுங்கள். பொருட்களை லாரிகளிலும் ரயிலிலும் கப்பலிலும் விமானத்திலும் ஏற்றுமதி செய்யுங்கள்.

இடையிலே ஒரு கற்பனை ஓடுகிறது. "சேரன் மாதேவி என்ற ஒரு சின்ன கிராமத்தில் பிறந்து இன்று சென்னையில் ஒரு பிரபல புள்ளியாய், பிரபலஸ்தர் களுடன் சரிசமமாய் கை குலுக்கும் பெரிய மனிதனாய் எப்படி உயர்ந்து விட்டேன்''' என்ற பெருமை இழை யோடுகிறது.

விடாதீர்கள் கற்பனையை.

கற்பனையால் மன நம்பிக்கையை வளர்ப்பது எளிது. மன நம்பிக்கைதான் சாதனையின் முதல் வித்து. ஆகவே, கற்பனை செய்யுங்கள்; தினம் கற்பனை செய்யுங்கள்!

கற்பனை செய்யும்போது என்னுகிறது?

கற்பனை இயல்பிலேயே மகத்தான சக்திகொண்ட தாய் இருக்கவேண்டும். இது நம் கண்ணுக்குப் புலனு காத, அணுத்துகள்கள் நாம் போட்டுக் கொடுத்த வரைகோட்டுப் படத்தில் கொஞ்சம் கொஞ்சமாய்ச் சேர்கிறது, மஸ்லின் துணியை ஒன்றன் மேல் ஒன்ருக அடுக்கிக் கொண்டே போவது போல. நாளாக ஆக இந்தக் கற்பனைப் பொருள் வடிவம் வலுப் பெறுகிறது.

கற்பனை வலிமை பெறப் பெற, நம் மனத்தில் அசாத்திய நம்பிக்கை உண்டாகிறது. பின் அந்த நம்பிக்கை நம்மைச் செயலாக்கத் தூண்டுகிறது. அத்துடன் நிற்பதில்லை.

இந்தக் கற்பனையிலிருந்து ஒரு சக்தி எழுகிறது. அந்த சக்தி, புறச் சூழ்நிலையில் நீங்கள் எதை விரும்பினீர்களோ அதை உருவாக்க முற்படுகிறது. பிறர் மனங்களில் நம் கற்பனை படிகிறது. மனிதர்களும் சடப் பொருட்களும் இயற்கையும் உங்கள் லட்சியத்திற்காக அதனதன் இடத்தில் அமர்ந்து உதவுகின்றன இப்போது.

கற்பனை செய்யும்போது, சாத்தியமே அல்லாத விஷயங்களில் உங்கள் சக்தியை ஈடுபடுத்தாதீர்கள்; எட்டக்கூடிய விஷயம்-ஆனால், நம் கைப்பிடிக்குச் சற்றுத் தொலைவில் உள்ள விஷயமாக எடுத்துக் கொள்ளுங்கள். காரியங்கள் கைவசப்பட, கைவசப் பட உங்களுக்கு உங்கள் மீதே நம்பிக்கை ஏற்படும்.

மனத்தில் தொழிற்சாலை நிறுவுங்கள் என்று கூறினேன். 'வெற்றிக்கான வழி; எந்நாளும் தோற்காத முறை' (Success system that never fails) என்ற தலைப்பில் நெப்போலியன் ஹில்லும், கிளெமெண்ட் ஸ்டோன் என்னும் அமெரிக்க 'மில்லியன'ரும் சேர்ந்து ஒரு புத்தகம் எழுதியிருக்கிறார்கள். அதிலே கூறுகிறார்கள்; "எதை மனித மனம் உருவாக்குகிறதோ, எதை மனித மனம் நம்புகிறதோ அதை அதனால் அடைய முடியும்."

இந்தப் பொன்மொழியைப் பல நூலாசிரியர்கள் எடுத்து மேற்கோள் காட்டி எழுதுகிறார்கள். இதை நம்புங்கள், இதை மனப்பாடம் செய்து உங்களுடையதாக ஆக்கிக்கொள்ளுங்கள். உங்கள் லட்சியத்தை அடையும் முயற்சியில் இதை உபயோகியுங்கள்.

லட்சியம் எப்போது வலிமை பெறுகிறது? நம் லட்சியத்திற்கு ஒரு நோக்கம்-காரணம்-இருக்கும்

போது, அத்துடன் வலிமை ஒரு துடிப்பைப் பெற வேண்டும். கல்லில் வலிமை இருக்கிறது. ஆனால், அது எறியப்படும் போதுதான் துடிப்பைப் பெறுகிறது; வேகத்தைப் பெறுகிறது. வலிமை துடிப்புடன் சேரும் போதுதான் மாங்காய் விழுகிறது.

லட்சியம் ஓர் அடிப்படை நோக்கத்துடன் இணையும் போதுதான் வலிமையையும் துடிப்பையும் பெறுகிறது என்கிறார் ஜேம்ஸ் ஆலன்.

லெனினுக்கு ஒரு நோக்கம் இருந்தது. கார்ல் மார்க்ஸ் சொன்ன சமதர்ம சித்தாந்தத்தை நடைமுறையில் செயல்படுத்தி எல்லோருக்கும் வாழ்வு கொடுக்க வேண்டுமென்ற உயர் நோக்கம்.

ஆபிரகாம் லிங்கனுக்கு ஒரு நோக்கம் இருந்தது. இன வேறுமை—நிற வேற்றுமையைக் காட்டி மக்களை அடிமையாக்கக்கூடாது. மனிதர்கள் அனைவரும் சமம். அவர்கள் யாராயினும் சம உரிமைகளையும் சம அந்தஸ்தையும் பெறவேண்டுமென்று.

காந்திக்கும் பாரதிக்கும் ஒரு நோக்கம் இருந்தது. அந்த நோக்கத்தில் இருக்கும் அடிப்படை நியாயம், லட்சியத்திற்கு வலிவு தருகிறது.

வாழ்வில் நோக்கம் இல்லாவிட்டால் என்ன ஆகும்? மனத்திற்குச் சரியான நல்ல தீனி போடாத போது அங்கே கவலை, பயம், நொந்துகொள்ளும் மனப்பான்மை, குற்ற உணர்வு, பொறாமை, கோபம், காமம் போன்ற இயல்புக்கு ஒவ்வாத பல காளான்கள் முளைக்க இடம் கொடுக்கிறோம். இவை எல்லாம் வாழ்வில் நல்ல நோக்கத்தை ஏற்படுத்தாததன் விளைவு என்கிறார் ஜேம்ஸ் ஆலன். அவர் மேலும் ஒரு

படி சென்று, ''இவை எல்லாம் நீங்களே திட்டமிட்டுச் செய்த பாவங்களுக்குச் சமமாகும்'' என்கிறுர்.

இவ்வுலகம் ஒரு சக்தியால் இயங்கி வருகிறது. ''பரிணும வளர்ச்சியை நோக்கியே இப்பிரபஞ்சம் இயங்குகிறது'' என்று தத்துவஞானிகள் கூறுகிறுர்கள். அந்தப் பிரபஞ்ச கதியுடன் நாம் ஒத்துப்போகும் காரியங்களேச் செய்யவேண்டும்.

நாம் நமக்காகவும், நம் சமூகத்திற்காகவும் வாழும் போதுதான் அது நேர்கிறது.

நமக்காகவும் பிறருக்காகவும் நாம் செல்வந் தனுவது என்ற நோக்கம், எந்த யோக மார்க்கத் திற்கும் குறைந்ததல்ல. ஏனெனில், இந்த மனித உயிர் இந்தச் சட உலகில்—பொருள் உலகில்—பிறந்திருக் கிறது. ஆகவே, அந்தப் பொருளே உபயோகித்து, அம்முயற்சியில் நம்மிடமிருக்கும் திறமைகளே எல்லாம் வெளிக்கொணர்ந்து நிறைவு காண முயலவேண்டும்.

இவ்வுலகில் நாம் உண்ணும் அரிசி ஒரு பொருள்; உப்பு ஒரு பொருள்; உடுத்த வேண்டிய துணி ஒரு பொருள். மேலே இருக்கவேண்டிய கூரை ஒரு பொருள்.

மனிதனுடைய அடிப்படைத்தேவையைப் பூர்த்தி செய்ய, இவை அனேத்தையும் இணேக்கும் பொருட் செல்வம் தேவை. அதற்குப் பிறகுதான் நாம் வாழ்வின் உயர் லட்சியங்களேப் பற்றிச் சிந்திக்கவும், அதற்காக வாழவும் முடியும்.

# 21

# பயன் தரும் பாதையில் செல்ல வேண்டும்

அவர், ஹார்வர்டு பல்கலைக் கழகத்தில் மனோதத்துவப் பேராசிரியராக இருந்தார். இந்தியாவின் ஞான மார்க்கமும் யோக மார்க்கமும் அவரை ஈர்த்தன. இமயமலைச் சாரலுக்கு வந்தார். அங்கே சில யோகிகளிடம் யோக மார்க்கமும் பயின்றார். பாபா ராமதாஸ் என்ற புதுப்பெயரை மேற்கொண்டார். இன்று நியுமெக்ஸிகோவின் பரந்த நிலப்பரப்பில் ஓர் ஆசிரமம் அமைத்திருக்கிறார். ஜாஸ் இசையில் தன்னை மறந்து அபின், கஞ்சா போன்றவற்றை உபயோகித்து 'திரில்' காண முயலும் இளைஞர் கூட்டத்திற்காக ஒரு புத்தகம் எழுதியிருக்கிறார் அவர். புத்தகமா அது? இல்லை. அவருடைய எண்ணத் தொகுப்பு. தொகுப்பாகக்கூட இல்லை. விடுபட்ட எண்ணங்கள் எங்கோ சென்று நம் மூல சிந்தனையைத் தொடுகின்றன. நம்மை விழிக்க வைக்கின்றன. அவர் எழுதி இருக்கும் புத்தகத்தின் தலைப்பு, 'இங்கிருங்கள் இக்கணம்' (Be here now)

இது என்ன தலைப்பு, இதற்கும் தொழிலுக்கும் என்ன சம்பந்தம் என்று யோசிக்கிறீர்களா?

கற்பனை செய்வதைப் பற்றி நிறையப் படித்த வுடன் கற்பனை உலகிலேயே இருந்து விடுவீர்களோ என்ற சந்தேகம். சினிமாவை ஒரு போதையாய் உபயோகிக்கும் ஓர் இனம், நிகழ்கால வாழ்விலிருந்து தப்பிக்க சினிமாவை ஒரு சாதனமாக உபயோகிக் கிறதோ என்ற ஒரு சந்தேகம். வாழ்க்கைப் பிரச்னை களைச் சமாளிக்க முடியாத - சமாளிக்க முடியும் என்ற நம்பிக்கை இழந்த - தமிழ்ச் சமுதாயம் சினிமா போதையில் தன்னை மறக்கிறதோ என்ற சந்தேகம்.

இளமை, கவர்ச்சி, காதலுணர்வு, காம முனைப்பு என்று பத்திரிகைகளும் சினிமாவும் சேர்ந்து வாரி வழங்கும்போது, பலர் அதிலேயே மூழ்கி வாழ்வைக் கழித்து விடலாமே என்று தீர்மானித்து நிஜ உலகிற்கு வர மறுக்கும் நிலை நாட்டில் உருவாகிவிட்டதோ என்ற சந்தேகம்.

நிஜ வாழ்வில் காண முடியாததைக் கற்பனையில் கண்டு, ரசித்து வாழ்ந்து முடித்துவிடும் வடிகாலாகக் கற்பனையை நீங்கள் உபயோகித்தால் வெகு விரைவில் ஓர் ஆண்மையற்ற மனிதனாக நீங்கள் ஆகிவிடுவீர்கள் ஒரு செயலற்ற நபுஞ்சக சமுதாயம் உருவாகும்.

இளைஞர்களும் தமிழ்ச் சமுதாயமும் எது பயன் தரும் கற்பனை, எது உதவாக்கரை கற்பனை என்று பகுத்தறிய வேண்டும். பயன்தரும் பாதையில் செல்ல வேண்டும்.

தியானம் செய்ய முனைந்தால் மனம் பல வழி களில் ஓடும் என்பதை எண்ணித்தான், 'இங்கிருங்கள் இக்கணம்' என்று நாம் செய்யும் காரியத்தில் அந்தக் கணத்தை முழு மனத்தோடு ஈடுபடுத்தும் முறையைக் கூறுகிறார் பாபா ராமதாஸ். எந்தக் காரியம் செய்

கிறேமோ அந்தக் காரியம் பற்றிய உணர்வு இருக்க வேண்டும் என்கிறார்கள் மனோதத்துவ நிபுணர்கள்.

கற்பனை எதிர்காலத்தைப் பற்றியது. நாம் வாழ்வதோ இக்கணம், இங்கே. இரண்டையும் இணைக்க ஒரு பாலம் கட்ட நாம் கற்றுக் கொள்ள வேண்டும். அப்போதுதான் ‘இங்கிருந்து அங்கு’ போக முடியும். இருப்பதிலிருந்து இல்லாத ஓர் உலகிற்குப் போக, திட்டம், செயல், மன உறுதி தேவை.

ஒரு அறிஞர் கூறினார், “தம்பீ! நீ வானத்தில் மாளிகை கட்டு. நான் ஆட்சேபிக்கவில்லை. ஆனால், தரையில் அஸ்திவாரம் போடு என்றுதான் கூறு கிறேன்” என்று. அதை நாம் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும்.

இந்தியாவிலிருக்கும் ஓர் இளைஞனுக்கு அமெரிக் காவோ அர்ஜெண்டினாவோ அவன் அறியாத ஊர். அங்கே போய்ப் படிக்க வேண்டும்; பணக்காரனாக வேண்டும் என்று ஆசைப்படுகிறான். அது லட்சியம். இன்று கற்பனையிலிருப்பது. அதற்கு அவன் என்ன செய்கிறான்?

என்னென்ன செய்தால் அங்கே போகலாம் என்று செய்ய வேண்டிய காரியங்கள் பற்றி ஒரு பட்டியல் தயாரிக்கிறான். திட்டம். பின் ‘பாஸ்போர்ட்’, ‘விசா’. அங்கு கல்லூரியில் சேர அனுமதி, அங்கு தங்குவதற் கான பணம், துணிமணி, போக விமான டிக்கெட் என்று எல்லாவற்றையும் செய்கிறான்: செயல். விசா கொடுப்பவர் மறுக்கலாம். ஒன்பது கல்லூரிகளில் ‘அட்மிஷன் இல்லை’ என்று தகவல் வரலாம். ஆனால், அவன் சளைப்பதில்லை. மனமுடைவதில்லை. மன உறுதி யுடன் தொடர்ந்து செயல்படுகிறான்: மன உறுதி. கற்பனையில் தோன்றிய ஆசையை அடையத் திட்டம்,

செயல், மன உறுதி என்ற பல கருவிகளைக் கொண்டு அவன் பாடுபடுகிறுன்.

ஒரு லட்சியம் பூர்த்தியடைந்தவுடன் நமக்கு அதனருகில் உள்ள மற்ற காரியங்கள்-செய்யக்கூடிய சாதனைகள் புலப்படும். பாதையில் போகப் போக, பல விஷயங்கள் நமக்கு உதவும். நமது லட்சியங்கள் மாறுபடும்; விரிவடையும். இது இயல்பான பரிணும வளர்ச்சி.

''அட்லாண்டிக் சமுத்திரத்தைப் பார்த்துக் கொண்டிருப்பேன். அதிலிருந்து தொடரும் எண்ணங்கள் அட்லாண்டிக் சமுத்திரத்தினடியில் மின்சாரக் கம்பிகள் போட்டு நாடுகளை இணைப்பதில் போய் முடியும்'' என்பார் எடிசன்.

கவனியுங்கள். மின்சார விளக்கைக் கண்டுபிடித்த எடிசனின் மனம் எதைப் பார்த்தாலும் மின்சார சம்பந்தமாகவே எடை போடுவதை--பயன்படுத்த முடியுமா என்று எண்ணுவதைக் கவனியுங்கள். பார்க்கும் ஒவ்வொன்றையும் கேட்கும் அனைத்தையும் நம் தொழில் சம்பந்தமாகப் பரிசீலித்துக் கொண்டே இருக்கிறது நமது ஆழ்மனம். ஏதாவது ஒன்றில்—சரியான விஷயத்தில் சரியான பிடிப்பை ஏற்படுத்திக் கொண்டு சரியான மீனைப் பிடிக்கிறது, நமது மனத் தூண்டில். 'கொக்கொக்க கூம்பும் பருவத்து...' என்று சொன்னுரே திருவள்ளுவர், அது போல் நம் மனம் காத்திருக்கிறது.

கற்பனையைப் பரவ விடும்போது, அங்கே நமக்குப் பிடிக்காத விஷயங்கள் எல்லாம் வருகின்றனவே, வந்து அச்சுறுத்துகின்றனவே என்று நீங்கள் கேட்கக் கூடும்.

மனம் பல சிந்தனைகளில் தாவுகிறது. நமது முன் அனுபவங்களைச் சட்டென்று கொண்டு வருகிறது; நமது பழைய, தொடர்ந்த தோல்விகளை நம் கண்முன் வரிசைப்படுத்தி, ''இதுதான் உன் விதி'' என்று நம்மையே சந்தேகிக்கச் செய்கிறது.

அப்போது நாம் என்ன செய்யலாம்?

ஹூஸ்டன் மாநகரத்து மில்லியனர் டாம் பேட்ஜோ கூறுவதைக் கேளுங்கள். ''கடல் பக்கம் போவேன். கண்ணுக்கெட்டிய தூரம் வரை புரளும் அலைகளை-ஆர்ப்பரிக்கும் அலைகளைக் காண்பேன். ஒரு கணம்தான் இந்த அலைகள் கண்ணில் தென்படும். சில கணத்தில் அலைகள் மறைந்து போகும். எனது திட்டங்கள், ஆசைகள், எனது எதிர்காலம் கற்பனையாக அங்கே விரியும். பயமூட்டும்—அபாயத்தைக் காட்டி அதைரியமூட்டும் கற்பனைகளும் என் மனத்தில் ஊடுருவும். அப்போதெல்லாம் 'அதற்கெல்லாம் இது தருணமல்ல. அதைப் பற்றி பிறகு கவனிப்பேன்' என்று அந்தக் கற்பனைகளை ஒத்திப் போடுவேன். அச்சுறுத்தும் நபர்களோ சஞ்சலமூட்டும் சம்பவங்களோ தோன்றுமானால் 'உங்களுடன் பின்னால் பேசிக் கொள்கிறேன்' என்று எனக்கு நானே பேசிக் கொள்வேன்.''

அப்படித்தான் நாம் நம் கற்பனைகளையும் அடக்கி ஆள வேண்டும். நினைவில் கொள்ளுங்கள். கற்பனை நாம் பெற்றிருக்கும்—நம்மிடமிருக்கும்—மகத்தான ஆக்க சக்தி. அந்த ஆக்க சக்தியைப் பயன்தரும் விஷயங்களில்—நம் லட்சியங்களை நோக்கி—ஒரு கட்டுப்பாடுடன் செலுத்தும்போது, கடிவாளமிட்ட குதிரை ராஜபாட்டையில் அரண்மனையை நோக்கிச் செல்வதைப் போல நடக்கிறது.

# 22

# வெற்றி பெறச் சந்தர்ப்பங்களை உருவாக்கிக் கொள்க!

நம் எதிர்காலத்தைப் பற்றி நாம் கனவு காணும் போது பல கற்பனைகள் நம் மனத்தில் ஓடுகின்றன. ஆனால், அதில் ஒரு கற்பனை-ஒரு எண்ணம்—நம்மை உந்துகிறது; நம் உடலைச் சிலிர்க்க வைக்கிறது; நம் நரம்புகளைப் புடைக்க வைக்கிறது; நம் ரத்த ஓட்டத்தை அதிகப்படுத்துகிறது.

''கனவுகளை மனிதர்கள் தேர்ந்தெடுப்பதில்லை. மனிதர்களைக் கனவுகள் தேர்ந்தெடுக்கின்றன'' என்று கூறுகிறார்கள் அறிஞர்கள்.

ஏன் இப்படிச் சொல்கிறார்கள்?

மனித உடலிலுள்ள நாம் சிறியவர்கள்தான். ஆனால், நாம் கொண்ட லட்சியத்தால் உயர்கிறோம்; பெரிய மனிதனாகிறோம்; செல்வந்தனாகிறோம்; தலைவனாகிறோம். சாதாரண மனிதனை உயர்ந்த மனிதனாக ஆக்குவது அவனது லட்சியக்கனவுதான். இதை வற்புறுத்தத்தான் அறிஞர்கள் கூறுகிறார்கள், ''மனிதனைக் கனவு தேர்ந்தெடுக்கிறது'' என்று. நாம்

ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டிய அற்புதமான வாசகம் இது.

பேராசிரியர் கல்கி தியாக பூமி, கள்வனின் காதலி என்று கதைகள் எழுதிக் கொண்டிருந்தபோது ராஜராஜன், ராஜேந்திரன், நரசிம்மவர்ம பல்லவன் என்று சரித்திரக் கதாநாயகர்கள் அவரை அணுகினுர்கள். மகோன்னத சரித்திர நாவல்கள் பிறந்தன. தமிழ்க் கப்பலை வங்கக் கடல் மீது ஓட்டும் கனவு வ.உ.சிதம்பரத்தைத் தேர்ந்தெடுத்தது.

ஈழ விடுதலை என்ற கனவு ஒரு தங்கதுரையை, ஜெகனை, குட்டிமணியைத் தேர்ந்தெடுத்தது.

இவ்வுலகில் எல்லா மக்களும்தான் இருக்கிறுர்கள். ஆனுல், ஓரிருவர் மட்டும்தான் உற்சாகத்தினுல், ஈடுபாட்டினுல், கனவினுல் தொடப்படுகிறுர்கள்.

எந்தக் கனவு உங்கள் உள்ளத்தில் தட்டுப்படுகிறது, நெருடுகிறது, குடிகொண்டிருக்கிறது என்பதை நினைத்துப்பாருங்கள். 'அறிவுதான் வலிமை சேர்க்கும்' என்கிறது பழமொழி. மனோ சக்திதான் நம் அறிவு. இது புலனுகாத பொருள். ஆனுல் இவ்வுலகில் புலனுக்குட்படும் பொருட்கள் வாழ்விற்குத் தேவையாயிருக்கின்றன, வலிமை சேர்க்கின்றன. ஆகவே நாம் நம் மனோசக்தியை-அறிவை-உபயோகித்து இந்தப் புற உலகில்—பொருள் உலகில்—நடைமுறை உலகில் வெற்றி காணும் மார்க்கங்களை ஆராயவேண்டும். அதற்கு நாம் நம் சிந்தனையை, தொழில் செல்வம் என்ற ரீதியில் ஒருமுகப்படுத்தவேண்டும்.

"அதிர்ஷ்ட தேவதையின் மந்திரக்கோலால் தொடப்படுவதற்காகக் காத்திருக்கிறேன்; என்னைக்

கனவு தொடுவதற்காகக் காத்திருக்கிறேன்'' என்று காலத்தைக் கடத்தாதீர்கள்.

ஏனெனில்,இவ்வுலகில் அறிவும் நாம்தான். வினைப் பயனும் நாம்தான். வினையும் (செயலும்) நாம் தான்; வினைப்பயனும் நாம்தான். நம்மை நாம்தான் தட்டி எழுப்பிக் கொண்டு புறப்படவேண்டும். யாரும் ஏழு குதிரைகள் பூட்டிய ரதத்தை நம் முன் கொண்டு நிறுத்தி, ''தம்பீ! ஏறிக்கொள்!'' என்று கூறப்போவ தில்லை.

அறிஞர் பர்னார்ட்ஷா கூறுகிறார், ''சந்தர்ப்பத்திற் காக நான் காத்திருப்பதில்லை, சந்தர்ப்பங்களை நான் உருவாக்குகிறேன்'' என்று. பர்னார்ட்ஷா அடக்கத் திற்குப் பெயர் போனவரல்ல எனினும், அங்கே தொனிக்கும் தன்னம்பிக்கையைக் கவனியுங்கள். ஒரு மனிதன் கணீரென்று நிச்சயமாகப் பேசும்போது உலகமே கைதட்டி அவனை அண்ணாந்து கவனிக்கிறது. அவன் சொல்வதை யாரும் சந்தேகப்படுவதில்லை. அந்த மனஉறுதியை, நம்பிக்கையை, மனோபாவத்தை நாம் வளர்க்க வேண்டும்.

எத்தனையோ பிரசுரகர்த்தர்களது வாசற்படி களில் ஏறி இறங்கினார் ஷா. ஓராண்டுக்குமேல் ஏமாற்றம். எனினும், தம் எழுத்தில் அவருக்கு நம்பிக்கை இருந்தது. கடைசியில் அவர் தம்மைப் பற்றி எண்ணியதே உண்மையாய்ப் போயிற்று. உல கம் இன்று அவரை மேதை எனக் கொண்டாடுகிறது.

அவருடைய சமதர்மப் பிரசார நாடகங்கள் இருபத்தைந்து ஆண்டுகளில் பிரிட்டனின் மனோ பாவத்தைப் பண்படுத்தின. முதன் முதலாக 'லேபர்'

கட்சி இங்கிலாந்தில் பதவியேற்றது. அட்லி பிரதமரானார். சமதர்மக் கொள்கைகளின் நல்ல விஷயங்கள் அரசால் சட்டமாக்கப்பட்டன. அட்லியின் காலத்தில் தான் இந்தியா சுதந்திரம் பெற்றது.

பர்னார்ட்ஷா உண்மையிலேயே சந்தர்ப்பங்களை—தாம் விரும்பிய சந்தர்ப்பங்களை—தம் வாழ்விலும் நாட்டு வாழ்விலும் உருவாக்கினார்.

நம் மன எண்ணங்கள் புறவாழ்வில் சந்தர்ப்பங்களை உருவாக்குகிறது என்பது உண்மை. சந்தர்ப்பங்களும் எண்ணங்களும் காற்றில் நம்மைச் சுற்றி மிதந்து கொண்டிருக்கின்றன. அவற்றைப் புரிந்துகொள்ளும் தன்மையை நாம் வளர்த்துக் கொள்ளவேண்டும். ஒரு பிரச்னையில்—ஒரு சிக்கலில்—நாம் மாட்டிக்கொண்டிருக்கலாம். அதையே பிரச்னையாகப் பார்க்காமல், சந்தர்ப்பமாகப் பார்க்கும் ஒரு மனோபாவத்தை நாம் வளர்க்கவேண்டும். சந்தர்ப்பங்களை யார் புரிந்து கொள்கிறார்கள்? ஒரு புதிய டிசைனைப் பார்த்ததும் இது மக்களிடையே பிரபலமாகும் என்று புரிந்து கொள்ளுகிறாரே புடைவைக் கடைக்காரர், அவர் சந்தர்ப்பங்களை உருவாக்குகிறார். நாட்டு நிலையைப் புரிந்துகொண்டு, அதைத் துணிவுடன் நாடகமாக்குகிறாரே கோமல் சுவாமிநாதன், 'தண்ணீர், தண்ணீர்' என்ற தலைப்பில், அவர் சந்தர்ப்பங்களைத் தமக்கும் பிறருக்குமாக உருவாக்குகிறார்.

சந்தர்ப்பம் எல்லோர் வாழ்விலும் வருகிறது. ''இது நல்ல சந்தர்ப்பம்; வாழ்க்கை வளம் பெற இது நல்ல துறை வழி'' என்பது பலருக்கும் பிடிபடுவதில்லை. அடுத்தவர் செய்ததும்—செய்யத் தொடங்கியதும்

"அடாடா! எனக்கு அப்போதே தெரியாமல் போய் விட்டதே!" என்று அங்கலாய்க்கிறார்கள் இவர்கள்.

பெனிசிலீன் மருந்தைக் கண்டுபிடித்த அலெக்சாந்தர் பிளெமிங், தம் முன்னே இருந்த கண்ணாடிப் பாத்திரத்தில் ஏதோ காளான் முளைத்திருப்பதைக் கண்டார். அவர் அதைத் தூக்கி எறிந்திருக்கலாம். ஆனால், தூக்கி எறியவில்லை. என்னவென்று அறிந்து கொள்ள மைக்ராஸ்கோப்பினடியில் வைத்துப்பார்த்தார். அங்கே காளானைச் சுற்றியிருந்த இடங்களில் இருந்த பாக்டீரியா செத்துப்போயிருந்தது. காளானிலிருந்து புறப்பட்ட பொருள், பாக்டீரியாவைக் கொல்கிறது என்று கண்டார்.

பிளெமிங்கிற்கு வெற்றி தந்த மனப்போக்கு என்ன மனப்போக்கு?

அலட்சியப்படுத்தாத மனப்போக்கு; ஏதேனும் இருக்குமோ என்ற நம்பிக்கை ஒளி படர்ந்த மனப்போக்கு. 'அதைத்தான் பார்ப்போமே' என்று செயல்படும் மனப்போக்கு. இதை நாம் கிரகித்துக் கொள்ள வேண்டும்.

கேரளாவிலிருந்து ஜெர்மனிக்குத் தென்னை நார் கயிற்றை ஏற்றுமதி செய்தபோது எடை கூடுவதற்காகக் கடல் மணலில் ஒரு புரட்டு புரட்டி எடுத்து அனுப்பினார்கள்.

கொஞ்சம் கொஞ்சமாக இப்படி மணல், ஜெர்மனியில் மலைபோல் குவிந்தது. ஜெர்மானியர்கள் இதைத் தூக்கி எறியவில்லை. 'மணல் கருஞ்சிவப்பு நிறமாக இருக்கிறதே' என்றுஆராய்ந்தார்கள். அதில் தோரியம் என்ற உலோகம் இருப்பது தெரியவந்தது. (தோரியம் ஆக்ஸைடு, பெட்ரோமாக்ஸ் விளக்கின் திரி செய்யா

பயன்பட்டது அப்போது) உடனே கேரளாவுக்கு எழுதினார்கள், ''ஐயன்மீர்! நீங்கள் கயிற்றுடன் இனி மணலை அனுப்பவேண்டாம். மணலையே அனுப்புங் கள்'' என்று.

ஜெர்மானியருக்கு மணல்—மணல்மேடாக—ஒரு பிரச்னையாக இருந்தது. ஒரு பிரச்னையை எப்படி அருமையான சந்தர்ப்பமாக — வாய்ப்பாக மாற்று கிறார்கள் என்று கவனியுங்கள்.

ஒரு பெரிய வேலையிலிருக்கும் உங்களை வேலையை விட்டு வீட்டுக்கு அனுப்புகிறார்கள். என்ன செய்வோம் நாம்? 'வேலை போய்விட்டதே,இப்படி ஒரு நல்ல வேலை மீண்டும் எங்கே கிடைக்கும்?' என்று கவலைப்பட்டுக் குமைந்து ஒப்பாரி வைப்போமா, அல்லது 'இது ஒரு சந்தர்ப்பம். அவர்களைவிட மேம்பட்ட ஒரு பொருளை உற்பத்தி செய்து விற்பேன்' என்று சொல்வோமா? எண்ணிப் பாருங்கள்!

# 23

## சங்கடங்களை நல்ல சந்தர்ப்பங்களாக எண்ணுக

ஜீனோ பாலூச்சி! அமெரிக்காவில் மிகவும் பிரபல மான 'மில்லியனர்' அவர். அமெரிக்காவின் வடகோடி யில் 'டுலுத்' என்ற நகரில் வாழ்கிறார்.

எங்கள் கம்பெனியுடன் அவர் வியாபாரம் செய்து வந்ததால் அவரை நான் அறிவேன். சில ஆண்டு களுக்கு முன் தாம் எழுதிய தம் சுயசரிதத்தைத் தமது கையெழுத்துடன் எனக்கு அனுப்பி இருந்தார். புத்தகத்தின் தலைப்பு? 'ஆயிரங்கோடியை—அவசர மாகச் சம்பாதிப்பது எப்படி?' எப்படித் தலைப்பு?

ஜீனோ இளவயதில் ஒரு மளிகைக் கடையில் ஓர் எடுபிடி ஆளாக இருந்தார். அந்தக் காலத்தில் அமெரிக்காவில் வாழைப்பழம் அவ்வளவு அறிமுக மாகவில்லை. வெளிநாடுகளிலிருந்து தருவிக்கப்பட்டு, விற்கப்பட்டு வந்தது.

ஒரு சமயம் கடையில் வாழைப்பழம் நிறைய தேங்கிவிட்டது. பழத்தில் புள்ளிகள் விழ ஆரம்பித்து விட்டன. கடை முதலாளிக்குக் கவலை. "இதை

எல்லாம் தூக்கி எறிய வேண்டியதுதான்!'' என்ருர் கடை முதலாளி.

''இல்லே, நான் வாங்கிக் கொள்கிறேன்!'' என்ருர் ஜீனே. பேருக்குக் கொஞ்சம் காசைக் கொடுத்துவிட்டு அத்தனே வாழைப்பழத்தையும் வாங்கிக் கொண்டார். அழுகிப் போனவற்றைத் தூக்கி எறிந்தார். மற்ற வற்றைக் கடைத்தெரு முனையில் கொண்டு குவித்தார்.

என்ன செய்தார் என்கிறீர்கள்?

''ஸ்பெஷல் இறக்குமதி! தென் அமெரிக்காவி லிருந்து! புள்ளி விழுந்த வாழைப்பழங்கள்! மிகவும் ருசியானவை!'' என்று கூவிஞர். வாழைப்பழம் எங்கிருந்து வருகிறதென்பது மக்களுக்குத் தெரியாது ''தென் அமெரிக்காவிலிருந்து வாழைப்பழம்!'' என்று அவர் கூறியதும், அது பழத்தின் மதிப்பை அதிக மாக்கியது. புள்ளி விழுந்த பழத்தை ''புது சாதிப் பழம்!'' என்று கூறிஞர் ஜீனே. அவ்வளவுதான். பழம் பறந்து போய்விட்டது! வாங்கிய விலேக்கு நாலு பங்கு பணம் வந்தது.

ஜீனே பாலூச்சியை நினேக்கும் போது இந்தச் சம்பவம் என் நினேவுக்கு வராது போகாது. எனக்கு நானே சிரித்துக் கொள்வேன். இதுபோலத் தம் வாழ்வில் நிகழ்ந்த பல சம்பவங்களே—சாமர்த்தியங் களே—அவர் விவரிக்கிருர். இன்று அவர் மில்லியனர்! மின்னசோட்டா மாநிலத்து அரசியல் இன்று அவர் கைக்குள் இருக்கிறது. பணம் செய்யும் வலிமை.

சந்தர்ப்பம் எப்படி உருவாகிறது என்பதைக் கவனியுங்கள். சங்கடமான ஒரு நிலேமையை எப்படி ஒரு சந்தர்ப்பமாக மாற்றிஞர் என்பதைக் கொஞ்சம் யோசித்துப் பாருங்கள்.

சந்தர்ப்பங்கள் எப்போதும் ராஜாவேஷம் போட்டுக்கொண்டு வருவதில்லை. சினிமா நட்சத்திரம்போல கவர்ச்சி வேஷம் போட்டுக்கொண்டு வருவதில்லை. அவை சாதாரண சம்பவங்கள்தான். சில சமயம் சோதனைகளாகவும் சங்கடங்களாகவும் வருகின்றன. ஆனால் மனம் இருக்கிறதே, அது சாதாரண சம்பவத்தையும் சங்கடத்தையும் தனக்கு இசைவாகப் பலனளிக்கும் சந்தர்ப்பமாக நோக்குகிறது; மாற்றுகிறது.

இதற்கு எது காரணம்?

மனம். மனப்போக்கு. பார்க்கும் மனோபாவம்.

ஒரு வீட்டிலே இரண்டு சிறுவர்கள் இருந்தார்கள். ஆறு வயதிருக்கும். ஒருவன் எதை எடுத்தாலும் குறை சொல்வான்; குற்றம் கண்டுபிடிப்பான். இரண்டாமவனோ எதிலும் சந்தோஷத்தைக் காண்பவன்; எதையும் உற்சாகமாகச் செய்பவன். துருதுருவென்று இருப்பான்.

பெற்றோருக்கு இப்படித் தங்கள் இரண்டு குழந்தைகளும் மாறுபட்டு இருக்கின்றனவே என்பதில் வியப்பு; புதிர். ஒருநாள் ஒரு சோதனை செய்ய நினைத்தார்கள். பண்டிகை சமயம். குறை காண்பவனுக்கு ஓர் ஓடும் ரயில் வண்டியைப் பெட்டியில் போட்டுப் பரிசாக வைத்தார்கள்...சந்தோஷப்படுகிறானா என்று பார்க்க. உற்சாகமானவனுக்கு, ஒரு பெட்டியை எடுத்து அதில் கொஞ்சம் குதிரைச் சாணத்தை வைத்து மூடி, தாளை ஒட்டிப் பரிசாக வைத்தார்கள்... மனவருத்தம் அடைகிறானா என்று பார்க்க.

முதல்வன், பெட்டியைப் பிரித்தான். ரயில் வண்டி இருந்தது. "பூ!இதுதானா!" என்றான். இரண்டாமவன்,

தன் பெட்டியைப் பிரித்தான். அதிலே குதிரைச் சாணம் இருப்பதைக் கண்டான். அவனுக்கு வியப்பு மேலிட்டது. எதையோ தேடுவதைப் போல அங்கு மிங்கும் பெட்டிக்குள் பார்த்தான்.

பெற்றோர், ''மகனே! என்ன தேடுகிறாய்?'' என்றார்கள். ''இவ்வளவு சாணம் இங்கே இருக்கும்போது, இங்கே ஒரு குதிரைக்குட்டியும் இருந்தாக வேண்டும். அதைத்தான் தேடுகிறேன்!'' என்றான் அவன்!

சந்தர்ப்பங்கள் எல்லோருக்கும் பொதுவாக—ஒரே மாதிரியாகத்தான் — வருகின்றன. ஆனால், சிலருக்குத்தான் அதில் 'குதிரைக்குட்டி' இருப்பது தெரிய வருகிறது. சிலர் சாணத்தைத்தான் காண்கிறார்கள்.

சம்பவங்கள், பிரச்சினைகள், சிக்கல்கள், இக்கட்டுகள் என்று வரும்போது, நாம் என்ன செய்ய வேண்டும்? மனம் உடைந்து போகக்கூடாது. ''இதிலும் ஏதேனும் பலன் இருக்குமோ? இதுவும் நல்லதற்குத் தானோ?'' என்று சங்கடங்களைச் சந்தர்ப்பங்களாக நினைக்கக் கற்றுக் கொள்ள வேண்டும். ஏனெனில், ''அதிர்ஷ்டங்கள் மாறு வேஷம் போட்டுக் கொண்டு வரும்'' என்று சொல்வார்கள். இந்த நினைவுடன் கொஞ்சம் உங்கள் கற்பனையை விரியவிடுங்கள்.

இடம். கோயில் பிராகாரம். மாலை நேரம். அதோ ஒரு பெரியவர், சரஸ்வதி தேவியின் கடாட்சத்திற்காகத் தவமிருக்கிறார். அவர் தவத்திற்கு இரங்கி அன்னை தேவதாசி வேடம் பூண்டு வாயில் வெற்றிலை பாக்கை மென்று கொண்டு, சிவந்த உதடுகளுடன்

பெரியவர் அருகில் வருகிருள். பெரியவர் பதறுகிருர். கண்களைப் பொத்திக் கொள்கிருர். அவளை விரட்டு கிருர்.

அதோ ஒரு மாடு மேய்க்கும் இளைஞன் பிராகாரத் தின் மற்ருேர் பகுதியில் உட்கார்ந்திருக்கிருன். 'உன் னுடைய உதடு இவ்வளவு சிவப்பாக, அழகாக இருக் கிறதே' என்று அவன் கூறி இருக்க வேண்டும். 'உன்னு டைய உதடுகளையும் சிவக்க வைக்கிறேன் பார்!' என்று அன்னை கூறி, அருகில் வந்து, நாக்கை நீட்டச் சொல்லி தன் வாய்ச் செல்வத்தை அவனுக்கு அருளியிருக்க வேண்டும். மறுகணம் அந்த மாடு மேய்க்கும் இளைஞன் கவி காளிதாசன் ஆகிருன். (காளிதாசன் வரலாற்று ஆசிரியர்கள் மன்னிக்க!)

சந்தர்ப்பங்கள் எப்படி மாறுவேஷம் போட்டுக் கொண்டு வருகின்றன என்பதை வெளிக் கொணரத் தான் காளிதாசன் கதையை நினைவு படுத்தினேன்.

சந்தர்ப்பங்கள் சாதாரணமானவைதான். ஆனுல் நாம் நோக்குகிற விதத்தில்தான் அங்கே புதுப் பாடம் தோன்றுகிறது.

மாலை நேரத்தில் தோட்டத்தில் ஒரு பெஞ்சின் மீது உட்கார்ந்திருக்கிருேம். மரத்திலிருந்து ஒரு ஆப்பிள் கீழே விழுகிறது. என்ன நினைக்கிருேம்? ஆப்பிள் பழுத்து விட்டது என்று எண்ணுகிருேம். "ஏன் கீழே விழுகிறது?" என்று யாராவது கேட்டால், "அதுதானே உலக நியதி!" என்று கூறியிருப்போம்.

இதோ நியூட்டன் வருகிருர். அவருக்கும் அதே சம்பவம் நேர்கிறது. 'பூமி அந்தப் பழத்தைப் பிடித்து

இழுப்பதைப் போல ஒரு கற்பனை' ஓடுகிறது அவருக்கு. புவியீர்ப்புக் கொள்கை பிறக்கிறது. ஒரு புதிய விஞ்ஞான தத்துவம் உருவாகிறது. நியூட்டனின் மன நிலையில் உங்களைச் சில கணம் நிறுத்துங்கள்.

காபிக் கடைக்குப் போய் உட்கார்ந்ததும் சிப்பந்தி, "அல்வா இருக்கு, மைசூர்ப்பாகு இருக்கு, கோக்கர் ஜான்.இருக்கு. சாருக்கு எது வேணும்?" என்றார். உட்கார்ந்தவர், "அல்வா, மைசூர்ப்பாகு எல்லாம் சரிதான். இது என்ன ஐயா கோக்கர் ஜான்?" என்று கேட்டார். சிப்பந்தி சுற்றுமுற்றும் பார்த்தார். "ஒன்றுமில்லை சார். இது குளோப்ஜான்தான். இரண்டு மூணு நாளா விக்கலே. அதைத் துண்டு துண்டாக வெட்டிப் போட்டு, சூடுபடுத்தி வைச்சிருக்கோம். நல்லாருக்கும். நேற்றுவரை குளோப்ஜான். இன்றைக்கு கோக்கர்ஜான், அவ்வளவுதான்!" என் கிறார்.

நண்பர்களே! ஜீஞே பாலூச்சி அமெரிக்காவில் இருப்பதாகவா சொன்னேன்? அவர் அங்கு மட்டும் இல்லை; அவர் இதோ இருக்கிறார். இங்கே, நம் கண்ணுக்கெதிராக...ஹோட்டல் சிப்பந்தி என்ற பெயரில்.

நம் நாட்டில்தான் எத்தனை ஜீஞே பாலூச்சிகள்!

# 24

# சந்தர்ப்பங்களை உருவாக்குவது எப்படி ?

*சந்தர்ப்பங்களை எப்படி உருவாக்குகிறார்கள் ?*

ஆகில்வி மாத்யூ என்ற பெயரை நமது ஊர் விளம்பர கம்பெனிக்காரர்கள் நன்கு அறிவார்கள். இவர் பிரிட்டனில் பிறந்து, அமெரிக்காவில் மிகப் பெரிய விளம்பர நிறுவனம் ஒன்றை நிறுவியவர். எப்படிச் சந்தர்ப்பங்களைத் தொழில் துறையில் உருவாக்கினார் என்பதைப் பார்ப்போம்.

அமெரிக்காவில் வெண்ணெய்க்கு மாற்றான ஒரு 'இமிடேஷன்' வெண்ணெய் தயாரிக்கும் கம்பெனி, ஆகில்வியைத் தங்களுக்கு விளம்பரம் செய்யச் சொல்லிற்று. வெண்ணெயை ரொட்டிக்குத் தடவலாம்; சில பொருட்களுக்கு ருசி சேர்க்கப் போடலாம்; அவ்வளவு தான். எவ்வளவு ரொட்டிக்குத்தான் வெண்ணெய் தடவுவது? ஆகவே இமிடேஷன் வெண்ணெயின் விற்பனை ஏறவில்லை; ஓரளவுக்குப் போய் நின்று விட்டது.

ஆகில்வி பார்த்தார். ஒரு ஐடியா தோன்றியது. "'பொரிப்பதற்கு ஏற்ற பொருள்—எங்கள் வெண்

ணெய்!'' என்று விளம்பரம் செய்தார். உடனே மக்கள் பொரிப்பதற்கு அந்த இமிடேஷன் வெண்ணெயை உபயோகித்தார்கள். பொரித்த பொருள் நன்றாக வாசனையாக இருந்தது. இல்லத்தரசிகள் இதைப் பொரிப்பதற்கு உபயோகிக்க ஆரம்பித்ததும் விற்பனை கிடுகிடுவென்று ஏறிற்று !

கவனியுங்கள். இது வெண்ணெய் வியாபாரம். தொழிலில் தேக்கம். என்ன செய்வது? 'இன்னும் இரண்டு கிலோ வாங்கிக் கொள்ளுங்கள்' என்று அவர்கள் தொண்டையில் திணிக்க முடியுமா? ஆனால், அதை ஆகில்வி செய்தார்! வேறு ஒரு நோக்கில் பார்த்தார். புதிய சந்தர்ப்பங்களை உருவாக்கினார்.

மற்றோர் சம்பவம். சோடா உப்பு விற்பனை. ரொட்டிச் சோடாவை — அதுவும் ஒரு சிட்டிகை அளவுக்குத்தான் ரொட்டி செய்ய உபயோகிக்கலாம். அல்லது புளித்த தோசைமாவில் போட்டுப் புளிப்பை மாற்றலாம். ஆகவே விற்பனை ஓரளவுக்குப் போய் நின்றுவிட்டது.

வருகிறார், விளம்பர விற்பன்னர். ''அம்மா, இந்த ரொட்டிச் சோடா பெட்டியைத் திறந்து உங்கள் குளிர் சாதனப் பெட்டியில் வையுங்கள். எல்லாப் பொருட்களின் வாசனையையும் இழுத்துக் கொள்ளும். உங்கள் உணவுப் பதார்த்தங்கள் இயற்கை மணத்துடன் திகழும்'' என்று விளம்பரம் செய்கிறார். அவ்வளவுதான். ரொட்டிச் சோடா அட்டைப் பெட்டி, பெட்டி பெட்டியாக விற்பனை ஆயிற்று! மூன்று மாதம் கழித்து விளம்பரம் செய்தார் நம் விளம்பர விற்பன்னர். ''தாயே! ஓரிரு மாதங்களில் ரொட்டிச் சோடா தன் வேலையை முடித்திருக்கும்.

ஆகவே, மாதந்தோறும் ஒரு புதுப் பெட்டியைத் திறந்து உள்ளே வையுங்கள். பழைய பெட்டியைப் பாத்திரம் கழுவும் தொட்டியில் கொட்டிக் கழுவுங்கள். பாத்திரம் கழுவும் இடம் தூய்மை பெறும்!'' என்று விளம்பரம் செய்கிறார். அவ்வளவுதான் சிட்டிகை சிட்டிகையாக உபயோகிக்கப்பட்ட ரொட்டிச் சோடா இப்போது டன் டன்னாக விற்பனை ஆகியது!

விளம்பர கம்பெனிக்காரர்கள் புதிய சந்தர்ப்பங்களை உருவாக்குகிறார்கள். நேற்றுவரை அந்த சந்தர்ப்பங்கள் இல்லை.

பாங்க்கின் முதலீட்டை அதிகப்படுத்த, ''பணத்தைச் சேமிப்பில் போடுபவர்களுக்குப் பரிசு கொடுக்கிறோம், குலுக்குச் சீட்டின் மூலம்'' என்று விளம்பரம் செய்தது, 'பாங்க் ஆஃப் மதுரை' நிறுவனம். அதற்காக விளம்பரமும் செய்தார்கள். எப்படி என்கிறீர்கள்? ''துணை இருப்பாள் மீனாட்சி!'' என்ற சொற்றொடருடன்! உங்கள் பணம் பத்திரமாக பாங்க்கில் இருக்க, துணை இருப்பாள் மீனாட்சி! மேலும் உங்களுக்கு குலுக்குச் சீட்டில் பரிசு விழவும் துணை இருப்பாள் மீனாட்சி! கவனியுங்கள். கோயில், கடவுள், மீனாட்சி என்பதில் எல்லாம் ஒரு புனிதம், ஒரு பத்திரம், ஒரு பாதுகாப்பு இருக்கிறது. அதை எப்படி லாவகமாகத் தங்கள் டெபாஸிட்டை அதிகமாக்க உபயோகிக்கிறார்கள் என்பதைக் கவனியுங்கள். உடனே இவர்களது வளர்ச்சி பிரமிக்கத்தக்கதாயிருந்தது. பாங்க்கின் அன்றைய தலைவர் திரு. கிருஷ்ணனும் திரு. ராமசாமியும் இந்தக் காரியத்தைச் செய்தார்கள். சந்தர்ப்பங்களை உருவாக்கினார்கள். பாங்க் புதிய வளர்ச்சி பெற்றது.

பி. எஸ். ராமையா ஓர் அருமையான சிறுகதை எழுதியிருந்தார். அதிலே கடைசியில் எழுதினர் "நாட்டுப்பற்றையும் வீரத்தையும் காற்றிலே விதைத்து விட்டுச் செத்துப் போனுன்" என்று. வீரத்தின் விதைகளும் நாட்டுப்பற்றின் விதைகளும் மட்டிலுமே காற்றில் மிதக்கவில்லே. நமக்கு முன்னுல் செல்வத்தைச் சேர்த்துச் சீரும் சிறப்புமாக வாழ்ந்த அத்தனே பேருடைய எண்ணங்களும் இன்று காற்றில் தான் மிதக்கின்றன. சந்தர்ப்பங்கள் நம்மைச் சுற்றிக் காற்றில் மிதந்து கொண்டுதான் இருக்கின்றன.

சந்தர்ப்பத்தை எப்படிப் புரிந்து கொள்வது? நமது மனம் நமது பிரச்னேயில் ஊறிப்போயிருக்கிறது. கடலுக்கடியில் பேராறுகள் ஓடிக்கொண்டிருப்பது போல நம் ஆழ்மனத்தில் நம் லட்சிய தாகங்கள் ஓடிக் கொண்டே இருக்கின்றன. ஒவ்வொரு சம்பவத்தையும் அது உரைத்துப் பார்த்து அது நம் தொழிலுக்கு எப்படிப் பயன்படும் என்று நமக்கு வழிகாட்டுகிறது. ஆகவே நமது பிரச்னேயில்—நமது லட்சியத்தில் ஆழ்ந்த ஈடுபாடு இருந்தால் போதும். சரியான வழி நமக்கு அவ்வப்போது 'ஐடியா'வாக, சந்தர்ப்பமாகத் தோன்றிக் கொண்டிருக்கும்.

எப்படி ஆழ்மனம் சந்தர்ப்பத்தை உருவாக்குகிறது என்பதற்கு ஓர் உதாரணத்தைக் காண்போம்.

மெக்கார்மிக் என்ற நடுத்தர வயதுக்காரர் தலே முடி வெட்டிக்கொள்ளப் போனுர். அங்கே நாவிதர் தலேமுடியை வெட்ட ஒருவகை 'மெஷினே' உபயோகிப்பதைக் கண்டார். மேலும் கீழும் இயங்கும் இருபற்கள் அசையுந்தோறும் முடி கத்தரிக்கப்பட்டதைக் கண்

டார். வழக்கமான செயல்தான்—எனினும் இன்று அது ஒரு புதிய அர்த்தத்தைக் கொடுத்தது.

கற்பனையை விரிய விட்டார், மெக்கார்மிக். தலை முடிக்குப் பதில் அங்கே கோதுமை வயல்கள், கோதுமைக் கதிர்கள் தென்பட்டன. முடி வெட்டும் சாதாரண மெஷினை மிகப்பிரமாண்டமான மெஷினாக ஒரு கணம் கற்பனை செய்தார். அவ்வளவுதான். வெகு வேகமாக அவை கோதுமை வயல்களை அறுவடை செய்துகொண்டிருந்தன! அறுவடை செய்யும் புதிய இயந்திரம் பிறந்தது. மெக்கார்மிக் சிகாகோவில் மிகப் பெரிய விவசாயக் கருவிகள் செய்யும் கம்பெனியை நிறுவினார். செல்வந்தரானார்.

அவர் செல்வந்தரானது மட்டுமல்ல; ஒரு நிரந்தர மான நலனை மக்கள் சமுதாயத்திற்கு அவர் விட்டுச் சென்றார்.

நாவிதர் கடையிலும்—எங்கிருந்தும் யாரிடமிருந் தும் நாம் பயன் பெறலாம்...விழிப்போடும் பிரச்னை உணர்வோடும் இருந்தோமானால்.

ஒரு பொறியியல் நிபுணர் உள்ளுக்குள் தீப்பற்றி எரியும் ஒரு புதிய இன்ஜின் பற்றிச் சிந்தித்துக்கொண் டிருந்தார். இதுவரைக்கும் எல்லோரும்—தவலையில் தண்ணீரைக் கொதிக்க வைக்கத் தவலைக்கு வெளியே கட்டையைப் போட்டுக் கொளுத்துவதைப் போல— வெளியே எரித்துத்தான் சக்தியை, உஷ்ணத்தை உண்டு பண்ணிக் கொண்டிருந்தார்கள்.

மாலை நேரம். தன் மனைவியுடன் வெளியே செல்ல இருக்கிறார். மனைவி இன்னும் கிளம்பவில்லை. அவள் அறைக்குச் செல்கிறார். மனைவி ஒரு பாட்டிலிலிருந்து, ‘செண்’டைத் தூவிக் கொள்கிறார். செண்ட்பாட்டி

லின் நுனியில் ஒரு ரப்பர் பந்து இருக்கிறது. அந்த ரப்பர் பந்தை அழுத்தியதும் அடியிலிருந்து புறப்பட்ட 'செண்ட்' பன்னீர்த் திவலைகளாக—ஆவியாக—மேலே உடையில் படிகிறது. உற்றுப் பார்க்கிறார் நம் பொறியாளர். இதே போல இன்ஜினுக்குள் பெட்ரோலை 'ஸ்ப்ரே' செய்தால் என்ன என்று யோசிக்கிறார். இன்டர்னல் கம்பஸ்ச்சன் இன்ஜின் (Internal Combustion Engine) என்ற உள்ளெரி சாதனம் பிறக்கிறது.

சந்தர்ப்பங்களின் விதைகள், காற்றில் மிதக்கவில்லை என்று யார் கூற முடியும் ?

# 25

# கருமமே கண்ணுயிரு

பேராசிரியர் கரும்பலகையில் சாக்கட்டியால் ஒரு புள்ளியை வைத்தார். ''என்ன பார்க்கிறீர்கள்?'' என்று கேட்டார். எல்லோரும் ஏகோபித்து ''ஒரு புள்ளியைப் பார்க்கிறோம்'' என்றார்கள். ''என்னருமை மாணவர்களே! அதைச் சுற்றி ஏராளமான வெற்றிடம் இருக்கிறதே, அதைக் கவனிக்கவில்லையா?'' என்றார்.

சாதாரணமாகச் சிறிய புள்ளிதான் நம் கண்ணுக்குப் படுகிறது. சுற்றியிருக்கும் பெரிய வெற்றிடம் நம் கண்ணுக்குப் படுவதில்லை. சந்தர்ப்பங்களும் அது போலத்தான். நாம் பழக்கப்படுத்திக் கொண்டாலொழிய சந்தர்ப்பங்கள் தெரிவதில்லை.

எல்லோரும்தான் ஊருக்கு ஊர் இட்லி தோசை உப்புமா பொங்கல் என்று விற்கிறார்கள். நீங்கள் ஒரு காபிக்கடை திறக்கப்போகிறீர்களானால் எந்தவிதத்தில்—உண்மையாக—உங்கள் பொருள் வேறுபட்டது. நீங்கள் வழங்கும் முறை மாறுபட்டது, எந்த வகையில் உங்கள் இடம் மனத்திற்கு இதம் தருவது என்பதை யோசித்துப் பார்க்க வேண்டும். புதிய சந்தர்ப்பங்களை உருவாக்க வேண்டும்.

அமெரிக்காவில் இன்று கெண்டக்கி (ஒரு மாநிலத்தின் பெயர்) பாணியில், எண்ணெயில் பொரித்த 'சிக்கன்' (கோழி என்ற பெயர் நன்ருக இல்லை! சிக்கன் 'சிக்'காக இருக்கிறது!) அமெரிக்கா பூராவும் விற்பனை ஆகிறது. ஊருக்கு ஊர் சிக்கன் விற்கும் கடை இருக்கிறது. பல்லாயிரம் பேர் இதன்மூலம் மில்லியனர் ஆகியிருக்கிருர்கள். இது இன்றைய சமாசாரம். நான் பாடம் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தபோது என் மாணவர்களை நோக்கிக் கேட்பேன், ''ஒரு இருபது வருஷத்திற்குமுன் யாராவது வந்து 'பொரித்த சிக்கனை ஊருக்கு ஊர் விற்கலாம். நல்ல லாபம் வரும்' என்று சொன்னுல் என்ன சொல்லியிருப்பீர்கள்? நகைத்திருப்பீர்கள். ''என்ன ஐயா இது. நீ விஷயம் தெரியாத ஆளாயிருக்கிருய். அதை வீட்டுக்கு வீடு ஒவ்வொரு பெண்மணியும் அழகாகச் சமைக்கிருர்கள். அதைப் போய்க் கடையில் வாங்குவதாவது? ஒரு நாளும் வாங்கமாட்டாள்'' என்று சொல்லியிருப்பீர்கள்! ஆனுல் என்ன நடந்தது?

''உண்மை என்ன? 65 வயது கிழவர் ஒருவருக்குத் தம் சிக்கனின் ருசியில்—தம் கறிப்பவுடர் கலவையில்- அசாத்திய நம்பிக்கை இருந்தது. காபிக்கடைதோறும் சென்று தம் கலவையை விற்ருர். சில 'சிக்கன் கடைகளைத்' திறந்தார். அதற்குப்பின் நிகழ்ந்தது சரித்திரம் ஸ்டாக் மார்க்கெட்டிலே கெண்டக்கி சிக்கன் ஸ்டாக் போடு போடென்று போட்டது; ஏறுஏறென்று ஏறியது.'' கவனியுங்கள். கர்னல் சாண்டர்ஸ் என்ற 65 வயது கிழவருக்கு அந்த வயதிலும் தம் பொருளைப் பற்றிய நம்பிக்கை இருந்தது. அவர் சும்மா இருக்கவில்லை. நல்ல 'ரிசிப்பி' வைத்திருந்த எத்தனையோ வீட்டுப் பெண்களையும் மற்ற சமையல் நிபுணர்களையும்

போலத் தொடர்ந்து பாடுபட்டார். சில ஆண்டுகளில் கோடீச்வரரானார்;

சினிமாவை ஒரு கொள்கைப்பரப்புச் சாதனமாக அரசியலுக்கு உபயோகித்தார் அறிஞர் அண்ணாதுரை. மாறுபட்ட நோக்கு. உலகிலேயே இப்படி சினிமாவை அரசியலுக்காக முதலில் உபயோகித்துப் பலன் கண்டவர்கள் நாம்தான். ஹாலிவுட் இருக்கும் கலிபோர்னியா மாநிலத்துப் பல்கலைக் கழகத்தில்கூட இந்தச் சாதனையை மெச்சிப் பாராட்டினார்கள்.

இளவயதுடைய தனது காரியதரிசியை இரண்டாவது மணம் செய்துகொண்டு 14 வருஷங்களாக வாழ்ந்த மனைவியை விவாகரத்து செய்தான் ஒருவன். வேலை அனுபவம் இல்லாத 34 வயதுள்ள அந்த நடுத்தர வயதுப் பெண்மணி என்ன செய்ய முடியும்?எங்கே குடியேறி என்ன செய்யலாம், என்ன படிக்கலாம், என்ன தொழில் செய்து சம்பாதிக்கலாம் என்று புரியவில்லை அவளுக்கு. தன்னைப் போல் எத்தனை எத்தனை லட்சம் பெண்கள் இப்படி உதவியின்றித் திண்டாடுவார்கள் என ஒருகணம் எண்ணிப்பார்த்தாள். ''நான் சட்டம் படிப்பேன், சட்ட நிபுணராவேன். தவிக்கும் அபலைகளுக்கு உதவுவேன். அதை என் தொழிலாகக் கொள்வேன்'' என்று ஒரு தீர்மானத்தை மேற்கொண்டாள். இன்று எத்தனையோ பேருக்கு அவள் உதவுகிறாள்.

தீர்மானம் செய்யும் ஒரு பெண்ணின் மனத்தில் என்ன நடக்கிறது?

தாங்கள் எடுத்துக்கொண்ட ஒரு விஷயமே உலகமாகப் போய்விடுகிறது அவர்களுக்கு. வேறு ஒன்றும் அவர்களை அசைப்பதில்லை. ''பசி நோக்கார், கண்

துஞ்சார், எல்லெவர் தீமையும் மேற்கொள்ளார். கருமமே கண்ணுயினுர்' என்கிறது நீதிநெறி விளக்கப் பாடல். அதுபோலக் கருமம் ஒன்றில்தான் கண்ணு யிருக்கிருர்கள். அத்தகைய தீவிரம்.

ஒரு புதிய பெண்ணைப் பார்க்கும்—காதலிக்கும்—இளைஞன் முன்னுல் ஒரு புது உலகமே விரிகிறது. அந்தப் பெண்ணுடன் பேசி, பழகித் தன் வாழ்நாள் பூராவுமே சிரித்து மகிழ்ந்து வாழ்ந்து செத்துப் போய்விட்டால்; போதும், ஜன்ம சாபல்யம் ஆகிவிடும் என்று நம்பு கிருன். தன் கனவுகளைப் பகிர்ந்து கொள்கிருன்; கற்பனைகளை முன் வைக்கிருன். அந்தப் பெண்ணை அடைய எந்தத் தியாகத்திற்கும் அவன் தயார்.

அந்த மனநிலையை நாம் துறவு மேற்கொள்வ திலிருந்து தொழில் செய்வது வரை எதற்கும் உபயோ கிக்கலாம். 'ஊரார் பிள்ளையை ஊட்டி வளர்த்தால் தன் பிள்ளை தானே வளரும்' என்பதைப் போல நீங்கள் லட்சியத்தைக் கவனியுங்கள்; புகழ் தானே வரும். தொழிலைக் கவனியுங்கள்; செல்வம் தானே வரும். காதலைக் கவனியுங்கள்; உடல் சுகம் அதனுள் அடக்கம்.

அனுபவம் நிறைந்தவர்களும், மனோதத்துவ அறிஞர்களும் இதைத்தான் கூறுகிருர்கள். "புகழ், செல்வாக்கு—இவை நோக்கம்தான். ஆனுல் அதை நோக்கி—எண்ணிச் செயல்படாதீர்கள்; தொண்டை மட்டிலுமே எண்ணுங்கள்; செல்வம் சேர்ப்பதுதான் நோக்கம்; ஆனுல் நீங்கள் தொழில் தொழில் என்று தொழிலில், வியாபாரத்தில் கவனம் செலுத்துங்கள்" என்று.

அடுத்ததாக ஒரு விஷயம் கூறுகிறார்கள். 'ஐடியா' கிடைத்ததும், ஒரு புலம் தென்பட்டதும், காதலிக்க ஒரு பெண் கிடைத்ததும்—ஊர் பூராவும் போய்த் தம்பட்டம் அடிக்காதீர்கள். இதைப் போல முட்டாள் தனமான காரியம் வேறு இல்லை; உங்கள் லட்சியத் திற்குக் கேடு விளைக்கும் காரியம் வேறு இல்லை.

வாய்க்குப் பூட்டுப் போடுங்கள். மனத்தில் விஷயத்தை ஊறப் போடுங்கள். சதா மனத்தில் ஆசையை அசை போடுங்கள். யாராவது விஷயம் தெரிந்து கேட்டால்கூட சும்மா புன்னகையுங்கள்; பேச்சை வேறு விஷயத்திற்கு மாற்றிவிடுங்கள்.

என்னுடைய இந்திய நண்பர் ஒருவர் தம் தொழில் பற்றி யாரிடமும் எதையும் கூறமாட்டார். யாராவது வாயைக் கிளறினாலும் ஏதோ உப்புச் சப்பற்ற பதிலைக் கூறுவார். அல்லது மௌனமாக இருப்பார். கடைசியில், ஒரு புதிய கம்பெனியை வாங்கலாம் என்றிருக்கிறேன் என்பார். முக்காலே மூணு வீசம் காரியம் அப்போது முடிந்திருக்கும். பழைய சொந்தக் கம்பெனியை விற்று விட்டேன் என்பார்.

''இன்னது செய்யப் போகிறேன் என்று யாரிடமும் எதுவும் சொல்லாதே'' என்கிறது மனோதத்துவம். இதோ என் நண்பர், அதன் தரிசனம். நம்புவதற்கு வேறு என்ன வேண்டும்? தத்துவத்தை நம் வாழ்வில் தரிசனம் பண்ண வேண்டும்.

தெரிந்து கொண்ட விஷயத்தைப் பயன்படுத்து வதுதான் அறிவு. அதுதான் பலன். தத்துவத்தைப் பயன்படுத்துவோம். வாழ்வில் தரிசனம் பெறுவோம்.

# 26

# காலமறிந்து செயல் செய்க!

ஓடை. சலசலவென்று நீர் ஓடுகிறது. பளிங்கு போன்ற நீர். கூழாங் கற்கள் மீது விழுந்து புரண்டு தெறித்து ஓடுகிறது, சின்னச் சின்ன மீன்கள் எதிர் நீச்சல் போடுகின்றன. கரையில் செதுக்கி வைத்த சிற்பம் போல் ஒரு கொக்கு நின்று கொண்டிருக்கிறது. கொக்கு இந்தச் சிறிய மீன்களைக் கண்டு கொஞ்சமாவது அசைய வேண்டுமே...? ஊஹூம்!

''கொக்கு என்ன, நின்றுகொண்டே தூங்குகிறதா?—நமக்கே ஒரு சந்தேகம் வருகிறது. இதோ ஒரு பெருத்த மீன்! சரியான மீன்! அவ்வளவுதான். கொக்கு சட்டென்று கொத்தித் தூக்குகிறது!

கொக்கைப் பாராட்டுகிறார் கவிஞர். 'ஓடுமீன் ஓட உறுமீன் வருமளவும் வாடி இருக்குமாம் கொக்கு, என்று. 'உறுமீன்' வருமளவும் எதையுமே லட்சியம் செய்யாதது போல வாடி இருக்கிறதாம் கொக்கு!

தொழில் செய்பவர்கள் அப்படித்தான் தொழிலில் சரியான சந்தர்ப்பத்தைக் கொத்தித் தூக்குகிறார்கள் என்று தொழில் ஆராய்ச்சி ஏடுகள்

எழுதுகின்றன. இப்போது கொக்கையும், சரியான சந்தர்ப்பத்தைக் கண்டு உபயோகிக்கும் ஒரு தொழிலதிபரையும் சேர்த்து எண்ணிப் பாருங்கள். அவர்களுக்கு—

சுற்றி நடப்பவற்றைப் பற்றிய ஓர் அசாதாரண கவனம் இருக்கிறது. நாடு எங்கே போகிறது, மக்கள் தேவை எதை நோக்கிச் செல்கிறது, மக்கள் ருசி எப்படி மாறி வருகிறது, நாட்டு மக்களின் மனப் போக்கு என்ன என்பதைப் பற்றிய கவனம் அவர்களுக்கு நிறைய இருக்கிறது.

விஷயத்தின் உள் அர்த்தத்தைப் புரிந்து கொள்ளும் கூர்மை அவர்களிடம் இருக்கிறது. 'இது சின்னமீன், விட்டுத் தள்ளு' என்று கொக்கு காத்திருக் கிறது. 'ஆசிரியர் தொழிலிலோ, குமாஸ்தா தொழிலிலோ எத்தனை காலம் நான் உழைத்தாலும் நான் பணக்காரனாகப் போவதில்லை' என்று எதிர் காலத்தைக் கணித்தறியும் கூர்மை. மக்கள் இன்று சமுதாயப் பிரச்னைகளில் ஆர்வம் காட்டுகிறார்கள் என்று உள் அர்த்தத்தைக் காணும் சினிமா தயாரிப் பாளர். மக்களிடம் ஒரு புதிய ஆன்மிக மறுமலர்ச்சி தோன்றி இருக்கிறது; அதைக் காசாக்கலாம் என்று செயல்படும் ஆன்மிக 'பிஸினஸ்மேன்'. 'எத்தனை கால மானாலும் இந்தியாவுக்குச் சோறு போடுவது விவசாயம்தான். ஆகவே, நல்ல விவசாய சம்பந்த மான உரத் தொழில், பூச்சி மருந்துத் தொழில் நல்ல தொழிலாக அமையும்' என்று சீர்தூக்கும் தொழி லதிபர்...இவர்கள் எல்லாம் ஆழ்மட்டத்தில் ஓடும் அடிப்படை நீரோட்டத்தைச் சரியாகக் கணிக்கும் மனக்கூர்மை பெற்றிருக்கிறார்கள். சரியான கொக் கர்கள்!

துணிச்சலாக, 'இறங்குவோம். முயல்வோம். அந்தத் தொழிலில் என் பெயர் பொறிக்கப்பட்டிருக்கிறது!' என்று நம்பிக்கையுடன்—நஷ்டம் வருவதைவிட லாபம் வருவதற்குத்தான் அதிக வாய்ப்பு என்பதைத் தெரிந்துகொண்டு—இறங்குகிறார்; செயல்படுகிறார்.

படித்தவர், உலகம் தெரிந்தவர், ஊருக்கு உபதேசம் செய்பவர்-(உதாரணத்துக்கு ஒரு கல்லூரி ஆசிரியர்) என்ன செய்கிறார்? "சந்தர்ப்பம் எல்லாம் சரிதான். அருமையான சந்தர்ப்பம்தான்! ஆனால், இப்போது சம்பளம் மாதாமாதம்—வேலை செய்கிறேனோ இல்லையோ—சுளையாக வந்து விடுகிறது. மேலும் மூன்று மாதம் விடுமுறை. இதெல்லாம் போய்விடுமே...!" என்று யோசிக்கிறார். தம் தொழிலார்வத்தைத் தள்ளிப் போடுகிறார். பின்னால் தம் மாணவன் ஒரு தொழில் செய்யும்போது—பணக்காரனாகி,காரும் வீடும் ஆட்களும் என்று வாழும் போது— 'நானும் விரும்பியிருந்தால் அப்படி ஆகி இருக்க முடியும்!' என்று தம் கையாலாகாத் தனத்தைச் சமாதானப்படுத்திக் கொள்கிறார்.

கல்லூரி ஆசிரியர் என்றில்லை. இத்தகைய மனிதர்கள் எல்லாத் துறைகளிலும் இருக்கிறார்கள். தொழில்செய்யத் துணிச்சல்வேண்டும்; வாழ்வதற்கும் துணிச்சல் வேண்டும். இல்லையென்றால் அவர்கள் கோழைகள். சந்தர்ப்பங்களைக் கோட்டை விடுபவர்களைப் பின் எப்படிக் கூறுவது?

'ஓடுமீன் ஓட' என்று பாடிய கவிஞரைவிட ஒரு படி மேலே செல்கிறார் வள்ளுவர். 'கொக்கொக்க கூம்பும் பருவத்து, மற்றதன் குத்தொக்க சீர்த்த இடத்து' என்று கூறுகிறார் அவர்.

''எல்லாம் கூடி வரும் வரை கொக்கு போல் அமைதியாகக் காத்திருங்கள். எல்லாம் கூடி வரும் சரியான சமயத்தில்—கொக்கின் குத்துப்போல, பாய்ந்து செயலாற்றுங்கள்' என்று கூறுகிறூர் திருவள்ளுவர். இதைத்தான், 'சரியான சமயத்தை உணரும் திறன்' (sense of Timing) என்று எழுதுகிறூர்கள். திருவள்ளுவர் இரண்டே வார்த்தைகளில் 'காலம் அறிதல்' என்று அதிகாரத்துக்குத் தலைப்புக் கொடுக்கிறூர். திருவள்ளுவர் இந்தப் பத்துப் பாக்களையும் பொருட்பாலில்தான் வைத்திருக்கிறூர்; பொருட்பாலில் இது அரசியலில் வருகிறது. காலம் அறிதல் அரசியலுக்கு மிக அவசியம். தொழிலுக்கு இன்னும் அவசியம்.

உதாரணமாகப் பல வாரப் பத்திரிகைகள் பல ஆண்டுகளுக்கு முன்னும் இருந்தன. இருந்தும் ஒரு குமுதம் வந்தது, வெற்றியடைந்தது. எப்படி? 'உபதேசம், அரசியல், பெரியவர்களுக்கு என்று நிலவி வந்த அன்றைய பத்திரிகை மனோபாவத்தை அது புரிந்து கொண்டது. 'இளைஞர்களுக்கு ஒரு பத்திரிகை' என்று ஒரு கல்லூரி மாணவன் நிலையில் தன்னை வைத்துக்கொண்டு உலகை நோக்கியது. அழகிய வண்ணப் படங்களை அட்டைப் படங்களாகப் போட்டது. ஒரு கல்லூரி மாணவனின் தாபங்களை, தாகங்களைத் தீர்க்கும் சிறுகதைகளை வெளியிட்டது. இப்படி இளைஞர்களின் ரசனையையும் காலத்தையும் புரிந்து கொண்டது.

அதற்கு முன் ஓரிரு சிறுகதைகள்கூட எழுதித் தம் பெயரைப் பத்திரிகை உலகில் நிலை நிறுத்திக் கொள்ளாத திரு. எஸ்.ஏ.பி. அண்ணாமலை அவர்கள், ஒரு மகத்தான பத்திரிகையைத் தோற்றுவித்தார்.

ஒரு 'பிஸின'ஸைத் தோற்றுவித்தார். வெற்றி பெற்றார்.

அரசியலை எடுத்துக் கொள்ளுங்கள். கிழக்கு வங்காளம் 'பங்களா தேஷ்' ஆக—புதிய நாடாக உருவான கதையைக் கொஞ்சம் எண்ணிப் பாருங்கள்.

கிழக்கு வங்காள மக்கள் மொழியால், பழக்க வழக்கங்களால் வேறுபட்டவர்கள் என்பதை உணரத் தொடங்கினார்கள். அங்கே சுதந்திர இயக்கம் தோன்றியது. ராணுவ அதிகாரத்தை எதிர்த்துப் படைகள் இயங்க ஆரம்பித்தன.

இந்தச் சமயம் பார்த்து இந்தியா என்ன செய்தது? 'சரியான சமயம் இதுதான்' என்று இந்தியா துப்பாக்கியை நீட்டி, புதிய நாடு உருவாக உதவியது.

அகதிகளுக்கு உதவியதன் மூலம் உலக அனுதாபத்தைப் பெற்றது. ராணுவக் கொடுமைகளை உலகமறியப் பறைசாற்றியது. சரியான சமயத்தில் இந்தியப் படையை உள்ளே அனுப்பி, கிழக்கு வங்காளத்தை விடுவித்தது.

'காலம் அறிதல்' என்ற சொற்றொடருக்கு உதாரணமாக இதைத்தான் குறிப்பிட வேண்டும்.

சினிமா செல்வாக்கை அரசியலுக்கு எப்படிப் பயன்படுத்தலாம் என்பதை எம்.ஜி.ஆர். தமிழ் நாட்டில் உணர்த்தியிருந்தார்.

இந்திரா காங்கிரஸ் தலைவர்களின் பேச்சும் செய்கைகளும் ஆந்திர தேசத் தலைவர்களின் சுய மரியாதையைப் பாதித்திருந்தன. எல்லாவற்றுக்கும் முத்தாய்ப்பாக, ஆளும் அரசின் மீது பொதுமக்கள் மதிப்பையும் நம்பிக்கையையும் இழந்திருந்தார்கள்.

'அந்தச் சரியான காலம்' அறிந்து என்.டி.ராமராவ் அரசியலில் குதித்தார். ஒரு கட்சி அமைப்புக் கூட இல்லாமல் ஆந்திரத் தேர்தலில் வெற்றி பெற்ருர்; முதல்வரானுர்.

என்.டி.ராமராவ் கொக்கின் 'குத்து ஒக்க' செயல் பட்டார்.

தொழிலில் ஒரு திருப்பத்தை—லாபத்தை—உண்டு பண்ண எடுக்கும் முயற்சி எல்லாம் சரியான காலத்தை உணர்ந்து செயல்படுவதில்தான் இருக்கிறது. காலம் அறிக; இடம் அறிக; மாற்ருன் வலி அறிக; மக்கள் தேவை அறிக. எல்லாவற்றையும் இணைத்து முடிச்சுப் போட்டுச் செயலாற்றுவதில்தான் வெற்றி இருக்கிறது.

# 27

# காற்றுள்ள போதே தூற்றிக்கொள்

சந்தர்ப்பம் வந்து நம் கதவைத் தட்டும்போது நாம் தயாராக இருக்க வேண்டும்; கதவைத் திறக்க வேண்டும். இல்லாவிட்டால் அடுத்த முறை அதே சந்தர்ப்பம் வருவது அரிது.

சிலர் 'சரியான காலம்' வரும்போது, 'இன்னும் நல்ல சந்தர்ப்பம் வரும், காத்திருப்போம்' என்றோ, 'சற்றுத் தாமதித்து முடிவெடுக்கலாம்' என்றோ விஷயங்களை ஒத்திப் போடுகிறார்கள். அந்தத் தருணத்தை உபயோகிக்காதபோது மீண்டும் சக்திகள் அது போலக் கூம்பி வருவதில்லை. 'ஆறின கஞ்சி பழங்கஞ்சி' என்றாகிவிடுகிறது. சூட்டோடு செயல்பட நம் உற்சாகத்தைக் காரியம் முடியும்வரை போற்றிப் பாதுகாத்து வர வேண்டும்.

மதனகாமராஜன் கதையும், விக்கிரமாதித்தன் கதைகளும் திரைப்படங்களாக வெளிவந்த காலத்தில் திரு.ஏவி.மெய்யப்ப செட்டியார், 'நாம் இருவர்' என்ற ஒரு சமூகக் கதையை வெளியிட்டார். சினிமாவில் ஒரு திருப்பு முனை. அது 'கல்யாண பரிசு' மூலம் மனித உறவின் ஆசாபாசங்களைப் படம் பிடித்தார்

ஸ்ரீதர். ஒரு திருப்புமுனை. 'அரங்கேற்றம்', 'தண்ணீர்... தண்ணீர்...' மூலம் சமுதாயப் பிரச்னைகளை முன் வைத்தார் பாலசந்தர். மற்றோர் திருப்புமுனை. காலத்தை அறிவது, மக்கள் மனப்போக்கை அறிவது எந்தத் தொழிலுக்கும் எப்போதும் அவசியமானது.

''மகத்தான வெற்றி பெற்ற 'காந்தி' படத்தைப் பற்றி என்ன சொல்வீர்கள்?'' என்று நீங்கள் கேட்கக் கூடும்.

அங்கேதான் ஒரு பேருண்மை அடங்கிக் கிடக்கிறது. ஒரு சிலர் சூழ்நிலை, காலம், இடம் எல்லாம் தாண்டிக் கற்பனை செய்கிறார்கள். அவர்கள் சூழ்நிலையை, காலத்தை, இடத்தை உருவாக்குகிறார்கள். அவர்கள் தலைவர்கள். தீர்க்கதரிசனம் கொண்ட தலைவர்கள்.

ஐ. பி. எம். கம்ப்யூட்டரை நிறுவிய வாட்சன் அத்தகையதோர் தலைவர். உடனே படம் எடுத்துக் காட்டும் 'போலராய்டு' போட்டோ படக்கம்பெனியை நிறுவிய எட்வின் லாண்ட் அத்தகையதோர் தலைவர்.

தொழிலில் சிறக்க அத்தகைய தலைமைக் குணம் இருந்தால் சிறப்புத்தான்; ஆனால், அது அவசியம் என்பதில்லை. கால ஓட்டத்தைப் புரிந்து கொள்ளும் மனோபாவம் இருந்தால் போதும்.

இரண்டாவதாக:

மற்றும் சிலர் ஒரு தொழிலில் ஆர்வத்தாலோ அல்லது பிற காரணங்களாலோ ஒரு விஷயத்தில் ஈடுபட்டு ஊடாடிக் கொண்டிருக்கிறார்கள். திடீரென அந்தத் துறையில் வரும் சந்தர்ப்பத்தை உணர்கிறார்கள். அதிலேயே இருப்பதன் மூலம் அவர்கள் எடுக்கும்

செயல்கள் அவர்களுக்கே சாதாரண செயல்களாகப் படுகின்றன. அவர்கள் வெற்றி காண்கிறுர்கள். நினைவில் கொள்ளுங்கள். தொழில் ஆர்வம் சந்தர்ப் பங்களை உருவாக்குகிறது.

மூன்ருவதாக.

சில சமயம் சந்தர்ப்பங்கள் தாமே உருவாகின் றன. ஒரு விஷயத்தைப் பற்றி ஆர்வத்துடன், விட்டு விட்டு எண்ணிக் கொண்டிருக்கிறேம். அது பற்றிய எண்ணம் ஏக்கமாக மனத்தில் அரித்துக் கொண்டே இருக்கிறது. ''சரி போகட்டும், விட்டுத் தள்ளுவோம்!'' என்றெண்ணும்போது, நாம் விரும்பும் வீடு நம் கண்ணெதிரே விலைக்கு வருகிறது. நாம் விரும்பும் தொழிலில் இறங்க எல்லாம் ஏற்றதாக அமைகின் றன. நாம் விரும்பும் பணத்தைக் கடனுகக் கொடுக்க நாலு பேர் காத்துக் கொண்டிருக்கிறுர்கள்.

சந்தர்ப்பங்கள் வரும்போது அதை உணர்வது ஒரு திறன். சந்தர்ப்பங்களை விரும்பி மனத்தில் எதிர் பார்ப்பதன் மூலம் அவற்றை உண்டுபண்ணுவது மற்றோர் திறன். மனம் எப்படிச் செயல்படுகிறது; மனத்தை நாம் எப்படிச் செயல்படுத்தலாம் என்கிற நுட்பங்களை நாம் புரிந்துகொள்ள வேண்டும்.

'அதிர்ஷ்டத்தின் குறிகள்' (Luck factor) என்ற புத்தகத்தை ஒரு சமயம் படித்தேன். அது மேக்ஸ் கந்தர் (Max Gunther) எழுதியது. என்னுடைய அந்தப் புத்தகம் எங்கோ தவறிவிட்டது. அது பல ஆண்டு களுக்கு முன் வெளியான பழைய புத்தகம். அமெரிக் காவில் எல்லாப் புத்தகக் கடைகளிலும் கேட்டுப் பாாத்தேன், கிடைக்கவில்லை. ஆனல், அது என் நினைவில் நின்றுகொண்டே இருந்தது. 'கிடைக்

காதா...?' என்ற தாபம். 'பெற வேண்டும்' என்ற ஓர் ஏக்கம். ஆறு மாதம் கழித்து நான் கிளிவ்லாண்ட் விமான நிலையத்தின் புத்தகக் கடைக்குள்—சில நிமிஷ நேரம் இருந்ததால் நுழைந்தேன். என்ன கண்டேன் என்கிறீர்கள்? நான் விரும்பிய மேக்ஸ் கந்தரின் புத்தகத்தைத்தான்! நான் அடைந்த மகிழ்ச்சி அளவில்லாதது.

நான் புத்தகத்தைப் பெற்றதைவிட மனம் எப்படி நாம் விரும்பியதை நம் முன் நிறுத்துகிறது என்பதை எண்ணி எண்ணி வியந்தேன். இந்த ஒரு சம்பவம் என்றில்லை. எத்தனையோ சம்பவங்கள். வாழ்வின் திருப்புமுனைகள்.

உங்கள் வாழ்விலும் இத்தகைய சம்பவங்கள் எத்தனையோ நிகழ்ந்திருக்கும். பலரும் எண்ணுவது போல ஏதோ அதிசயமாக நேர்ந்த விஷயமல்ல இது. மனோதத்துவத்தில் 'எதிர்பார்க்கும் மனோபாவம்' (Expectancy) எப்படிச் சம்பவங்களை நிகழ்விக்கிறது என்று ஒரு ஆராய்ச்சிப் பிரிவே இருக்கிறது.

அவை மனத்தத்துவத்தின் அங்கீகாரம் பெறு கிறதோ இல்லையோ, எது உங்கள் வாழ்வில் பலன் தந்ததோ அதைக் கெட்டியாகப் பிடித்துக் கொள் ளுங்கள். அதை மீண்டும் மீண்டும் மனத்திரையில் நிகழவிட்டு அணு அணுவாக ரசியுங்கள். அதில் ஏதாவது 'முறை' இருக்கிறதா என்று அலசிப் பாருங் கள். அந்த முறையை மீண்டும் ஒரு சந்தர்ப்பம் வரும் போது உபயோகிக்க முடியுமா என்று யோசித்துப் பாருங்கள்.

மேனாட்டு மனோதத்துவம் ஒரு இள விஞ்ஞானம். ரசாயனத் துறையும் பௌதிகத் துறையும், விண்

வெளித் துறையும் வளர்ந்த அளவுக்கு இன்னும் வளர வில்லை. மனத்தின் சக்திகளையும் மனக் கட்டுப்பாடு களையும் அதிகம் உணர்ந்தவர்கள் நமது யோகிகள் தான். வாய்ப்புக் கிடைக்குமானல் யோக மார்க்கங் களைப் புரிந்து கொள்ளுங்கள்; பயிலுங்கள்.

'சந்தர்ப்பம் வருகிறது உங்கள் வாழ்வில்' என்று வைத்துக் கொள்ளுங்கள். காலம் கனிந்திருக்கிறது என்று கண்டுபிடிக்கிறீர்கள். அப்போது என்ன செய்ய வேண்டும்?

வேட்டையாடச் செல்கிருன் வேடன். விலங்கு தெரிகிறது. துப்பாக்கியை நீட்டிக் குறி பார்க்கிருன். ஆனல், துப்பாக்கியின் விசையை இழுத்தால்தான் குண்டு புறப்படும்.

பெரும்பாலானவர்கள் அங்கேதான் தயக்கம் காட்டுகிருர்கள். ஆயிரம் சமாதானம், சாக்குப் போக்குச் சொல்கிருர்கள், செயல்படுவதில்லை.

'காற்றுள்ள போதே தூற்றிக்கொள்' என்கிற பழமொழி இதைத்தான் கூறுகிறது, "தம்பீ! செயல் படு!" என்று காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்ளா விட்டால் என்ன ஆகும்...? முதலுக்கே மோசம் வந்து விடும். நாளை மழை பெய்து உங்கள் அறுவடை நெல் ஈரமாய்ப் போயிருக்கும்.

'தொழில் நிர்வாகம்' பற்றிச் சொல்லிக் கொடுக் கும் பேராசிரியரது வகுப்பில் உட்கார்ந்தால், அவர்

'தொழில் செய்ய—விற்பனை செய்ய, பொருள் வேண்டும். அதை வாங்கப் பணம்வேண்டும்; அதை விற்பனை செய்ய மனிதர்கள் வேண்டும். (மனிதர்கள், பொருள், பணம்-People,Product,Money) என்ற மூன்றும் தேவை என்று தொடங்குவார். பாட சம்பந்தமாகப் பார்க்கும்போது அது உண்மைதான்.

ஆனல், இவை எல்லாவற்றையும் உற்பத்தி செய்வது மனிதன்தான். மனிதனின் மனத்திட்பம் தான் என்பதை நாம் நினைவில் வைத்துக்கொண்டால் போதும்.

# 28

# செய்யும் தொழிலே தெய்வம்

இயற்கை அன்னை கஞ்சமனம் படைத்தவள் அல்ல. எல்லோருக்கும் எல்லாவற்றையும் வாரி வழங்கும் தன்மை படைத்தவள் அவள். இவ்வுலகில் வாழும் உயிர்களுக்காக இவ்வுலகம், இங்குள்ள பொருட்கள் அனைத்தும் படைக்கப்பட்டிருக்கின்றன. ஜோ ஆன் சேஸ் ஒரு சமயம் எழுதியது போல 'நீ வீடு கேட்கலாம், ஆனால் படகு கேட்கக் கூடாது!' என்று இயற்கை அன்னை சொல்வதில்லை. இயற்கை எந்த உச்சவரம்பையும் ஏற்படுத்துவதில்லை. வறுமையின் அனுபவத்திலே அடிபட்டுப்போயிருக்கும் நாம்தான் நம் வரம்பைக் கீழாக நிச்சயம் செய்து கொள்கிறோம்.

ஒன்றே ஒன்று. இயற்கை எப்படி தன் பொருட்களை வாரி வழங்குகிறதோ அதேபோல் நாமும் வாரி வழங்க, பிறருக்கு உதவ, பிறர் வாழ உதவியாயிருக்க வேண்டும். ஏனெனில் நாளை செத்துப்போகும் மனிதன் தன்னுடன்காலணா காசையும் எடுத்துப்போவதில்லை. 'காதற்ற ஊசியும் வாராதுகாண் கடைவழிக்கே' என்றார் பட்டினத்தார். காதில்லாத ஊசியை வைத்துக்

கொண்டு நாம் ஒன்றும் செய்ய முடியாது. அதுகூட நம்முடன் வராது என்று அறிவுறுத்துகிறார் பட்டினத்தார். இந்த அடிப்படைத் தர்மங்களை மனதில் தேக்கி வைத்துக்கொண்டு செயல்படும் போது நாம் தொட்டது துலங்கும். தொழிலில் பொய் சொல்ல வேண்டியதில்லை.யாரையும் ஏமாற்ற வேண்டியதில்லை. தொழிலில் தர்மம் இருக்கிறது; புனிதம் இருக்கிறது; தெய்வீகம் இருக்கிறது.

வாழ்க்கைக்கு, தொழிலுக்கு, சாதனைக்கு மன வியூகங்கள் தான் முக்கியம். அந்த மனவியூகங்கள் நமக்கு அத்துபடியாயிருக்க வேண்டும். ஆர்வம், லட்சியம், திட்டம், செயல் என்கிற புலனறிவு விஷயங்களை— கற்பனை, ஆழ்மன உணர்வு, எதிர்பார்க்கும் உள்ளம் என்கிற ஆழ்மன ஆக்கப்பகுதிகளுடன் இணைத்துச் செயல்படும்போது காரியங்கள் தாமாக நிகழ்கின்றன.

ஆகவே, நமது மனதின் இரு பகுதிகளான பகுத்தறியும் மனமும் ஆழ்மனமும் எப்படி இயங்குகின்றன, அவற்றை எப்படி உபயோகிக்கலாம் என்பதை நாம் தெரிந்துகொள்ளவேண்டும்.

எண்ணத்தை எப்படிச் செயல்படுத்துகிறார்கள் என்கிற முறையை அறிந்துகொண்டால் இதை நீங்கள் எந்த விதமான பிரச்னைக்கும், எந்த விதமான துறைக்கும் உபயோகிக்கலாம். புத்தர் ஓர் எண்ணத்தைச் செயல்படுத்தினார். காந்தி ஓர் எண்ணத்தைச் செயல்படுத்தினார். டாட்டாவும், பிர்லாவும், கார்னகி

யும், போர்டும் சில எண்ணங்களைச் செயல்படுத்தினார்கள்; செல்வந்தர்களானார்கள். அவர்களுடைய குண நலன்கள் என்ன? அவற்றை நாமும் நம் வாழ்வில் கடைப்பிடிக்க முடியுமா?

பல காலம் பல செல்வந்தர்களையும் பல தொழிலதிபர்களையும் பேட்டி கண்டு ஆராய்ந்த டாக்டர் சுருளி பிளாட்நிக் என்ற மனோதத்துவப் பேராசிரியர் எழுதுகிறார்:

1. இவர்கள் மனத்துக்குள் ஒரு பொறி இருக்கிறது. மனத்திலே ஒரு கோட்டை அமைப்பை உருவாக்கியிருக்கிறார்கள். அதில் எண்ணத்தைப் போட்டவுடன், பல படிகளையும், சந்து பொந்துகளையும் தாண்டிச் செல்லும் எலி, உணவை அடைவது போல அவர்கள் மனம் செயல்படுகிறது. அப்படி ஒரு வெற்றி வியூகம் அங்கே செயல்படுகிறது. பழைய வெற்றி அனுபவம் புதிய பிரச்னையையும் அதே பாதையில் இறக்கி வெற்றி தருகிறது. பழைய தோல்வி அனுபவம்—நினைவு—புதிய பிரச்னையையும் அதே தோல்விப் பாதையில் இறக்கிவிடுகிறது, பட்ட காலிலே படும் என்பதுபோல. ஆகவே நாம் ஏன் நம் வெற்றி அனுபவங்களை அதிகம் நினைத்துச் செயல்படக் கூடாது?

2. இவர்கள் எதையும் வெளியில் சொல்வதில்லை, விவாதிப்பதில்லை. விவாதித்தால் ஏதோ ஏணியில் ஏறும்போது கைப்பிடியை இழந்து விடுவது போல் எண்ணுகின்றனர். ரகசியம் இவர்களது முத்திரை.

3. எதை ஆரம்பித்தார்களோ அதிலேயே ஊடாடிக்கொண்டிருக்கிறார்கள். தடம் மாறுவதில்லை. அக்கரைப் பச்சை என்று ஓடுவதில்லை. மாறினால் அவர்கள் செய்து வந்த தொழில் சம்பந்தப்பட்ட மற்றொரு தொழிலில்தான் இறங்குகிறார்கள். தேங்காய் வியாபாரம் செய்பவர் மட்டை, நார், கயிறு, மிதியடி என்று அது சம்பந்தமான தொழிலில் இறங்குவதுபோல ஓர் எழுத்தாளர் சிறுகதை, நாடகம், சினிமா என்று இறங்குவதுபோல, அதாவது அவர்கள் தங்களுக்குத் தெரியாத தொழிலில் திடீரென்று இறங்கி ஆழம் பார்ப்பதில்லை. 'என்னிடம் திறமை இருக்கிறது. எந்தத் தொழிலிலும் வெற்றியடைவேன்' என்ற ஆணவம் அவர்களை ஆட்டுவிப்பதில்லை.

4. தொழில் செய்பவர்கள் அதிலேயே ஆழ்ந்து போகிறார்கள். ஆசையோடு செய்கிறார்கள். செய்வதில் திருப்தி காண்கிறார்கள். 'செய்யும் தொழிலே தெய்வம்' என்று ஒரு வழிபாட்டு உள்ளத்துடன் அதில் ஈடுபடுகிறார்கள்.

நமது ஊரில் எத்தனையோ கோயில்களும் எத்தனையோ அர்ச்சகர்களும் இருக்கிறார்கள். எனினும் நான் கண்ட அளவில் சென்னை காளிகாம்பாள் கோயில் அர்ச்சகர் திரு. சாம்பமூர்த்தி சிவாசாரியார் பூஜை செய்யும் போது தாமே ஒரு தவயோகிபோல் ஆகிவிடுகிறார். ஆகவே ஒரு சாதாரண அர்ச்சகர்போல் அவரை அணுகாது ஆண்டவனின் தொண்டர் என்ற தனி மரியாதையுடன் நாம் அவரை அணுகுகிறோம்.

ரசாயனத்துறைத் தொழிலில் இருக்கிறீர்களா? அப்படியென்றால் ரசாயனப் பொருட்களுடன் நீங்கள் ஏதோ மந்திர வித்தை செய்யும் ஆர்வத்துடன் ஈடு படுங்கள். ஹோட்டல் தொழில் வைத்திருக்கிறீர்களா? 'சுசிருசியில் உங்கள் பொருட்களை யாரும் மிஞ்சமுடியாது' என்ற பெருமையுடன், பொருளை வருவோர்க்குப் படையுங்கள். பத்திரிகைநடத்துகிறீர்களா?ஏதோ 'போனானுக்குப் போனான்; வந்தானுக்கு வந்தான்' என்றில்லாமல் பயன்தரும் விஷயங்களைச் சுவைக்கச் சுவைக்க அளியுங்கள், தொழில் செய்வது கடமை அல்ல. யாரும் நம்மை நிர்ப்பந்திப்பதில்லை தொழில் செய்ய. தொழிலை நாம் போற்றிப் பெருமைப்படுத்தும் போது நம் தொழில் ஓங்குகிறது. நாம் ஓங்குகிறோம். எல்லோரும் பணத்துக்குத்தான் பாடுபடுகிறோம். ஆனால் செய்யும் தொழிலை முழு ஆர்வத்துடன் செய்யும்போது பணத்தைப்பற்றி அதிகம் கவலைப்பட வேண்டியதில்லை. அது தானே வந்து கொண்டிருக்கும்.

5. ஓர் உயர்ந்த மனிதரை முன் மாதியாகக் கொள்ளுங்கள். அரசியலில் புக விரும்புபவர்கள் ஒரு தலைவனை, தொழிலில் புக விரும்புபவர்கள் ஒரு தொழிலதிபரை, இலக்கியத்தில் நுழைய விரும்புபவர்கள் ஒரு பெரிய இலக்கிய கர்த்தாவை முன்மாதிரியாகக் கொள்ளவேண்டும். அவர்களது வாழ்க்கை வரலாற்றைப் படித்து அவர்களது மனப்போக்குடன் ஒன்றிவிட முயல வேண்டும்.

நமது தைரியம், நமது உற்சாகம், நமது முன்னேற்றம்—ஒரு நண்பனது சிறு சொல்லிலிருந்து, ஆதரவிலிருந்து, உதவியிலிருந்து அவன் கொடுத்த

நம்பிக்கையிலிருந்து தொடங்கியிருக்கக்கூடும். 'அந்த நம்பிக்கை தந்தது நமது பெற்றோராயிருக்கலாம்; நமது ஆசிரியராக இருக்கலாம். சகஊழியராக இருக்கலாம். அவர்கள் கொடுத்த தைரியத்தை, ஊக்கத்தை, நம்பிக்கையை அடிக்கடி நினைவுக்குக் கொண்டு வாருங்கள். செல்லும் பாதை எளிதாக அமையும்.

இந்தக் குணநலன்களை நமதாக்கிக் கொள்வதில் கஷ்டம் ஏதும் இருப்பதாக எனக்குப் படவில்லை.

# 29

# சிந்தனையைச் செயலாக்கு

"நாம் விரும்பும் நாளைய தினத்தை உருவாக்க இன்று நாம் என்ன செய்ய வேண்டும்?'' என்று கேட்கிறார் அமெரிக்காவின் பிரபல பொருளாதார-தொழிற் பேராசிரியர் பீட்டர் டிரக்கர். தொழில் சம்பந்தமாக யோசனை சொல்ல ஒரு நாளைக்கு ஆயிரம் டாலர் வாங்குபவர் இவர்.

எல்லாவற்றையும் கேட்டுவிட்டு, உங்கள் பிரச்னையை நன்கு ஆராய்ந்துவிட்டு, 'இப்படிச் செய்து பாருங்கள்!' என்று யோசனை சொல்வார். பீட்டர் டிரக்கர் சொல்வது வெறும் யோசனைதான். ஆனால், அந்த கம்பெனிகள் அவர் சொல்லும் யோசனையைக் கண்ணே போல் வாங்கி, பரிசீலித்து, கிரகித்து, செயலாக மாற்றுகின்றன. அவர் கூறிய யோசனைகளைத் திட்டங்களாக நிறைவேற்றுகின்றன.

தொழில் நிர்வாகம் பற்றிய அவருடைய நூல்கள், வேத நூல்களாகத் தொழில் உலகில் பேசப்படுகின்றன; கையாளப்படுகின்றன. இப்படி எல்லா நூல்

களிலும் அவர் கூறுவது என்னவென்று நினைக்கிறீர்கள்? யோசனைகள் யோசனைகள்!

இந்தக் கட்டுரையைப் படிக்கிறீர்கள். இங்கே சொல்லப்படுவது என்ன? சில எண்ணங்கள்; சில விளக்கங்கள்; சில யோசனைகள். நீங்கள் இதிலுள்ள நல்ல யோசனைகளையெல்லாம் எடுத்துக்கொண்டு பயன்படக்கூடிய வழியில் உபயோகிக்கவில்லை என்றால், இந்தக் கட்டுரையைப் படிப்பதற்கும் வெறும் தாளைப் படிப்பதற்கும் எந்தவித வித்தியாசமும் இல்லை.

எண்ணங்களெல்லாம் மிக்க பயன் தருபவை, எப்போது?

நாம் அதிலேயே ஆழ்ந்து, அதை நமதாக்கிக் கொண்டு செயல்படும்போது. காரியம்-செயல்-ஓட்டம்-துடிப்பு.

அரேபியப் பழமொழி ஒன்று கூறுகிறது.

'தேங்கிக் கிடந்த தண்ணீர் நாற்றமெடுத்துவிடும்.

கூட்டைவிட்டுப் பறக்காத பருந்து பசியால் செத்துப்போகும்.

வில்லை விட்டுப் புறப்படாத அம்பு எதையும் செய்யாது.

பாலைவனப் பிரதேசங்களில் வாழும் அரேபிய மக்கள், தண்ணீருக்குக்கூடக் கஷ்டப்பட வேண்டும். ஆகவே, அவர்கள் செயல்புரிவதன் மேன்மையை—அவசியத்தை நன்கு உணர்ந்தவர்கள்.

நம்மிடையே பலர் என்ன செய்கிறோம்? செயல் புரியத் தூண்டும் புத்தகங்களைக்கூட—ஒருசிற்பத்தைப்

பார்த்து ரசிப்பதுபோல, ஒரு கவிதையின் ஓசை நயத்தை ரசிப்பதுபோலப் படித்து ரசிக்கிறோம். 'எழுது வதில் மன்னன்! நன்றாக எழுதி இருக்கிறார்!' என்று பாராட்டிவிட்டுப் போகிறோம்.

நமது ஊரில் கதாகாலட்சேபம், சினிமா என்று இப்படிப் பொழுதுபோக்குச் சாதனங்களிலேயே அதிகம் ஈடுபட்டுவிட்ட காரணத்தால், செயலைத் தூண்டும் படிப்பைக்கூட நாம் ரசிகனாக இருந்து பாராட்டக் கற்றுக்கொண்டுவிட்டோமோ என்று நான் யோசிப்பதுண்டு.

அறிவு என்பது வாழ்க்கைக்குப் பயன்பட-வாழ்க் கைக்கு இனிமையூட்ட. இவை இரண்டுக்கும் ஒரு நேர் விகிதம் இருக்கவேண்டும். இந்த விகிதம் நம் நாட்டில் தறிகெட்டுப் போய்விட்டதோ என்று நான் நினைப்ப துண்டு. இனிமை பற்றிய கருத்தில் செயலை மறந்த நிலை. வட்டி அதிகம் வரும் என்று முதலை இழந்த கதை!

படிப்பு ரசிப்பதற்கல்ல. அறிவைப் பயன்படுத்தி வாழ்வை மேம்படுத்தத்தான் அறிவு.

அருமையான எண்ணங்களை வைத்துக்கொண்டு காலங்காலமாகப் பலர் காத்திருக்கிறார்கள், கணவன் கிடைப்பான் என்று காத்து, கிழவியாகிப்போன கன்னி போல.

செயலின்மையைப் போல் வேறு இழிவில்லை.

'என்னை எப்படி வேண்டுமானாலும் திட்டு. ஆனால், சோம்பேறி என்று மட்டும் திட்டாதே!' என்ற வாக்கியம் நம்மைச் செயல்படுத்த உந்த வேண்டும்.

சோம்பேறி என்று பிறர் நம்மைக் கூறுவார்களானால், நாம் அதைப் பெரிய அவமானமாகக் கருதவேண்டும்.

''என்னிடம் அருமையான 'பிசினஸ் ஐடியா!' இருக்கிறது!''

''நான் விரும்பினேனானால் அந்த கம்பெனியைத் தோற்கடித்துக் காட்டுவேன்...''

—என்றெல்லாம் பேசுபவர்கள்-பேசிக்கொண்டே இருப்பவர்கள்—தங்களைத் தாங்களே ஏமாற்றிக் கொள்கிறார்கள். இவர்கள் கையாலாகாத இனத்தின் பிரதிநிதிகள். இவர்களை முன்னிட்டுத்தான், 'அரைக் காசு பணத்துக்கு அரை டஜன் ஐடியாக்கள் வாங்கலாம்!'என்றொரு பழமொழி மேனாடுகளில் உலவுகிறது.

'ஐடியாக்'கள்—எளிது.

செயலாக்குவதுதான் சிரமம்.

அதுதான் சாதனை.

எண்ணங்களையும் சாதனையையும் எது இணைக்கிறது?

செயல்.

ஒரு கதையைப் படிக்கும் ஒரு மனிதன் அதை நல்ல சினிமாவாகக் காண்கிறான். ஆனால், அதிலிருந்து என்னென்ன காரியங்கள் செய்து ஒரு திரைப்படத்தை உருவாக்குகிறான் என்று எண்ணிப் பாருங்கள். அவன் படக் காட்சிகளை ஒவ்வொரு 'பிரே'மாக எடுத்துத் தொகுக்கிறான். செயல்—தொடர்ந்த செயல்.

ஒரு ருசியுள்ள பாக்குத்தூளைப் போட்டு மெல்லுகிறீர்கள். திடீரென ஒரு ஐடியா! 'ஆகா! இதை ஊர்

பூராவும் விற்ருல் எப்படிப் போகும்?' என்ளுெரு தொழில் எண்ணம். அப்படித்தான்அசோகா பாக்குத் தூள் பிறந்தது. அதற்குப் பின்ஞல் தரமான பொருளே வாங்கி, வாசனே சேர்த்துப் பொட்டலங்கட்டி, விளம்பரம் செய்து, கடைகளில் கொடுத்து அது தொழிலாக மாற்றப்படுகிறது. அத்தனே செயல்களி லும்தான் அதன் வெற்றி அடங்கி இருக்கிறது. செயல் தான் வெற்றிக்கு வித்து.

ஆக்க சக்தி படைத்தவன் —

கல்லிலே சிலேயைக் காண்கிருன்;

கதையிலே சினிமாவைக் காண்கிருன்;

கைத்தறியின் வண்ணத்தில் வண்ண ஜாலங்களேக் காண்கிருன்.

ஆக்கசக்தியுடன் தொழிலார்வமும் கொண்டவன் என்ன செய்கிருன்?

கல்லிலே சிலேயைக் காண்பதுடன் நின்றுவிடுவ தில்லே. 'அடடா! ஒவ்வொரு வீட்டிலும் இத்தகைய தோர் அழகான சிலே இருக்குமாஞல் எவ்வளவு விற்பனே ஆகும்?' என்று எண்ணுகிருன். கைத்தறியின் வண்ணத்திலே ஓராயிரம் சேலே விற்பனேயைக் காண் கிருன். பாலுக்கு ஏங்கும் குழந்தையின் அழுகையில் பால்பண்ணேயைக் காண்கிருன். காய்ந்து கிடக்கும் தரிசு மண்ணில் காய்கறித் தோட்டத்தைக் காண் கிருன்.

அறிஞர்கள் என்று சொல்லிக் கொள்பவர்கள் பலர், தொழில் செய்பவர்களுக்கு-வியாபாரம் செய்ப

வர்களுக்குக் கற்பனை அதிகம் தேவையில்லை; இருப்ப தில்லை என்று எண்ணிக் கொண்டிருக்கிறார்கள். உண்மையிலேயே அவன்தான் கற்பனையின் ஆக்க சக்தியை அதிகம் உபயோகிக்கிறான்.

கற்பனையில் புதிய பொருளை—புதிய சந்தர்ப் பத்தைக் காண்பதோடல்லாமல், அதைத் தனக்கும் பிறர்க்கும் பயன்படுமாறு செயலாற்றுகிறான்; மாற்று கிறான்.

செயல்பட, தொழில் செய்ய— நல்ல துறைகளைத் தேர்ந்தெடுங்கள். வளரும் துறைகள்; வருமானம் அதிகமுள்ள துறைகள்; தொழில் நுட்பம் மிகுந்த துறைகள். இன்று கம்ப்யூட்டர், எலெக்ட்ரானிக்ஸ், உயிரணு மாற்றங்கள், மாற்று எரிபொருள் என்று பல்வேறு துறைகளில் புதிய கண்டுபிடிப்புக்கள் வெளி வந்த வண்ணமிருக்கின்றன. ஏராளமான வாய்ப்புக் கள் இருக்கின்றன.

இந்த விஞ்ஞான யுகத்தில் எங்கும் நமது தொழில் பாடப்படவேண்டும். அந்த நோக்கில் இன்று நாம் மற்ற நாட்டை வெற்றிகொள்ள முயல்வோம்.

# 30

# தொழில் வளர்ச்சிக்கு உழைத்திடுக!

சில ஆண்டுகளுக்கு முன் தொழில் செய்வது பற்றிய ஒரு கருத்தரங்கிற்குப் பணம் கொடுத்துச் சென்றேன். அங்கே மற்றுமோர் இந்தியத் தம்பதியைக் கண்டேன். அவர்களிடம் ''நீங்கள் என்ன செய்கிறீர்கள்'' என்றேன் ஆர்வமுடன்.

அந்தப் பெண்மணி கூறினர்,''இவர் என் கணவர்; டாக்டர். சுற்றியுள்ள மூன்று சிறு ஊர்களுக்குச் சென்று வைத்தியம் செய்கிறார். நான் ஒரு உணவு விடுதியை நிர்வகிக்கிறேன். அதற்குப் பக்கத்திலேயே பரிசுப் பொருட்கள் விற்கும் ஒரு கடையைத் திறந்திருக்கிறோம். இங்கு வந்ததன் நோக்கம்,விஸ்கான்சின் மாநிலத்தில் விதவிதமான பால்கட்டி (Cheese) நிறைய செய்கிறார்கள். இதை வெளிநாடுகளுக்கு வியாபாரம் செய்யலாமா என்ற நோக்கத்தில் இங்கு வந்தோம்!'' என்று.

''பரவாயில்லையே! துடிப்பாக இருக்கிறீர்களே?'' என்றேன்.

அதற்கு அவர் பதில் கூறினர்: ''நாங்கள் பஞ்சாபி லிருந்து வருகிறோம். பஞ்சாப் மக்கள் அனைவருமே முன்னேறும் துடிப்புள்ளவர்கள்!''

நம் தமிழ் மாநிலத்தைப்பற்றி அப்படிக் கூற இயலுமா என்ற சிந்தனையில் உடனே ஆழ்ந்து போனேன்.

''நம்மூரில் வாய்ப்பில்லை சார்!''

''நம்மை முன்னேற விடமாட்டார்கள்!''

''நீங்கள் ஒரு லட்சம் ரூபாய் எனக்குக் கடனுய்க் கொடுத்தால் நான் தொழில்செய்து காட்டுகிறேன்!''- இத்தகைய பரிதாபமான வார்த்தைகளைப் பஞ்சாபி யர்கள் கொட்டிக் கொண்டிருக்கவில்லை. பிறர் கையை எதிர்பார்க்கவில்லை. சூழ்நிலையைக் குற்றஞ்சாட்டிக் கொண்டிருக்கவில்லை. அவர்கள் செயல் வீரர்கள் (Action people).

பஞ்சாபியர்கள் மட்டுமில்லை; மராட்டிய மாநிலத் தார், குஜராத்தியர்கள், ஆந்திரக்காரரர்கள், ஏன், சின்னஞ்சிறு கேரள மாநிலத்தார் — இப்படி எல்லோருமே நம்மைவிட வேகமாக முன்னேறிக் கொண்டிருக்கிறார்கள்.

ஒரு நாடு முன்னேறுவது அந்நாட்டுத் தலைவனின் தீர்க்க தரிசனத்தைப் பொறுத்தது என்பது உண்மை தான். ஆனல், ஆழமாகப் பார்க்கும்போது அந் நாட்டில்வசிக்கும் மக்களின் தன்மையைப் பொறுத்தது முன்னேற்றம்; மக்களது குணதிசயங்களைப் பொறுத்தது.

துடிப்புக்கொண்டவனை-தொழிலார்வம் கொண்ட ஒரு பெண்ணையோ ஆணையோ — யாரும் தடுத்து

நிறுத்திவிட முடியாது. ஓர் எண்ணத்தின் காலம்வந்து விட்டால், ஒரு சேனைகூட அதைத் தடுத்து நிறுத்த முடியாது என்று கூறுவார்கள்.

தமிழர்கள் 'தன்மான' விழிப்பைப் பெற்றாய் விட்டது. புத்திசாலிகள் என்று பிறர் மெச்சியாகி விட்டது. தொழிலில்-பொருளாதாரத்தில்-முன்னேற வேண்டிய தருணம்-கருத்தைச் செலுத்தவேண்டிய நேரம் வந்து விட்டது.

செல்வம் வலிமை சேர்க்கும்; நாம் செல்வமுள்ள மாநிலமாக மாறும்போது, மற்ற மாநிலங்கள் அதிக மரியாதையுடன் அதிகப் பொறுமையுடன் நாம் சொல்வதைக் கேட்கும்.

தமிழ்நாடு பொருளாதார வலிமை பெறும்போது தான்—நமது திருவோடுகளை டெல்லிக்கு விமான மூலம் நாம் ஏற்றிச் செல்லாத நிலை வரும்போதுதான் நமது முதல்வரை ஒரு பிரதமருக்குச் சமமாக டெல்லி நடத்தும்.

நம்மை நாமே தட்டி எழுப்பவேண்டிய நேரம் இது. நம்மையும் நமது நண்பர்களையும் ஊக்குவிக்க வேண்டிய நேரம் இது. அறிஞர்களும் அதிகாரிகளும் பாங்க்கர்களும் தங்கள் வேலைக்கு மேல் சென்று, தொழில் செய்பவர்களுக்கு உதவவேண்டிய நேரம் இது. தமிழகம் ஒருமித்த பொருளாதார வளர்ச்சி பெறவேண்டிய காலம் இது.

பொருளாதார முன்னேற்றத்தை எப்படி ஊக்கப் படுத்தி வளர்க்கலாம் என்று ஹார்வர்டு பல்கலைக் கழகப் பேராசிரியர்கள் நெடுநாள் ஆராய்ந்தார்கள்.

அவர்கள், பிரபலமான சமுதாயவியல் - மனவியல் பேராசிரியர்கள். டேவிட் மெக்கிளல்லெண்ட் (David Mccleland) என்ற பெயர். அறிஞர் வட்டாரங்களில் கவனத்துக்குரிய பெயர். டேவிட் வின்டர் (David Winder என்பாருடன் அவர் நடத்திய ஆராய்ச்சியில் விளைந்த கண்டுபிடிப்பு இதுதான். தொழில் ஆர்வத் துக்கும் சாதனைக்கும் அதிக தொடர்பிருக்கிறது சாதிக்கும் மனோபாவம் கொண்டவர்களிடை நான்கு வகைக் குணநலன்கள் இருக்கின்றன. இந்த நான்கு வகைக் குணநலன்களையும் பிறருக்குச் சொல்லிக் கொடுத்து, தொழிலார்வம் கொண்ட தொழிலதிபர் களை உருவாக்கலாம்!'' என்றார்கள்.

அந்த நான்கு குணநலன்கள்.

1. தொழில் துடிப்புக்கொண்ட,தொழிலதிபர்கள் எடுத்துக்கொள்ளும் லட்சியம் எளிதானதுமல்ல; அதிக கஷ்டமானதுமல்ல. அது ஒரு சீரான — மிதமான — லட்சியம். வெற்றி பெறும் வாய்ப்பு அதிகம் கொண்ட லட்சியம்; ஓரளவே கஷ்டம்நிறைந்த காரியம். வெற்றி பெறும் வாய்ப்பு நிறைய இருப்பதனால் வெற்றி பெறுவது எளிதாகிறது இதன்மூலம் அவர்கள் பெறும் நிறைவும் மகிழ்ச்சியும் அவர்களை மேலும் மேலும் இத்தகைய காரியங்களைச் செய்யத் தூண்டுகிறது. செய்ய வேண்டிய தொழில் ரொம்ப சுலபமானால் அது பெரிய சாதனை ஆகாது. திருப்தி ஏற்படுவதில்லை. அதே போல, எடுத்துக் கொண்ட தொழில் மிகக் கஷ்டம் வாய்ந்ததாக இருக்குமானால் அது அடைய முடியாமல் கைக்கெட்டாமலே போய்விடும். அபாயம் உண்டு; ஏமாற்றம் ஏற்படும்.

இதை விளக்க ஒரு விளையாட்டை இந்தப் பேராசிரியர்கள் தேர்ந்தெடுத்தார்கள். அதன்படி, ஆட்டக்காரர் ஒவ்வொருவரிடமும் மூன்று ரப்பர் வளையங்களைக் கொடுத்து அங்கே நட்டிருந்த ஒரு குச்சிக்குள் இவ் வளையங்களைப் போடுமாறு கூறினார்கள். சிலர் வெகு அருகில் நின்று தூக்கி எறிந்தார்கள். சிலர் வெகு தொலைவில் நின்று கொண்டு போட முடியாமல் தோற்றார்கள். ஒரு சிலரோ அருகிலும் நிற்காமல், தொலைவிலும் நிற்காமல் ஒரு குறிப்பிட்ட தூரத்தில் நின்று ரப்பர் வளையத்தைப் போட்டார்கள். வளையம் உள்ளே விழுவது நிச்சயமில்லை; எனினும் அவர்கள் நின்ற தூரம் - வாய்ப்பு உள்ள தூரம். தொழிலதிபர்களுடைய மனோபாவம் இவர்களுடையதை ஒத்திருந்தது. அதாவது, வாய்ப்பு அதிகமுள்ள கஷ்டமும் சோதனையும் ஓரளவு உள்ள தொழில்களில்தான் தொழிலதிபர்கள் இறங்குகிறார்கள். நீங்கள் செய்யவிருக்கும் துறையை இத்துடன் ஒப்பிடுங்கள்.

2. தங்கள் காரியங்களின் வெற்றிக்குத் தாங்களே பொறுப்பேற்க விரும்புகிறார்கள் தொழிலதிபர்கள். விஷயங்கள் அவர்கள் கட்டுப்பாட்டுக்குள் இருப்பதை விரும்புகிறார்கள். கமிட்டி கூடி முடிவெடுப்பதில் அவர்களுக்கு நம்பிக்கை இல்லை. தங்களது திறமையிலும், அறிவிலும் முடிவெடுக்கும் தன்மையிலும் இவர்கள் கொண்டுள்ள அபார நம்பிக்கை, தங்கள் கட்டுப்பாட்டில்-பொறுப்பில்-காரியங்கள் நிகழ்வதை விரும்புகிறது. அதற்காகவே அவர்கள் சொந்தத் தொழிலைத் தேர்ந்தெடுக்கிறார்கள்.

3. தங்கள் செயலின் பலனைத் தங்கள் கண்முன் காண ஆசைப்படுகிறார்கள். ஒரு பையனிடம் சில மரச்

சட்டங்களைக் கொடுத்து ஒரு வீடு கட்டு என்று சொல்கிறோம். அவன் அடுக்கிக் கட்டுகிறான். அதே பையனை, 'உல்லாசப் பயணம்' என்று கட்டுரை எழுதச் சொல்கிறோம் என்று வைத்துக் கொள்ளுங்கள். அவனது கட்டுரை சிறப்பாக அமைவது நிச்சயமல்ல. அது பல விஷயங்களைப் பொறுத்திருக்கிறது. முன்னதில் 'வேலை-பலன்' என்ற நேரடித் தொடர்பு இருக்கிறது. பின்னதில்—வேலைக்கும் பலனுக்கும் தொடர்பு அழுத்தமாக இல்லை. மரச்சட்டம் வைத்து வீடு கட்டும் சிறுவன் போலத் தொழிலதிபர்கள் தங்கள் செயலின் பலனைக் காண விழைகிறார்கள். இந்த நிறைவு தரும் செயல் அவர்களைத் தொழிலில் ஈர்க்கிறது.

கஷ்டப்பட்டுப் பணம் சம்பாதிப்பது என்பது அவர்களது வாழ்வின் நோக்கமல்ல. பணத்தைத் தங்கள் திறமையின்—சாதனையின்—அளவுகோலாகக் கண்டு நிறைவு காண்கிறார்கள்.

4. தொழிலதிபர்கள், தொழிலில் இறங்குமுன் நன்கு ஆராய்ந்துவிட்டு அதில் இறங்குகிறார்கள். இறங்கியபின் அடுத்தடுத்து அதில் வரும் வாய்ப்புக்களைப் பயன்படுத்துவதில் கவனமாய் இருக்கிறார்கள். புதியன செய்யும் ஆர்வம், பல ஊர்களுக்குச் சென்று பார்க்கும் ஆசை, ஒரு வழி இல்லாவிட்டால் வேறு வழியில் காரியத்தை முன்னின்று முடிக்கும் திறன்—இவை எல்லாம் அவர்களிடம் தென்படுகின்றன.

# 31

# ஆர்வம் இருந்தால் எல்லாரும் தொழிலதிபராகலாம்

ஹார்வர்டு பல்கலைக்கழகப் பேராசிரியர்களது இந்த ஆராய்ச்சி பல காலம் பேசப்பட்டது; விவாதிக்கப்பட்டது. இன்னும் பேசப்படுகிறது; பயன்படுகிறது.

இந்த ஆராய்ச்சி பலன் தருமா, இதன் மூலம் தொழிலதிப குணங்களை உருவாக்கித் தொழிலதிபர்களை உருவாக்க முடியுமா என, இவர்கள் சோதனை மேற்கொண்ட இடம் இந்தியா—ஹைதராபாத்தில் தான்! நம் நாட்டில் இது இன்னும் நாடு பூராவும் பரப்பப்படவில்லை.

இதில் உள்ள இன்னொரு முக்கியமான விஷயத்தை நாம் கவனிக்க வேண்டும். "என்ன எதிர்பார்க்கிறோம்?" என்பதை முன்கூட்டியே சொல்லிவிட்டால், தொழிலதிபர்கள் அதைத் தெரிந்து கொண்டு சாதனையை எப்படி அதிகமாக்கலாம் என்று முயன்று வெற்றி பெறுகிறார்கள் என்பதுதான்.

இதன்படி பார்த்தால் ஓர் இளைஞனை ஒரு கட்டுரையைப் படிக்குமாறு சொல்வதைவிட, கேள்வி—பதில்

மூலம் ''என்ன எதிர்பார்க்கிறோம்?'' ''எது முக்கியம்?'' என்பதைத் தெளிவுபடுத்திவிட்டால் அது அவன் அதிக மார்க் பெற உதவுகிறது என்பதாகும். 'நோட்ஸ்'களையும் 'டியுடோரியல் காலேஜ்'களையும், 'கோனா'ரையும் குறை சொல்பவர்கள் கொஞ்சம் இவை பற்றிச் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

தொழிலார்வத்தை வளர்க்கும் படிப்பு (Entrepreneurial Studies) இன்று அமெரிக்காவில் கடந்த ஆறேழு ஆண்டுகளாகப் பல பல்கலைக்கழகங்களிலும் சொல்லிக் கொடுக்கப்படுகிறது. இதற்கு முன் ஓர் ஐம்பதாண்டு காலம் தொழில் நிர்வாகத்தைப் பற்றித்தான் சொல்லிக் கொடுத்து வந்தார்கள்.

தொழில் தொடங்குவதைப் பற்றியும், அதற்கு வேண்டிய குணநலன்கள் பற்றியும், திறமைகள் பற்றியும் இன்று பல்கலைக்கழகங்கள் பாடம் சொல்லிக் கொடுக்கின்றன.

சமீபத்தில் இங்கு வந்த அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரனிடம், தமிழ் நாட்டில் மாவட்டத்துக்கு மாவட்டம் தொழில் தொடங்குவது பற்றியும், தொழிலதிபரின் குணநலன்கள் பற்றியும் கருத்தரங்கு நடத்தி நம் இளைஞர்களின் 'பிறரிடம் வேலையை எதிர்பார்க்கும் மனோபாவத்தை' மாற்ற வேண்டும் என்றும் சொல்லிக் கொண்டிருந்தேன். ''செய்ய வேண்டிய காரியம். அவசியம் கவனிக்கிறேன். முதல்வரிடம் சொல்கிறேன்'' என்றார் அவர். பார்க்கலாம்.

அறிவை அறிவுக்காகவும், கலையைக் கலைக்காகவும் இனியும் நாம் பார்த்துக் கொண்டிராமல், அறிவை

வாழ்க்கைக்காகவும், நம் நன்மைக்காகவும், நாட்டு நன்மைக்காகவும் பார்க்க வேண்டும். பொறியியல் கல்லூரியிலும் விஞ்ஞானக் கல்லூரிகளிலும் எப்படி அந்த அறிவை உபயோகித்துத் தொழில் தொடங்கலாம் என்று நாம் சொல்லிக் கொடுக்காவிட்டால் நமது பொறியியற் கல்லூரிகளில் 'மிஷினிஸ்ட்'களையும் 'பிட்டர்'களையும், 'டெக்னீஷியன்'களையும்தான் உருவாக்கி வருவோம். 'மெத்த வளருது மேற்கே— அந்த மேன்மைக் கலைகள் தமிழினில் இல்லை' என்று அன்று பாடினார் பாரதி. இனியுமா அந்த அவச்சொல்?

தொழில் செய்வது எளிதல்லதான்.

நீங்கள் தொழில் செய்ய விரும்பினால், சில விஷயங்கள் பற்றி உடனடியாக முடிவெடுப்பது மட்டுமல்ல, நீங்கள் உடனடியாகக் காரியத்திலும் இறங்க வேண்டும். இருக்கும் தொழிலிலும் சூழ்நிலையிலும், தென்படும் வாய்ப்புக்களை உன்னிப்பாகப் பரிசீலிக்க வேண்டும்.

சமீபத்தில் சென்னை, கோடம்பாக்கத்திலிருந்து எனது வாசகர் ஒருவர் இனிய கடிதம் ஒன்றை எழுதி இருந்தார். பள்ளியிலே ஆசிரியராக இருக்கிறார் அவர். ஏதோ ஒரு வகையில் உடல் ஊனம். ஆனால், அது அவரைத் தடுத்து நிறுத்தவில்லை. நகரத்து காபிக் கடைகளுக்குத் தேங்காய் தேவைப்படுகிறது என்பதை உணர்ந்த அவர், குறைந்த விலையில் நல்ல தேங்காயை ஒழுங்காக விற்பனை செய்து வருவதாக எழுதி இருக்கிறார். இதில் நியாயமான லாபம் வருவதாகவும், சொந்த வீடு கட்டி இருப்பதாகவும், தனது மனைவியும் தன்னுடன் தொழிலில் ஈடுபட்டிருப்பதாகவும்,

தொழிலை விரிவுபடுத்த ஒரு லாரி வாங்கி இருப்பதாக வும் எழுதி இருக்கிறார். பூரித்துப் போனேன்!

அவர் ஓர் ஆசிரியராக இருந்துவிட்டுப் போயிருக் கலாம்; தன் உடல் ஊனத்தின்மீது பழியைப் போட்டுத் தன்னையே நொந்து கொண்டு பிறருக்குப் பாரமாக வாழ்க்கையை நடத்தி இருக்கலாம். ஆனால், பாருங்கள்...அவர் அத்துடன் நின்று விடவில்லை. தன்னம்பிக்கை, தைரியம், ஆர்வம், முயற்சி, செயல் என்று தன் வாழ்வைக் கோபுரமாக்கிக் கொண்டார் அவர்.

உடலில் ஊனம் இருப்பது குறையல்ல; அது தவிர்க்க முடியாதது. ஆனால், நமக்கு மனத்தில் ஊனம் ஏற்படக்கூடாது. அது அவரிடம் இல்லை.

ஹார்வர்டு பல்கலைக் கழகப் பேராசிரியர்கள் ஆராய்ந்து கண்ட குணநலன்களை நமது ஆசிரியர் படித்திருக்க வாய்ப்பில்லை. எனினும், தானாகவே அதை உணர்ந்து, அதே குணங்களை அவர் வாழ்ந்து காட்டுகிறார்.

ஹார்வர்டு பல்கலைக் கழகப் பேராசிரியர்கள், தங்கள் கண்டுபிடிப்புக்களைப் பல தொழில் நிறுவனங் களிலும் சென்று போதித்தார்கள். அதன் மூலம் அதிக வருமானம் பெற்றார்கள். அதன் பின் 'தொழில் ஆலோசனை' என்ற போர்டை மாட்டி ஒரு நல்ல வருமானமுள்ள தொழில் ஸ்தாபனத்தையும் உருவாக் கினார்கள்!

அறிவு, 'சொல்லிக் கொடுக்க மட்டும்தான் இருக் கிறது!' என்று நம்பும் நமது ஊர் ஆசிரியர்கள் கவனத்

திற்கு இதைவைக்கிறேன். டேவிட் மெக்கிளல்லெண்ட் ஒரு ஹார்வர்டு பேராசிரியராக மட்டும் இல்லாமல் அதற்கு மேலும் சென்று தொழிலதிபருக்கு உதாரண மாகத் திகழ்கிறார்.

நமது ஊரில், தான் செய்யும் தொழிலோடு நிற்காமல் அதற்கு மேலும் சென்று வெற்றி பெறுப வர்கள், சாதிப்பவர்கள், தொழில் செய்பவர்கள்— எத்தனையோ பேர் இருக்கிறார்கள். அவர்களைக் கவனி யுங்கள். அவர்களை முன்மாதிரியாக எடுத்துக்கொள் ளுங்கள்.

பங்களூர் ஹிந்துஸ்தான் எலெக்ட்ரானிக்ஸில் ஒருவர் கம்ப்யூட்டர் இன்ஜினீயராகப் போய்ச் சேர்ந் தார். ஆனால், எழுதும் ஆர்வம் அவரைக் கதை எழுதத் தூண்டியது. கதை எழுதினார், நாவல் எழுதி னார், புத்தகங்கள் போட்டார். இன்று அருமையான நாடகங்களை உருவாக்குகிறார். அவர் கதைகள் திரை யுலகில் பிரவேசிக்கின்றன. 'ஒரு தொழிலதிபரின் குணங்கள்தான் உங்களை உந்துகின்றன' என்றால், நண்பர் சுஜாதா —எழுத்தாளர் சுஜாதா—ஏற்றுக் கொள்ளத் தயங்கலாம். ஆனால், தொழில் துடிப்பும் ஆர்வமும் கொண்டவர்கள் எத்தனையோ துறை களுக்கு ஒளி சேர்க்கிறார்கள். நாடு வளம் பெறுகிறது.

தொழில் அதிபராக எது இவர்களை மாற்றுகிறது?

வாய்ப்பு அதிகம் இருக்கும் துறையில் இவர்கள் இறங்குகிறார்கள். சோதனைகள் இருக்கும் என்று தெரிந்தாலும் அந்த எண்ணம் அவர்களைப் பாதிப்ப தில்லை.

தங்கள் உலகைத் தங்கள் கட்டுப்பாட்டுக்குள் வைத்துக்கொள்ள ஆசைப்படுகிறார்கள்.

தங்கள் செயலின் பலனைத் தங்கள் கண் முன்னால் காண விழைகிறார்கள்.

தெளிவான திட்டம், புதுமை காணும் மனோ பாவம், காரியத்தை முடிக்கும் உறுதி இவர்களிடம் தென்படுகிறது.

# 32

# தொழிலில் வெற்றிபெறத் திட்டம் தீட்டுக!

**சா**ணக்கியம் அரசியலுக்கு மட்டுமே தேவைப் படும் ஒன்றல்ல; தொழிலுக்கும் தேவைப்படும் ஒன்று. தொழிலில் இதற்காகத் தனிப் பிரிவே இருக்கிறது. அதை, 'வியூகத் திட்ட அமைப்புக் குழு(Strategic Planning)' என்று அழைக்கிறார்கள். ஒவ்வொரு பெரிய நிறுவனத்திலும் இப்படி ஒரு பிரிவை நிரந்தரமாக வைத்திருக்கிறார்கள். திட்டம், வருங்காலம்—என்ற இரண்டும் தொழிலில் ஒரு தொடர் முயற்சி. இது அமெரிக்கத் தொழில் நிர்வாகத்தில் ஒரு புதிய—சமீபத்திய வளர்ச்சி.

'தொழில் வியூகம்' என்ற வார்த்தையை நன்கு கவனியுங்கள். மனத்தில் வாங்கிக் கொள்ளுங்கள்.

மற்றொரு நாட்டுடன் நாம் போரிடுகிறோம் என்று வைத்துக்கொள்ளுங்கள். நமது படைகளை எங்கெங்கு நிறுத்த வேண்டும், எந்தெந்த சமயத்தில் அவர்களைச் சுடச் சொல்ல வேண்டும் என்பதை நம் தளபதி தீர்மானிக்கிறார். போரின் வெற்றி ஆட்படை பலத்

தில் இல்லை; டாங்குகள், விமானங்கள்—எண்ணிக்கை யில் இல்லை. அவற்றை எல்லாம் எப்படி, எப்போது, எங்கு உபயோகிக்கிறார்கள் என்பதில்தான் வெற்றி இருக்கிறது. குறைந்த பலத்தை மிகுந்த பலன் தருமாறு உபயோகித்து வெற்றி பெறும் சாமர்த் தியத்தைத்தான், 'போர்த்திட்டம்' என்று கூறு கிறோம். அத்தகைய போர்த்திட்டம் தொழிலுக்கும் தேவைப்படுகிறது. அத்தகைய தளபதிகள்—சாணக் கியர்கள்—தொழிலுக்கும் தேவைப்படுகிறார்கள்.

அந்தத் தொழில் சாணக்கியர்களைச் சில சமயம் நாம் நிர்வாகி, மானேஜர் என்கிறோம்; சில சமயம் பொருளாளர், நிதியை நிர்வகிப்பவர்—என்கிறோம். சில சமயம் அவரைச்சட்ட ஆலோசகர் என்றபெயரில் அழைக்கிறோம். இவர்களும், தொழிலில் ஈடுபட்டுள்ள மற்றவர்களும் உபயோகிக்கும் வியூகங்களைப் பொறுத் துத்தான் தொழில் வெற்றி அமைகிறது.

திட்டம் என்பது என்ன?

இதுவரை நாம் செய்யாததை, இப்போது செய்ய முயலும் முயற்சி. அதுதான் திட்டம். நமது பணம், நேரம், உழைப்பு—இவை எல்லாம் வீணே விரயமாகா மல் ஒரு நல்ல பலனைத் தருவதற்கு நாம் அமைக்கும் வியூகம்தான் திட்டம்.

நமது ஊரில் ஐந்தாண்டுத் திட்டங்கள் இருக் கின்றன. அதே சமயம் தேர்தல் சமயத்தில் வோட்டுக் களைப் பெறச் சிந்தனையில்லாமல் அறிவிக்கப்படும் திட்டங்களும் உண்டு. இவர்களைப் போன்றவர்கள் ''திட்டம் என்ன பெரிய திட்டம்...? எல்லாம்மனதில் இருக்கிறது' என்று சமாதானம் கூறுவார்கள்.

மனத்தில் இருப்பது எண்ணங்கள்தான்; லட்சியங்கள்தான். ஆனால், அவை எழுதப்படும்போதுதான் அதை நம்மால் பல்வேறு கோணங்களிலிருந்து ஆராய முடிகிறது. பிறரிடம் காட்டி விவாதிக்க முடிகிறது. ஆகவே, திட்டங்களைத் தாளில் எழுதுங்கள்.

திட்டம் என்பதில் ஒரு கட்டுப்பாடு இருக்கிறது. நமது சக்தியைக் கட்டுப்படுத்தி, நம் லட்சியத்தில் அதை ஈடேற்றி உழைக்கச் செய்கிறது. நம் திட்டம், திட்டம் ஒரு தெளிவைத் தருகிறது. தெளிவு நாம் அடுத்து இறங்கவேண்டிய செயலை நமக்குக் காட்டுகிறது.

ஓர் அறுவைச் சிகிச்சைக்குப்போகும் மனிதனிடம் மருத்துவர், ''நாங்கள் இன்னின்னது செய்யப் போகிறோம் உங்களைக் குணமாக்க!'' என்று கூறித் தெளிவுபடுத்தும்போது அம்மனிதன் நிம்மதி பெறுவதுபோல, ''விஷயங்களைப் பற்றிய முன்னறிவு நமக்குத் தேவை. முன்னறிவும் நம் தொழிலைப் பற்றிய நமது மனோபாவமும்தான் வெற்றியை நிச்சயிக்கின்றன'' என்று பேராசிரியர்கள் கூறுகிறார்கள்.

தொழில் தொடங்கும்போதும், தொழிலை நடத்தும்போதும் நாம் முக்கியமாக மூன்று விஷயங்களைக் கவனிக்க வேண்டும் என்று ஜப்பானிய தொழில் அறிஞர் கெனிச்சி ஓமே கூறுகிறார்.

அவையாவன.

நாம் இருக்கும் நிலைமை.

சரியான காலத்தைத் தேர்ந்தெடுத்தல்.

நமது பக்கபலமான நம்மிடமிருக்கும் சொத்து, தொழில் நுட்ப அறிவு, இவற்றைப் பற்றிய தெளிவு.

தொழில் தொடங்க நமக்கு முதலாவதாகப் பணம்,தேவை. முதல் தேவை, 'மூளையே மூலதனம், என்று சிலர் கூறுவார்கள். சிலர் அப்படிச் செய்யக் கூடும். தங்கள் சாமர்த்தியத்தால், பிறர் பணத்தை உபயோகித்துப் பூஜ்யத்திலிருந்து தொடங்கி முன் னுக்கு வந்தவர்கள் உண்டு. அவர்கள் லட்சத்தில் ஒருவர். தொழிலில் வெற்றியடைபவர்கள், எங்கே பெரும்பாலான வாய்ப்பு இருக்கிறது என்றே பார்க் கிறார்கள். ஆகவே, நாமும் நடைமுறைக்கு ஏற்றாற் போல்—பணம் பெற எங்கே பெரும்பான்மை வாய்ப்பு என்று—பல விஷயங்களிலும் சிந்தித்துச் செயல்பட வேண்டும்.

தொழில் புரியும் எண்ணமுள்ளவர்கள்பலர் அதற் கென முன்கூட்டியே திட்டமிட்டுச் சேமித்து அந்தப் பணத்தை முதலீடு செய்கிறார்கள். அல்லது தெரிந்த உறவினர், நண்பர்களிடமிருந்து கடனாகப் பெற்றோ, நிறுவனத்தில் பங்கு கொடுத்தோ முதல் சேர்க்கிறார் கள். சிலரிடம் அசாதாரண தொழில் நுட்பத் திறமை இருக்கும்போதும், அவர்கள் தொழிலைப் பற்றிய ஒரு பூரண திட்டத்துடன் பாங்க்கர்களை அணுகும்போதும், பாங்க்கர்கள் தொழிலுக்கான பணத்தைக் கடனாகத் தர இசைகிறார்கள்.

எல்லாரையும் விடபாங்க்கில் கடன் பெறுவது தான்கடினமான காரியம். உங்கள் திறமை, நாணயம், நீங்கள் போட இருக்கும் முதல் உங்களது முன்

தொழில் அனுபவம், நீங்கள் விற்கப்போகும்பொருள், அதற்கிருக்கும் மார்க்கெட், உங்களது தொழில் நிர்வாகத் திறமை என்று எல்லாவற்றையும் அக்கு வேறு ஆணி வேருக அலசுவார்கள் பாங்க்குக் காரர்கள்.

அவர்களைக் குற்றம் சொல்ல முடியாது. ஏனெனில் பாங்க்கில் இருக்கும் பணம், நம்மைப்போல் ஏராளமான மனிதர்களின் சேமிப்புப்பணம்; பொதுப் பணம். பணம் போட்டவர்களுக்குப் பாங்க்கர்கள் 'ஜவாப்பு' சொல்லியாக வேண்டும். அடுத்து, பிறர் பணத்தை முதலாகப் போட்டுத் தொழில் செய்ய முன் வருபவனைப் பாங்க்கர்கள் அதிகம் நம்புவதில்லை. காரணம், அவனுக்குச் சொந்தக் 'கை நஷ்டம்' வருமோ என்ற அக்கறை அவ்வளவு இருக்காது என்பதுதான் இது நியாயமான சிந்தனை. ஏனெனில் தொழில் செய்வது நம் காலில் நாமே நிற்க நாம் எடுக்கும் முயற்சி; நம் விதியை நாமே நிர்ணயிக்கும் முயற்சி.

கெனிச்சி ஓமே, 'நாம் இருக்கும் நிலைமை' என்று எதைக் கூறுகிருர்?

நமது கையிருப்பென்ன? மாதாந்தர வருமான மென்ன? செலவுகள் எவ்வளவு? எவ்வளவு குறைந்த வருமானத்தில் குடும்பத்தை நடத்த முடியும்? தொழில்மூலம் வருமானத்தைப் பெறும்வரை, எவ் வளவு காலம் குடும்பச் செலவுக்கு நாம் நம்மைத் தயார் செய்துகொள்ள வேண்டும்—என்பன போன்ற விஷயங்களை நாம் தீரப் பரிசீலிக்க வேண்டும். நமது தெளிவான அனுமானத்தின்மீதுதான் நமது குடும்பத் தினரையும் சேர்த்து நாம் தொழிலில் பணயம் வைக்

கிறோம். இதை நாம் லேசாக எடுத்துக்கொண்டுவிட முடியாது.

ஒரு நிரந்தரமான தொழிலில் இருந்துகொண்டு கொஞ்சம் கொஞ்சமாக நமக்குப் பிடித்த தொழிலில் இறங்க முயலலாம். புதிய தொழிலில் நம்பிக்கைப் பிடிப்பு ஏற்பட்டதும் நமது பழைய தொழிலை விட்டு விடலாம்.

சில சமயம், சிலர் புதிய தொழில் ஒன்றைத் தொடங்கிவிட்டு வருமானத்திற்காக இரவு நேரங் களில் மற்றொரு புது பகுதி நேர வேலையில் ஈடுபடு கிறார்கள்.

தொழிலில் வெற்றி என்பது பாதிநேர ஈடுபாட் டால் விளையும் எளிதான விஷயமல்ல. நாம் நம் முழுக் கவனத்தையும் ஒருமுகப்படுத்தி, அதை ஜீவாதாரப் போராட்டமாக எண்ணி 24 மணி நேர சிந்தனையை யும் செலவழித்து ஈடுபடவேண்டிய விஷயம்.

நீங்கள் நாளை கட்டப்போகும் மாளிகை இன்று எழுதப்படும் தொழில்திட்டம் என்ற அமைப்பிலிருந்து தான் எழுகிறது.

# 33

# பொருள்தனைப் போற்றி வாழ்

சிலரிடம் சிறந்த விற்பனைத் திறன் இருக்கும். இவர்கள் எஸ்கிமோக்களிடம் சென்று குளிர்சாதனப் பெட்டியை விற்றுவிட்டு வந்துவிடுவார்கள்.

சிலரிடம் புதிய பொருளைக் கண்டுபிடிக்கும் கற்பனையும் விஞ்ஞான மனோபாவமும் இருக்கும். இவர்கள், தண்ணீரை எரிபொருளாக்கும் வழியைக் கண்டுபிடிப்பவர்களாய் இருப்பார்கள். தொழிலில் இறங்கும் இவர்கள் எல்லோருக்கும் மிக மிகத் தேவையானது பணத்தை எப்படி நிர்வாகம் செய்ய வேண்டும் என்ற அறிவுதான். அந்த ஒன்று இல்லாத போது எத்தனை பெரிய விற்பனையாளரானாலும் சரி, விஞ்ஞானக் கண்டுபிடிப்பாளரானாலும் சரி, அவர்கள் செய்யும் தொழில் படுத்துப் போகும்; ஓடாது.

நமக்குப் பண நிர்வாகத்தைப் பற்றிய ஒரு கட்டுப் பெட்டி மனோபாவம் வேண்டும். இருந்தாலும் இல்லாவிட்டாலும் துணைக்கு, ஆலோசனைக்குக் கணக்கு விவகாரங்களில் புத்திசாலியான ஒரு பொருளாளர் நமக்குத் தேவை.

பணத்தைப் போட்டு ஒரு தொழிலைத் தொடங்கினேமானல் வருமானம் என்ன, செலவு என்ன, நிகர லாபம் என்ன என்பதைக் கண்ணுங்கருத்துமாகக் கவனிக்க வேண்டும்.

'பண விஷயம்—எனக்கு ஒன்றும் தெரியாது!'' என்று பெருமைப்பட முடியாது. 'பண விஷயத்தை எல்லாம் நம்ம அக்கவுண்டண்ட்தான் பார்த்துக் கொள்கிருர்!' என்று பூரணமாகப் பிறர்மீது சார்ந்து நிற்க முடியாது.

பணம் ஒரு பவித்திரமான பொருள். அதைக் கஷ்டப்பட்டுச் சம்பாதிக்கிறேம். அதை முதலாக உபயோகித்து அதைப் பெருக்க-அதிகப்படுத்த முயல்கிறேம். அந்த முயற்சியில் அதைப்போய்க் கோட்டை விடமுடியுமா?

''யார் உங்களை எது வேண்டுமானுலும் கூறிக் கொள்ளட்டும். ஆனல், பண விஷயம் வரும்போது நீங்கள் சர்வ ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். கருராக இருப்பது நல்லது. 'பண விஷயத்தில் நீங்கள் கட்டுப்பெட்டி!' என்று பிறர் உங்களை ஏளனம் செய்தாலும் பரவாயில்லை. காரியத்தில் குறியாயிருங்கள்'' என்று தொழிலறிஞர்கள் ஆலோசனை கூறுகிருர்கள்.

தொழில் தொடங்குமுன் மற்றொரு விஷயத்தையும் நாம் கவனிக்க வேண்டும். பலரும் மிகுந்த உற்சாகத்தில், ஏராள நம்பிக்கையில் குறைந்த பணத்தை வைத்துக்கொண்டு பெரிய திட்டத்தில் இறங்குகிருர்கள். இப்படி இறங்குபவர்கள் 95 சதம் தோற்றுப் போகிருர்கள், வியாபாரத்தை மூடு

கிறார்கள். ஆகவே, 'சிறுகச் சிறுக கட்டிக்கொண்டு போங்கள்' என்று அறிவுரை கூறுகிறார்கள்.

தொழில்கள் ஏன் தோற்றுப் போகின்றன, ஏன் மூடப்படுகின்றன என்று நடத்திய ஆராய்ச்சியில் தெரிய வந்த விஷயங்கள்:

முதலாவது : தொழில் நிர்வாக அறிவின்மை.

இரண்டாவது. போதுமான மூலதனத்துடன் தொழிலைத் தொடங்காமை.

தொழில் என்று தொடங்கும்போது, நம் கையில் ஒரு திட்டமும்இருக்கும்போது, நாம், ''ஒரு ஆறு மாத காலத்தில் தொழில் சூடு பிடித்துவிடும். வருமானம் வரத் தொடங்கும்!'' என்று எதிர்பார்க்கும்போது, எத்தனையோ காரியங்கள் நிகழலாம். விற்பனை படுத்து விடலாம். பொருளின் தரத்தை உங்களால் நிர்வகிக்க முடியாமல் போக நேரிடலாம். திடீரென்று சக தொழிலாளிகள் கூட்டமாக வெளியேறலாம்.

ஆகவே, தொழில் ஆலோசகர்கள் கூறுகிறார்கள், ''நீங்கள் போடும் திட்டத்திற்கு மேல் ஒரு இருபதி லிருந்து நாற்பது சதம் உபரிப்பணம் கொடுக்க இயல வில்லை என்றால் தொழிலில் இறங்குவதைப் பற்றி மறுபடியும் யோசியுங்கள்!'' என்று.

எனது நண்பர் தொழிலில் ஆறு மாதத்தில் பிடிப்பேற்படும் என்று நம்பி இறங்கினர். முதல் விற்பனை ஒன்றரை ஆண்டு கழித்துத்தான் ஆயிற்று.

ராஜபாளையத்து நண்பர் ஒருவரது தொழில், முதல் மூன்று வருஷம் நஷ்டத்தில் ஓடிக்கொண்

டிருந்தது. நல்ல வேளை, அவர்கள் கையில் பண மிருந்தது; அவர்களால் தாக்குப் பிடிக்க முடிந்தது.

திட்டமிடும்போதே பணத்தைப் பற்றி முன் யோசனையுடன் முன்னேற்பாடு செய்துகொள்வது நல்லது. தொழில் தொடங்கியபின், பாதி வழியில் போய்ப் பணத்துக்காக அலைந்தீர்களானால் காலங் கடந்த நிலையாக ஆகிவிடும். பணத்தை உடனடியாக நம்மால் திரட்ட முடியாதபோது நமக்குத் திகில் ஏற் படும், பயம் ஏற்படும், நாணயம் போய்விடும். 'எப் படி இன்னார் முகத்தில் விழிப்பேன்!! என்று தற்கொலை செய்துகொள்ளும் அளவுக்குக்கூடச் சிலர் போய்விடு வார்கள். போதுமான பணம் இல்லாது நடத்தும் தொழிலைப்பற்றி அங்கே சம்பளம் வாங்கும் தொழிலாளிகூடத் தாழ்வாக மதிப்பான்; பேசுவான்.

பண விஷயம் என்று வரும்போது, வெறும் உற்சா கத்தை வைத்துக்கொண்டு முழம் போடாதீர்கள் அல்லது 'எல்லாம் சரியாகப் போவிடும்!' என்று; ஆசையால் நிகழ் நிலைமையை மறக்க, அல்லது மறைக்க முயலாதீர்கள். பணம் ஒரு கத்தி; அதைச் சர்வ ஜாக்கிரதையாகக் கையாள வேண்டும். அலட் சியமாக உபயோகப்படுத்தினுல் காயம்தான் ஏற்படும்.

ஒரு நிறுவனத்தின் மிகப் பெரிய பொறுப்பு அதன் நிதி நிர்வாகத்தில்தான் இருக்கிறது. அதை அனு சரித்து, அதற்கேற்பத்தான் நாம் ஆட்களை அதிகப் படுத்த முடியும்; அல்லது புதிய பொருளை உற்பத்தி செய்ய முடியும்.

பணம் என்று வரும்போது நாம் மேக்ஸ்கந்தர் கூறிய பொன்மொழிகளை நினைவு வைத்துக்கொள்வது

நல்லது. 'செல்வந்தரானவர்கள் எல்லாம், எதிலும் சிறிது அவநம்பிக்கையுடன் செயல்படுகிறுர்கள்' என்று எழுதுகிறுர். ஒரு பெரிய தொழிலதிபரைப் பேட்டி கண்டபோது அவர் கூறினுராம், "ஒரு பெரிய வியா பாரத்தைச் சாமர்த்தியமாக முடித்தேன் என்ரு பாராட்டுகிறீர்கள்? நான் போட்டிருக்கும் சட்டை யுடன் வீடு போய்ச் சேர்ந்தால் போதும் என்று எண்ணிக் கொண்டிருக்கிறேன்!" என்று.

அந்த மனுேபாவம் நல்லது.

பலர் வாழ்வில் அது வெற்றியைக் கொடுத்திருக் கிறதே!

அடுத்ததாக, நம்மிடம் பணம் இருக்கிறது; தொழில் தொடங்கப் போகிறேம் என்ற நிலேமையை ஊர் அறியும்போது, சமுதாயத்தின் பல்வேறு மக்களே நீங்கள் சந்திப்பீர்கள். வாய்ஜாலக்காரரர்கள், புரட் டர்கள், சரசமாடுபவர்கள், தளுக்காகப் பேசுபவர்கள் என்று.

நமது வழித்தடத்தை மாற்றி நம்மைப் பள்ளத் தில் இறக்கிவிட்டுப் போய்விடுவார்கள் இவர்கள். பணம், புகழ், செல்வாக்கு என்று எங்கெல்லாம் இருக் கிறதோ அங்கெல்லாம் புல்லுருவிகள் மாதிரி இவர் கள் தோன்றுவார்கள்.

அமெரிக்காவில் டாக்டர்களுக்கு நல்ல வருமானம் உண்டு.ஆனுல், அவர்களுக்குத் தாங்கள் சம்பாதிக்கும் பணத்தை எங்குப் போட்டால் நல்ல பலன் தரும் என்பதை எல்லாம் சிந்திக்க அவகாசம் இருப்பதில்லே. ஆகவே, வைரம் விற்பவரிலிருந்து நிலம் விற்பவர்கள்

வரை இவர்களை ஏமாற்றுவதே ஒரு தொழிலாகக் கொண்டுள்ளனர். அமெரிக்காவில் ஓர் இந்தியர் இப்படித்தான் 'பாங்க் திறக்கிறேன்' என்று சொல்லி நிறைய பணத்தை வாங்கிப் பல பிரபலஸ்தர்களை ஏமாற்றி விட்டார். அவரது பூர்வாசிரமத்தை விசாரித்தபோது, ஒரு நல்ல குடும்பத்தில் மனைவியாக இருந்து வந்த இளம் பெண்ணை டெலிவிஷனில் பெரிய புள்ளியாக்கி விடுகிறேன் என்று சொல்லித் தன்னுடன் அழைத்து வந்து விட்டார் அந்த மனிதர் என்று தெரிந்தது.

பணத்துக்காக எதையும் செய்வதையும் சிலர் தொழிலாகக்கொண்டிருப்பதால் சமூகம் சீர்கேடடைகிறது. ஆகவேதான், நம் பணத்தைப் போட்டுத் தொழிலைத் தொடங்கும் போது, மனிதர்களிடமிருந்தோ சம்பவங்களிடமிருந்தோ பணத்தைச் சர்வஜாக்கிரதையாக நாம் காத்து நிற்க வேண்டும்.

# 34

## நல்ல தொழில் திட்டம் வேண்டும்

ஒரு தொழிலதிபர் தனது தொழில் திட்டத்தை பாங்க்கரிடம் காட்டி விளக்கி விவாதித்துக்கொண்டிருந்தார். முடிவில் பாங்க்கர் கூறினர். ''நாங்கள் இது போன்ற தொழிலுக்கெல்லாம் பணம் கொடுப்பதில்லை!''

தொழிலதிபருக்குக் கோபம் வந்தது.

''என்ன ஐயா பாங்க் நடத்துகிறீர்கள்? இதுவா நீங்கள் தொழிலுக்கு உதவும் லட்சணம்? நானே தொழில் செய்து இதை வெற்றிகரமாகச் செய்து காட்டுகிறேனு, இல்லையா என்று பாருங்கள்!'' என்று சொல்லிவிட்டு வெளியேறினர்.

நாம் எடுத்துக் கொண்டு போகும் திட்டம் ஏற்புடைத்தாக இல்லாமல் போனுல், ''எங்கே குறை? நீங்கள் என்ன எதிர்பார்க்கிறீர்கள்?'' என்று நாம் தான் கேட்டு நிவர்த்திக்க வேண்டும். மாருக, பாங்க்கர் மீது கோபிப்பது நியாயமல்ல.

பாங்க்கர்கள் பணத்தை வியாபாரம் செய்பவர்கள். அதைக் குறைந்த வட்டிக்கு வாங்கி அதிக வட்டிக்கு விற்று அதில் லாபம் சம்பாதித்து பாங்க்கை

நடத்துகிறார்கள். வட்டி வரும் என்று எண்ணி அவர்கள் முதலுக்கே மோசமான காரியத்திற்கு இசைவு கொடுக்க முடியாது. பாங்க்கர்கள் வைத்திருப்பது சேமிப்பாளர்களின் பணம். அதன் தர்மகர்த்தா அவர்கள். சேமிப்பாளர்களது நம்பிக்கையை அவர்கள் எந்தக் காரணத்தினாலும் இழக்க முடியாது. இதை நாம் உணரவேண்டும்.

பணம் என்று வரும்போது வீண் சவால்களும் வாய்ச் சவடால்களும் நன்மை தராது. இருக்கும் நிலவரத்தை நாம் திரிபின்றிப் புரிந்து கொள்ள முயல வேண்டும். 'செய்து காட்டுகிறேன்!' என்ற ஆணவமோ வீண் பெருமையோ குறுக்கிட நாம் அனுமதிக்கக் கூடாது. 'யாரும் பணத்தை இனமாகத் தருவதில்லை' என்ற அடிப்படைப் பொருளாதாரத்தை நாம் நன்கு புரிந்துகொள்ள வேண்டும். தன்னிடமில்லாத பணத்தை அரசியல்வாதி மட்டும்தான் வாரி வழங்க முன் வருவான். அது வேறு விஷயம்.

நம்மிடம் சொந்தப் பணமோ, அசாதாரணத் திறமையோ, நல்ல முன் அனுபவமோ அல்லது ஏதாவது ஒரு புதிய பொருளோ, கருத்தோ இருந்தாலொழிய பாங்க்கர்கள் எளிதில் திருப்தியடைவதில்லை. நியாயமான காரியம்.

அதேபோல, தொழிலதிபர் மற்றொரு குணத்தையும் கவனிக்க வேண்டும். பண விஷயத்தில் தொழில் தொடங்கும்போதோ அல்லது நடத்தும்போதோ எல்லாம் தனக்கே வரவேண்டும் என்றோ, வியாபாரத்தில் கடைசி பைசா லாபம்வரை தான் பெறவேண்டும் என்று எண்ணுவதோ சரியல்ல.

எண்ணெய்க்கிணறு தோண்டும் எனது அமெரிக்க நண்பர் பெரிய பணக்காரர். ஒரு நல்ல இடத்தில் எண்ணெய் தோண்டும் உரிமை அவருக்குக் கிடைத்தது. அருகருகே எல்லாம் நிறைய எண்ணெய் எடுத்துக் கொண்டிருந்தார்கள். வழக்கமாக எண்ணெய்க் கிணறு தோண்டுபவர்கள் பிறரைப் பங்குதாரர்களாகச் சேர்த்துக் கொள்வார்கள். தோண்டுவதற்காகும் எல்லாச் செலவையும்—நூறு சதவீத செலவையும்—பிறரிடமிருந்து பெறுவார்கள். இவர்கள் முன்னின்று செய்தவற்காக வருமானத்தில் 25 சதவீதத்தை எடுத்துக்கொள்வார்கள்.

கவனியுங்கள். இவர்கள் சொந்தப் பணம் கொஞ்சங்கூடப் போடாமல் (தோண்டும் நில உரிமைக்குச் செலவழித்ததைத் தவிர) பிறர் பணத்தை உபயோகித்துத் தோண்டுகிறார்கள். எண்ணெய் இருந்தால் இவர்களுக்குக் கால் பங்கு அதில் கிடைக்கிறது.

பூமியில் எண்ணெய்இருக்கும் என்பது தெரிந்ததும் எனது அமெரிக்க நண்பர் யாரையும் பங்கு சேர்க்காமல் எல்லா லாபமும் தனக்கே வரும் என்று நம்பி பாங்க்கில் கடன் வாங்கித் தோண்டினார். என்ன ஆயிற்று? எதிர்பாராத விதமாக எண்ணெய்க்காகத் தோண்டிய இடங்களில் எல்லாம் மண் சரிவு ஏற்பட்டு அதிகப்பணம் செலவாகியது. முடிவில் எண்ணெய் கொஞ்சம்தான் கசிந்தது. கடைசியில், கொடுத்த பணத்துக்காக எல்லா எண்ணெய்க் கிணறுகளின் உரிமையும் பாங்க்கிற்குப் போய்ச் சேர்ந்தது. அவர் திவாலானார்.

'பேராசைப்படக் கூடாது!' என்பதுதான் நீதி.

''என்ன இது, ஆரம்பப் பள்ளியில் சொல்லிக் கொடுக்கும் சின்ன விஷயமல்லவா 'பேராசை பெரு நஷ்டம்!'' என்று நீங்கள் எண்ணக்கூடும். ஆனால்,இந்த நீதிகளெல்லாம் நம்முடன் வாழ்நாள் பூராவும் வருபவை. ஆகவே, மிகக் கவனமாயிருங்கள். முதலில் சட்டை பத்திரமாக வருகிறதா என்று பார்த்துக் கொள்ளுங்கள், அடுத்தது, எந்த லாபமும் லாபம் தான் என்ற மனப்போக்கைக் கொள்ளுங்கள். கடைசிப்பைசா லாபத்துக்காகக் காத்திருக்காதீர்கள்.

பணத்தைக் கடன் கொடுப்பவர்களும் சரி, பாங்க் கர்களும் சரி, தொழிலிலிருந்து அவனால் பணத்தைத் திருப்பித் தர முடியுமா என்றுதான் பார்ப்பார்கள். ஆகவே, நாம் தொடங்கும் தொழிலையும், நம் திறமை யையும், மார்க்கெட் நிலவரத்தையும் அக்கு வேறு ஆணி வேருக அலசத்தான் அலசுவார்கள்.

சில சமயம் அடமானம் இருக்கிறதா என்று கேட்பார்கள். ஒரு வேளை நஷ்டம் வந்தால் ஏதாவது முதலுக்கு ஒப்பீடு செய்ய முடியுமா என்று பார்ப்பார் கள். மற்றபடி அடமானத்தை விற்று அதைத் தொழி லாகக் கொண்டிருப்பவர்களல்ல பாங்க்கர்கள். அப்ப டிச் செய்பவர்கள் ஈட்டிக்காரர்கள். நீங்கள் அவரிடம் போய்த்தான் பணம் பெற்றுத் தொழில் செய்யப் போகிறீர்கள் என்றால், அந்தத் தொழிலைச் செய்யாம லிருப்பதே நல்லது.

அதில் நீங்கள் விற்கவிருக்கும் பொருள் எப்படி மாறுபட்டது, சிறந்தது என்று விவரியுங்கள். போட்டி

யிலிருந்து எப்படிக் காப்பது என்பதை விவாதியுங்கள். எங்கே, யாருக்கு விற்பீர்கள், கம்பெனியின் சரித்திரம், கம்பெனியின் வளர்ச்சி வேகம் என்ன என்று யோசியுங்கள். இதே பொருளை உற்பத்தி செய்யும் ஏனையோர் எவ்வளவு சதவிகிதம் மார்க்கெட்டைப் பிடித்திருக்கிறார்கள், விற்கப்படும் பொருளைப் பொறுத்தவரை நாட்டு நிலவரம் எப்படி என்பதைச் சிந்தியுங்கள்.

உங்களது ஐந்தாண்டுத் திட்டமென்ன? அரசாங்கம், மக்கள் தொகை என்பனவெல்லாம் உங்கள் தொழிலை எப்படிப் பாதிக்கும்? விற்பனைச் செலவுகள் என்ன? மற்றைய செலவுகள் என்னென்ன?

புதிய பொருட்களை உற்பத்தி செய்து வளர்ச்சி வேகத்திற்கு ஈடுகொடுக்க என்ன திட்டம் வைத்திருக்கிறீர்கள்?

இதற்கெல்லாம் பதிலளித்து உங்களுக்காகவும் உங்களை நம்பிப் பணம் கொடுத்தோருக்காகவும் ஒரு நல்ல தொழில் திட்டம் தயார் செய்யுங்கள். அதை அனுபவஸ்தர்களுடனும் பாங்க்கர்களுடனும் விவாதியுங்கள்.

சினிமாத்தொழிலிலும் மற்றும் சில தொழிலிலும் சுமார் 36 சதவீதம் என்று வட்டி வாங்கும் பணக்காரர்கள் சென்னையிலும் பல்வேறு நகரங்களிலும் இருக்கிறார்கள். அவர்களிருக்கும் திக்கில் தலைவைத்துப் படுக்காதீர்கள்.

ஏனெனில், எந்தத் தொழிலிலும் லாபம் வருவதில் ஓர் அளவு இருக்கிறது. இப்படி வட்டி கொடுத்து

முதல் பெற்று எந்தத் தொழிலும் ஜீவிக்க முடியாது. இயற்கைக்கு எதிரான கணக்கில் நாம் வென்றுவிட லாம் என்று நம்பாதீர்கள்.

மூன்று விதமாக நாம் மூலதனம் பெறலாம்.

நமது சேமிப்பு; நமது உடைமை; நமது பணம்.

உறவினர், நண்பர்கள், பாங்க் என்று கடன் வாங்குதல்.

நிறுவப் போகும் கம்பெனியில் பங்கு தந்து மூல தனத்தை எழுப்புதல்.

எந்த விதத்தில் பணத்தை எழுப்பினாலும் சரி, நமது வெற்றிக்கு ஒரு நல்ல தொழில் திட்டம் தேவை. அதைக் கவனத்தோடு எழுதிப் பாருங்கள்.

## 35

# முயன்றால் முடியாதது ஒன்றில்லை !

சிந்தனையில் நீங்கள் நெடும்பயணம் வந்துள்ளீர்கள். தனி மனிதன் முன்னேறுவதும், ஒரு நாடு முன்னேறுவதும் அவர்கள் கொண்டுள்ள எண்ணங்களினால்தான். ஒரு லட்சியம், ஒரு திட்டம், ஒரு மன உறுதி, நம் லட்சியத்தோடு ஒத்துழைக்கும் ஒரு நிர்வாகக் கூட்டம்—இவையெல்லாம் இருக்கும்போது முன்போ, பின்போ அந்த லட்சியம் கை கூடுகிறது. சொந்தத் தொழிலானாலும் சரி, நாட்டு விடுதலையானாலும் சரி—எல்லாவற்றுக்கும் இது பொருந்தும்.

வசதிகள் நிறைந்த ஒரு வாழ்க்கை வாழ நமக்கு உரிமை இருக்கிறது. தன் காலிலேயே நிற்கும் முயற்சியில் ஒரு பெருமிதம் இருக்கிறது; நமது சாதனை நம் வாழ்வில் ஒரு வெற்றி முத்திரையைக் குத்துகிறது.

அதே சமயம், இது எல்லோருக்கும் ஏற்றதென்று கூற முடியாது. நம்மில் எல்லோரிடமும் அந்தத் திறமை இருக்கிறது என்பது மட்டும் மறுக்க முடியாத உண்மை. ஏனெனில், தொழில் தொடங்குபவர்கள் ஒரு வகையில் முன்னோடிகள். சில விதங்களில் தலைவர்

களின் குணங்கள் இவர்களுக்குண்டு. அதே சமயம், தனித்து நிற்கும் சுதந்திர மனப்பான்மை கொண்டவர்கள் இவர்கள். பல சமயம் விஷயங்களைச் சவாலாக எடுத்துக் கொள்பவர்கள் இவர்கள்.

ஆகவே, நாம் தொழிலில் இறங்க விரும்பினால், அத்தகைய குணங்களை வளர்க்க முயலவேண்டும்· தொழில் அறிவை, பயிற்சி மூலம் பெறலாம். பல்கலைக் கழகப் பாடப் புத்தகங்கள் மூலம் பெறலாம். ஊர் உலக ஞானத்தின் மூலம் கிரகித்துக் கொள்ளலாம்.

வாழ்வில் நம்மை நாம்தான் எடை போட முடியும். எத்தகைய வாழ்க்கை ஓட்டத்தை மேற்கொள்ள விரும்புகிறோம். எத்தகைய உழைப்பு, தியாகம், நேரம், சிந்தனை, பணம் இவற்றை ஈடாக வைக்கப் போகிறோம் என்பதை நாம்தான் தீர்மானிக்க வேண்டும். நம்மில் எது முடியும், நமக்கு எங்கே வெற்றி வாய்ப்பு அதிகம் என்று தீர்மானித்து நாம்தான் சொந்தத் தொழிலிலோ அல்லது ஒரு நிறுவனத்தில் பணிபுரியும் வேலையிலோ சேருவதைப் பற்றித் தீர்மானிக்க வேண்டும்.

'என்றும் பிறருக்கு உழைப்பதைப் பற்றி நினைக்காதவர்கள்' என்று யூதர்களைப் பற்றிச் சொல்வார்கள். இக்கட்டுரைத் தொடர் மூலம், பிறருக்கு உழைப்பவர்கள் கீழ் என்றும், சொந்தத் தொழில் செய்பவர்கள் மேல் என்றும் தீர்ப்புக் கூறும் முயற்சியில் யாரும் இறங்கவில்லை. ஒரு சமுதாயம் தொழில் வசதியுடன் பணக்கார நாடாக வேண்டுமானால் எத்தகைய மனோபலம் படைத்த மனிதர்கள்

அங்கே இருக்கவேண்டும். அவர்கள் என்ன முயற்சிகளை மேற்கொள்கிறார்கள் என்பதை விளக்க எழுந்த கட்டுரைத் தொடர் இது.

தொழில் செய்பவர்களுக்கு ஏற்படும்சங்கடங்கள், பிரச்னைகள் ஏராளம். தொழில் பிரச்னைகள் எந்த விதத்தில், எப்போது வரும் என்று கூற முடியாது.

சங்கடம் என்று வரும்போது நாம் எப்படி நடந்து கொண்டு சமாளிக்கிறோம் என்பதுதான் நமது குண நலன்களின் உரைகல். பெரும்பாலான மனிதர்களால் நெருக்கடிகளைச் சமாளிக்க முடிவதில்லை. தொழில் செய்வது என்பது பரீட்சை எழுதுவதுபோல்—பட்டம் பெறுவதுபோல்—ஓர் ஆரம்பம், ஒரு முடிவு என்று வரையறை இல்லாத தொடர் இது. ஓட்டப் பந்தயம் போல வெற்றி தோல்வி என்று எதையும் அறுதி யிட்டுக் கூறமுடியாத நிலை நிலவும் தன்மை கொண்டது தொழில்.

சிக்கல்களையும்,பிரச்னைகளையும் சமாளிக்கும் மனப் பக்குவம் நம்மிடம் இருக்கிறதா என்று தீர்மானிக்க வேண்டும். நாம் பிரச்னைகள் வரும்போது 'இருக்கின்ற நிலைமை'யை நாம் ஏற்றுக்கொள்ள வேண்டும். சில சமயம் ஓரிருநாள் விஷயங்களைத் தங்கப் போடுவதால் நிலைமை மாறியிருக்கும்; அல்லது நமது மனப்போக்கு வேறு விதமாய் மாறியிருக்கும்.

'அடுத்து என்ன செய்யவேண்டும்?' என்று தீர்மானித்துச் செயல்படும்போது பிரச்னைகளின் கனம் குறைகிறது.

சிலசமயம் விஷயங்களைத்தங்கப்போடுவதுநல்லது, சில சமயம் சட்டென்று முடிவெடுத்து நாம் செயல்

பட வேண்டிய நிலைமை நல்லது. எதை, எப்போது செய்யவேண்டும் என்பதை எல்லாம் தனி மனிதனின் அனுபவமும் அறிவும் சமயோசிதமும் காட்டுகின்றன. அதன் மூலம் அவன் உயர்கிறான்.

சில சமயம் விஷயங்கள் நம் கைக்கு அப்பால் போய்விடுகின்றன. அப்போதெல்லாம் ஆண்டவனை நினைத்து ஒரு பிரார்த்தனையைச் சொல்லிவிட்டு நாம் செய்ய வேண்டியதைச் செய்து கொண்டே போக வேண்டும். ''நம்மாலான முயற்சிகளைச் செய்துவிட்டு 'ஆண்டவன் விட்ட வழி!' என்று எடுத்துக் கொள்ளும் போது, எது நல்லதோ அது நிகழ்ந்து என்னை மேலும் ஒரு படி முன்னேற்றியதைக் கண்டிருக்கிறேன்'' என்று கூறுகிறார் ஒரு தொழிலதிபர்.

தொழிலில் நாம் நாணயத்தைக் கடைப்பிடிக்க வேண்டும். நாணயமில்லாத செயல்கள் மூலம் விரைவாகச் சில தற்காலிக நன்மைகளை வேண்டுமானால் பெறலாம். ஆனால், நாம் நிரந்தரமான பொருளை—ஆத்மாவின் புனிதத்தை—இழந்திருப்போம். எத்தகைய தரமுள்ள பொருளை உற்பத்தி செய்கிறோம் என்பதிலிருந்து, எப்படி விற்கிறோம் என்பதுவரை சொல்லிலும்(விளம்பரத்திலும்) செயலிலும் நாணயம் இருக்கவேண்டும். இதனால், சுய மதிப்பும் பொது மக்களின் அபிமானமும் பெருகும்.

தொழில் செய்வது உடனே பணக்காரனாகிவிடும் குறுக்குவழி முயற்சியல்ல; நாட்பட ஏற்படும் வளர்ச்சி இது. பொருளின் தரத்தையும் உங்கள் கம்பெனியையும் உங்கள் நாணயத்தையும் ஊரறிய காலம்பிடிக்கும். தொழில் நிறுவனம் என்பது, நாம் சென்ற பின்பும்

நல்ல பொருளை மக்களுக்கு வழங்கிச் சமுதாயத்தின் அங்கமாக இருக்கும் ஒரு தொடர். அந்தச் சரித்திர மனோபாவத்துடன் செயல்படும்போது, மனிதர்கள் அற்பத்தனங்களிலும் ஏமாற்று வித்தையிலும் திடீர் லாபத்திலும் இறங்குவதில்லை.

தமிழ் இனத்தை, 'பம்பாயிலும் டெல்லியிலும் கல்கத்தாவிலும் சென்று பிறருக்கு உழைக்கும் இனம்' என்று யாரும் அடையாளம் காட்டக் கூடாது. வெளி மாநிலத்தார் தமிழர்களை அவர்களது அறிவுக்காகத் தான் வேலைக்கு அமர்த்துகிறார்கள். தமிழர்கள் காட்டும் நம்பிக்கையையும் நன்றியையும் போற்றித் தான் அவர்களை நம்பிக் காரியங்களை ஒப்படைக் கிறார்கள்.

அப்படி அறிவும் நன்றியும் உள்ள மக்கள் அதைத் தங்களுக்காகவும் உபயோகிக்கும்போதுதான் தனி மனித முன்னேற்றமும் நாட்டு முன்னேற்றமும் ஏற்படும். 'பத்திரம்', 'பாதுகாப்பு' என்று, நம் மன இயக்கங்களை முடக்காமல் நாம் செயல்படும்போது நமது ஆக்க சக்திகள் வெளிப்படுகின்றன; மலர் கின்றன.

செல்வம் தன்மானம் தரும்; வலிமை தரும்; பெருமை தரும். மனிதர்கள் ஒவ்வொரு துறையிலும் தங்கள் தங்கள் திறமையை வெளிப்படுத்தும் போது தான் அந்தக் காலம், சரித்திரத்தின் பொற்காலமாக மிளிர்கிறது. இன்றைய நிலையில் கலையைவிட, காவியத்தைவிட, தொழிலில் நமது ஆக்க சக்தி பொங்கிப் பிரவகிக்க வேண்டிய நேரம். அதில் கவனம் செலுத்துவோம்.

உங்கள் வெற்றிக்கு என் வாழ்த்துக்கள்.

தமிழ் இனத்தால் முடியாத காரியம் எதுவுமே இல்லை. நாம் தென்கோடியிலிருந்து வடகோடி சென்று இமயத்தை வெற்றி கொண்டவர்கள். இது நம் சரித்திரம்.

அந்தச் சரித்திரப் பின்னணியுடன் நாம் சிந்திப்போம்!

தொழில் செய்வோம்!

செல்வம் சேர்ப்போம்!

முற்றும்

